தணிகைமணி

# வ.சு. செங்கல்வராய பிள்ளை

பதிப்பாசிரியர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
முனைவர் ச. சிவகாமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

*தமிழறிஞர் வரிசை - 4*

# தணிகைமணி
# வ.சு. செங்கல்வராய பிள்ளை


பதிப்பாசிரியர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
முனைவர் ச. சிவகாமி






**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**

இரண்டாம் முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA

திங்கள் (தொடர்) ஆய்வுக் கருத்தரங்கம் - தமிழறிஞர் வரிசை - 4
தணிகை மணி வ.சு. செங்கல்வராய பிள்ளை (22-8-2003)


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Taṇikaimaṇi Va. Cu. Ceṅkalvaraya Piḷḷai** |
| Editors | : | Dr. S. Krishnamoorthy<br>Director<br>IITS, Taramani, Chennai - 600 113.<br>Dr. S. Sivakami<br>Associate Professor<br>IITS, Taramani, Chennai - 600 113. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Taramani,<br>II Main Road, Chennai - 600 113.<br>Ph: 22542992 |
| Publication No | : | 494 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 kg TNPL Map litho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | viii +160 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 50/- (Rupees Fifty Only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road,<br>Chennai - 600 004. |
| Subject | : | Biographical & Critical Studies on<br>V.S. Chengalvaraya Pillai |


---

கட்டுரையாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று.

முனைவர் **சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஒல்லும்வகையெல்லாம் தமிழை வளர்ப்பதில் அயராது பாடுபட்டுவருகிறது.வாரக்கருத்தரங்கு,திங்கள் கருத்தரங்கு, ஆண்டுக்கருத்தரங்கு, அறக்கட்டளைக் கருத்தரங்கு போன்ற பல்வேறு கருத்தரங்குகளைத் தொடர்ந்து நடத்தி அக்கருத்தரங்கக் கட்டுரைகளை நூலாக வெளியிட்டுத் தமிழுக்கு வளம் சேர்த்து வருகிறது. தமிழாய்வுக்கு உடனடித் தேவை என்ன என்பதை உணர்ந்து அதைச் செயல்படுத்திவருவதே இதற்குக்காரணமாகும்.

இந்நிறுவனம் தொடக்கக் காலத்திலிருந்து பல்வேறு பொருண்மைகளில் கருத்தரங்குகளை நடத்திவருவதைத் தமிழுலகம் நன்கு அறியும். தமிழுக்கென்று அமைந்த மரபையும் பாரம்பரியத்தையும் எடுத்துக்காட்டும் வகையில் தமிழ் இலக்கியக் கொள்கை என்ற தொடர்கருத்தரங்கை இந்நிறுவனம் நடத்திவந்தது. தமிழர் கலைச் செல்வங்கள் என்ற தலைப்பில் தொடர் கருத்தரங்காகத் தமிழ் மரபினை உணர்த்தும் வகையிலும் கருத்தரங்குகளை நடத்திவந்தது. இவையன்றியும் பல்வேறு இலக்கியப் பொருண்மைகளில் கருத்தரங்கை நடத்திவந்தபெருமை இந்நிறுவனத்திற்கு உண்டு. இந்நிறுவனம் தன் அளவிலும் பிற நிறுவனங்களோடு சேர்ந்தும் இத்தகைய கருத்தரங்குகளை நடத்தித் தமிழாய்வுக்குச் சிறப்புச் சேர்த்து வந்துள்ளது. இக்கருத்தரங்குகளைத் தொடர்ந்து தமிழறிஞர்களை மையப்படுத்திய நிலையில் தொடர்கருத்தரங்கு ஒன்றைத் தொடங்க எண்ணியது. இவ்வகையில் **'தமிழறிஞர் வரிசை'** என்ற பெயரில் தொடர் கருத்தரங்கை நடத்துவதன்மூலம் அறிஞர் பலரின் அரிய தமிழ்த்தொண்டுகளை எல்லாம் இவ்வுலகிற்கு எடுத்துக்காட்ட முடியும் என்ற நிலையில் இத்தகைய தொடர்கருத்தரங்கை நடத்த முடிவு செய்யப்பட்டது.

வரலாறு எழுதப்படாத தமிழறிஞர்களுக்கு ஒரு வரலாற்றை உருவாக்குவதன் மூலம் அத்தமிழறிஞர்களைப் பற்றிய செய்திகள் ஆவணப் படுத்தப்படும். அவ்வாறு ஆவணப்படுத்தப்படுவதால் இத்தமிழறிஞர்கள் இம்மண்ணில் பிறந்த பயனும், இம்மண்ணிற்கும், மொழிக்கும், இனத்திற்கும் ஆற்றிய அரும்பெரும் பணிகளும் பின்வருவோரால் போற்றப்படும் நிலை உருவாகும். இதனால் இத்தமிழறிஞர் வரிசைக்கருத்தரங்கை வாழ்க்கை

வரலாற்றுக் கருத்தரங்காக அமைக்காமல் ஆய்வுக்கருத்தரங்கமாக அமைத்துக்கொள்ள முடிவு எடுக்கப்பட்டது. அவ்வகையில் தமிழுக்கு உழைத்து மறைந்த அறிஞர்கள் பலநூறுபேர் நம்முன் வந்தனர். அவர்கள் அனைவரைப் பற்றியும் இத்தொடர் கருத்தரங்கம் அமையவேண்டும் என்பது எங்கள் அவா. எனவே அனைவரையும் பட்டியலிட்டுப் பகுதி பகுதியாக இத்தொடர் கருத்தரங்கை நடத்த முடிவு செய்யப்பட்டது. அதில் முதல் கட்டமாகப் பதினாறு அறிஞர்கள் தெரிவுசெய்யப்பட்டனர்.

இத்தமிழறிஞர்களின் முதல் பட்டியலைக் கொண்டு தமிழறிஞர்களைப் பற்றிய கருத்தரங்கு நடைபெறும் நாள், கட்டுரை வழங்க வேண்டிய நாள் பற்றிய குறிப்புகளுடன் முதல் அட்டவணை தயார் செய்யப்பட்டது.

இப்பதினாறு தமிழ் அறிஞர்களைப் பற்றியும் கட்டுரைகள் வழங்கத் தமிழகத்தில் உள்ள பல்வேறு கல்லூரிகள், பல்கலைக்கழகங்களில் பணி புரியும் ஆசிரியர்கள் அழைக்கப்பட்டனர்.

ஒரு திங்களுக்கு ஒரு தமிழறிஞர் என ஒருவரைப் பற்றிய கருத்தரங்கில் 5 அல்லது 6 பேர் ஆய்வு செய்யவேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் கட்டுரைகள் கோரப்பட்டன. ஒருவரைப் பற்றிப் பலர் ஆய்வுசெய்து கட்டுரை வழங்குவதால் அவ்வறிஞருடைய பன்முக ஆளுமையை வெளிக்கொணர முடியும். அத் தமிழறிஞர்களின் வாழ்க்கை வரலாறு முதலில் அமையவேண்டும். பதிப்பு, மொழிபெயர்ப்பு, திறனாய்வு போன்ற நிலைகளில் அவ்வறிஞர் பற்றிய ஆய்வுகள் தொடர்ந்து இடம்பெறவேண்டும் என்ற நோக்கில் கட்டுரைகள் பெறப்பட்டன. இக்கருத்தரங்கில் மிகுந்த விருப்பத்துடன் ஆய்வாளர்கள் கட்டுரை வழங்க முன்வந்தமை உண்மையிலேயே எங்களுக்கு வியப்பு அளித்தது. முறையாகத் திட்டமிடப்பட்டுச் செயல்படத் தொடங்கிய **இத்திங்கள் தொடர் ஆய்வுக்கருத்தரங்கு - தமிழறிஞர்வரிசை** புதுப்பொலிவுடன் எண்ணிய வண்ணம் தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. இம்முதல் பட்டியலைத் தொடர்ந்து இரண்டாவது பட்டியல்,மூன்றாவது பட்டியல் எனத் தமிழறிஞர் வரிசை ஆண்டுக் கணக்கில் நடைபெறும் தொடர் கருத்தரங்காக உருவெடுத்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்றைய, நாளைய தலைமுறையினர்க்கும் தமிழ் உலகிற்கும் ஒரு சிறந்த ஆவணமாக அமைய இருக்கும் இத்தமிழறிஞர்வரிசைக் கருத்தரங்கக் கட்டுரைகளைத் தொடர்ந்து நூலாக வெளியிடுவதில் இந்நிறுவனம் பெருமை கொள்கிறது. எப்போதும் ஒரு பணியைத் திட்டமிட்டு எதிர்கால நோக்கில் செயல்படுத்தினால் அத்திட்டம் வெற்றியடைவது உறுதி என்பதற்குச் சான்றாக இத்தமிழறிஞர் வரிசைத் தொடர் கருத்தரங்கு அமையலாம்.

தமிழறிஞர் வரிசையின் நான்காம் கருத்தரங்கு **தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை** அவர்களைப் பற்றிய கருத்தரங்காக அமைகிறது. இக்கருத்தரங்கில் அறுவர் கட்டுரை வழங்கியுள்ளனர். இக்கட்டுரைகள் தமிழறிஞர் வ.சு. செங்கல்வராய பிள்ளையின் வாழ்க்கை வரலாற்றையும், அவர்தம் இலக்கியக் கொடையையும், ஆய்வுத் திறனையும், பகுப்பாய்வுப் புலமையையும், உரைத்திறனையும், திருப்புகழ் உரைநெறியையும் மிகச் சிறப்பாக எடுத்து விளக்குகின்றன. பத்திரப் பதிவுத் துறையில் சார் பதிவாளர் வேலைக்கு விண்ணப்பம் செய்தபோதிலும் அப்பணி கிடைக்காமல் அவ்வலுவலகத்திலேயே சாதாரணப் பணியில் தம்முடைய வாழ்வைத் தொடங்கிய தணிகைமணி அவர்கள் தமிழ் மீது கொண்ட ஆர்வத்தினாலும் புலமை நலத்தாலும் பல அரிய நூல்களைப் படைத்தார். தணிகை நவரத்தின மாலை, வேல்பாட்டு போன்ற இறை வழிபாட்டுப் பாடல்களையும் எழுதினார். அவ்வகையில் 26 நூல்கள் அவர்தம் படைப்புகளாக வெளிவந்துள்ளன.

இவ்வாறாகத் தணிகைமணியின் பல்வேறு சிறப்புகளையும் ஒருங்கிணைத்து ஆய்வு நோக்கில் வெளிப்படுத்தும் நிலையில் **தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை** என்னும் இந்நூல் வெளிவருகிறது. இந்நூல் தமிழ் ஆய்வாளர்க்கும், ஆர்வலர்க்கும் ஓர் அரிய பெட்டகமாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

இத்தொடர் கருத்தரங்கிற்கு ஒருங்கிணைப்பாளராக இருந்து சிறப்புடன் நடைபெற முழு முயற்சியுடன் செயல்பட்ட இலக்கியம் மற்றும் சுவடிப்புல இணைப் பேராசிரியர் முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கு என் நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறேன். இக்கருத்தரங்கு சிறப்புடன் நடைபெற அனைத்து உதவிகளையும் செய்த நல் உள்ளங்களுக்கு நன்றி. இத்தொடர் கருத்தரங்கக் கட்டுரைகள் நூலாக்கம் பெற இசைவளித்த நிறுவனப் பதிப்புக்குழுவினர்க்கு நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வியமைச்சர் திருமிகு செ. செம்மலை** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத்துறைச் **செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப.** அவர்களுக்கும், **சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளிஅச்சுக்கோப்புச் செய்த திருமதி இரா. வெண்ணிலாவிற்கும், அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைன்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் பாராட்டுகள்.

சென்னை

26-05-04

**இயக்குநர்**

## கட்டுரையாளர்

முனைவர் சி. இலட்சுமணன்
அரிய கையெழுத்துச் சுவடித் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முனைவர் கு. கதிரேசன்
விரிவுரையாளர், தமிழ்த் துறை
ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர்.

முனைவர் பு. பாலாஜி
தமிழ் விரிவுரையாளர்
இந்துக் கல்லூரி
பட்டாபிராம், சென்னை.

திரு த. பூமிநாகநாதன்
ஆய்வு உதவியாளர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

முனைவர் அரு. மருததுரை
இணைப் பேராசிரியர்
பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி.

முனைவர் வெ. ஜெயலட்சுமி
இணைப் பேராசிரியர்
அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம்
மதுரைப் பிரிவு.

# உள்ளே


வாழ்க்கை வரலாறு

- சி. இலட்சுமணன் 1

இலக்கியக் கொடை

- வெ. ஜெயலட்சுமி 16

ஒளிநெறிக் கட்டுரைகளின்
பகுப்பாய்வுத் திறன்

- அரு. மருததுரை 36

ஆய்வுத் திறன்

- பு. பாலாஜி 50

திருப்புகழ் உரைநெறி

- கு. கதிரேசன் 70

உரைத்திறன்

- த.. பூமிநாகநாதன் 105

# வாழ்க்கை வரலாறு

**சி. இலட்சுமணன்**

திருப்புகழ்ப் பதிப்பாசிரியர் சிவஞானச் செல்வர் வடக்குப்பட்டு சுப்பிரமணிய பிள்ளையின் இளைய பிள்ளை; தமிழ்ப் பேரறிஞர்; தவத்திரு தணிகைமணி ஐயா; ராவ் பகதூர்; டாக்டர் வ.சு.செ. என்றெல்லாம் போற்றிப் புகழப்படுபவர் தமிழ் மூதறிஞர் வ.சு. செங்கல்வராய பிள்ளை.

"என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் அப்பர் பெருமானின் அருள் வாக்கினைத் தம் வாழ்நாட் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து காட்டியவர். இவர் தள்ளாத வயதிலும் தளர்ந்த உடல்நிலையிலும் அயராத உள்ளம் கொண்டு அரிய பெரிய நூல்களைத் தமிழ்கூறு நல்லுலகிற்குத் தந்தவர். பசி நோக்காமலும் கண் துஞ்சாமலும் கருமமே கண்ணாயிருந்து உழைப்பால் உயர்ந்த உத்தமர். வாழ்நாள் வீழ்நாள் படாத வகையில் வாழ்வியல் கோட்பாடுகளுடன் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவர். இப்பெருமகனாரின் வாழ்வியல் நெறிமுறைகளையும் உழைப்பால் உயர்ந்த நிலைகளையும் சுட்டிக் காட்ட விழைவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## பிறப்பும் பெருமைமிகு பெற்றோரும்

இவர் அன்றைய தென் ஆற்காடு மாவட்டம் மஞ்சக் குப்பத்தில் 1883-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15-ஆம் நாள் பிறந்தார். சுபானு ஆண்டு ஆவணித் திங்கள் 1-ஆம் தேதி புதன்கிழமை கதிரவன் தோன்றிய நாழிகை 38½ மீன ஓரை. பிறப்பு பூராடம் 49.32. வளர்பிறை பன்னிரண்டாம் நாள் 36.43. இவையே இவர்தம் பிறந்தநாள் குறிப்புகளாகும்.

திருப்புகழ்ப் பதிப்பாசிரியரும் சிவஞானச் செல்வருமான வ.த. சுப்பிரமணிய பிள்ளை இவரது மதிப்பிற்குரிய தந்தையாவார். இவருடைய தந்தையார் மஞ்சக் குப்பம் மாவட்ட நீதிமன்றத்தில் தலைமை எழுத்தராக, இவர் பிறந்த ஆண்டில் பணிபுரிந்து வந்தார். இவர் சைவத் தொண்டும் செந்தமிழ்த் தொண்டும் ஆற்றிய சான்றோராவார்.

தணிகைமணியவர்களின் தாயார் தாயாரம்மாள். இவர் இளமையிலேயே சிவபக்தியில் சிறந்து விளங்கினார். வீட்டில் வழிபாடு செய்யப்பட்ட திருத்தணிகேசர் திருவுருவப் படத்துக்குப் பூமாலை

புனைந்தேத்தி வழிபடும் திருப்பணியை வாழ்நாள் முழுவதும் வழுவாது செய்து வந்தார். பல தலபுராண உரைநடை நூல்களையும் தேவாரத் திருப்புகழ் பாடல்களையும் ஆழ்ந்து படித்துப் பிற மாதர்களுக்கும் சுவையோடு எடுத்துக் கூறி வந்தார். இவர் தம்பக்தியின் பயனாய் ஆவேசம் வரப்பெற்று எதிர்கால நிகழ்ச்சிகளை வியக்கத்தக்க நிலையில் எடுத்துரைப்பார். இத்தகைய பண்புநலன் மிக்க தாயாரைக் கண்கண்ட தெய்வமாக நினைத்து ஒழுகி வந்தார் தணிகைமணி.

### பள்ளிக் கல்வியும் கல்லூரிக் கல்வியும்

1888-1891ஆம் ஆண்டுகளில் சேலம் மாவட்டம் நாமக்கல்லில் இவர்தம் தந்தையார் வட்ட நடுவராக இருந்தார். அங்கிருந்த கழகப் பள்ளிக்கூடத்தில் பிள்ளையவர்கள் மூன்றாம் வகுப்பு வரை பயின்றார். 1892ஆம் ஆண்டில் இவருடைய தந்தையார் கும்பகோணம் வட்டநடுவராக மாற்றப்பட்டார். எனவே கும்பகோணத்திலுள்ள பாணாதுறைப் பள்ளியில் நான்காவது வகுப்பில் சேர்க்கப்பட்டார். 1894ஆம் ஆண்டு இவருடைய தந்தையார் திருத்தருப்பூண்டி வட்ட நடுவராக மாற்றப்பட்டார். அவ்வூரில் தகுந்த பள்ளிக்கூடம் இல்லாமையால் திருவாரூரிலுள்ள கழக உயர்நிலைப் பள்ளியில் ஏழாம் வகுப்பில் சேர்க்கப்பட்டார்.

1897ஆம் ஆண்டில் இவர்தம் தமையனார் சண்முகம் பிள்ளை தஞ்சாவூர் செயின்ட் பீட்டர்ஸ் காலேஜில் எப்.ஏ. வகுப்பில் சேர்ந்தார். குடும்பச் சூழலின் காரணமாகத் திருவாரூரில் பத்தாம் வகுப்பில் இருந்த தணிகைமணி தஞ்சையில் செயின்ட் பீட்டர்ஸ் பள்ளியில் பத்தாம் வகுப்பில் சேர்க்கப்பட்டார். இதே ஆண்டில் இவருடைய தந்தையார் திருத்தருப்பூண்டியிலிருந்து மதுரைக்கு மாற்றப்பட்டார். மதுரையிலுள்ள நேடிவ் காலேஜில் இவர் பத்தாம் வகுப்பில் சேர்க்கப்பட்டார். 1897 முதல் 1900 வரை இப்பள்ளிக் கூடத்திலே படித்தார். எப்.ஏ. இரண்டாண்டுக் கல்வியும் மதுரையிலே அமைந்தது. இவரது தந்தையார் அரசு அலுவலராக இருந்து பல ஊர்களுக்கும் மாற்றப்பட்டார். எனவே இவரது பள்ளிப் படிப்பும் பல ஊர்களில் தொடர்ந்தது. இவர்தம் பத்தாம் வகுப்பு கல்வி மட்டும் திருவாரூர், தஞ்சை, மதுரை என்னும் மூன்று ஊர்களிலுள்ள பள்ளிகளில் அமைந்தமை நோக்கத்தக்கதாகும்.

1901 ஆம் ஆண்டில் சென்னையிலுள்ள மில்லர் கல்லூரியில் இவர் பி.ஏ. வகுப்பில் சேர்ந்தார். இக் கல்லூரியில்தான் இவர்தம் தந்தையாரும் தமையனாரும் பயின்று பட்டம் பெற்றுள்ளனர். பி.ஏ. வகுப்பில் தத்துவத்தை முதன்மைப் பாடமாக எடுத்துக் கொண்டார். இதே கல்லூரியில் 1903, 1904 ஆகிய இரண்டு ஆண்டுகளில் எம்.ஏ. தமிழ் பயின்றார்.

## கல்வியில் முதல்நிலையும் பரிசு மழையும்

1892 ஆம் ஆண்டில் நடைபெற்ற அரசு தொடக்கப்பள்ளித் தேர்வில் முதல் வகுப்பில் இவர் தேறினார்.

1896 இல் நாகப்பட்டினத்தில் நடந்த அரசு உயர் தொடக்கப் பள்ளித் தேர்விலும் முதல் வகுப்பில் தேறினார். முதல் வகுப்பில் தேறியதைக் கேட்ட இவர் தந்தையார் மனம் மகிழ்ந்து யாழ்ப்பாணப் பெட்டி ஒன்று பரிசாகக் கொடுத்தார்.

1899ஆம் ஆண்டு நடைபெற்ற மெட்ரிகுலேஷன் தேர்விலும் முதல் வகுப்பில் தேறினார். அதற்குப் பரிசாக 4 நூல்களை இவர் பெற்றார். Macaulay's Essays, Songs of Ancient Rome, History of England, Maculis life and letters.

ஜூனியர் எம்.ஏ. வகுப்பில் முதலாவதாகத் தேறினார். அங்ஙனம் தேறியமை கண்டு Tennyson's Works; Carlyle's French Revolution 3 Vols. என்னும் நூல்களைப் பரிசாகப் பெற்றார். சீனியர் எம்.ஏ. வகுப்பில் நடைபெற்ற தமிழ்த்தேர்வில் முதலாவதாகத் தேறினார். இதற்காக மாதந்தோறும் ரூ. 4½ இரண்டு ஆண்டுகளுக்கு வரக்கூடிய நிலையில் Ramnad Rani Tamil Scholarship கிடைக்கப் பெற்றார்.

பி.ஏ. வகுப்பில் தமிழில் முதலாவதாகத் தேறியதோடு பல்கலைக்கழகத்திலே முதலாவதாக இருந்தமையால் Franklin Gell Gold Medal என்னும் பல்கலைக்கழகத் தங்கப்பதக்கமும்; Sethupathi Gold Medal என்னும் கல்லூரித் தங்கப்பதக்கமும் பரிசாகப் பெற்றார்.

இவை மட்டுமல்லாமல் பி.ஏ. தமிழ்ப் பரிசாக Tara - A Mahratta Tale; இலக்கணக் கொத்து, கம்பராமாயணம், Self helpஆகிய நூல்களையும் பெற்றார்.

1902 ஆம் ஆண்டில் பி.ஏ. படிக்கும் மாணவர்களுக்கு மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வு வைக்கப்பட்டது. இத்தேர்வில் கலந்து கொண்ட தணிகைமணி முதற்பரிசு ரூ.50 பெற்றார். பி.ஏ. வந்ததால் மாதம் ரூ.20 இரண்டு ஆண்டுகளுக்குப் பெறக்கூடிய Ramnad Rani Scholarship கிடைக்கப்பெற்றார்.

எம்.ஏ. தேர்வு நடப்பதற்கு 6 திங்களுக்கு முன் ஆங்கிலத்தில் கட்டுரை ஒன்று எழுதிப் பல்கலைக்கழகத்திற்குக் கொடுக்க வேண்டும். தணிகைமணி History of Tamil Prose Literature என்னும் தலைப்பில் அச்சிட்டு 1904 ஆம் ஆண்டு அனுப்பினார். நடைபெற்ற தேர்வில் முதன்மையாகத் தேறி ரூ.120 உதவித்தொகை பெற்றார்.

இவர் இளமையிலே கல்வியில் சிறந்த நாட்டமுடையவராகத் திகழ்ந்தார் என்பதற்கு இவர்தம் பள்ளிக் கல்வியும் கல்லூரிக் கல்வியும் தக்க சான்றாகும். கல்வியைப் பொறுத்த அளவில் முதல்வகுப்பு முதல், எம்.ஏ. வகுப்பு வரை ஒவ்வொரு வகுப்பிலும் முதன்மையாகத் தேறினார் என்பது இவண் குறிப்பிடத்தக்கதாகும்.

## தமிழ் ஆர்வம் வாய்த்த சூழல்கள்

1897-1900ஆம் ஆண்டுகளில் இவர் மதுரை நேடிவ் காலேஜில் (Madurai Native college) பயின்று வந்தார். அப்போது இவருக்குத் தமிழ் ஆசிரியராக வாய்த்தவர் ராகவையா என்பவராவார். இப் பெருமகனாரிடம்தான் மகா மகோபாத்தியாய உ.வே. சாமிநாத ஐயரவர்கள் எழுத்திலக்கணம் படித்தார்.

1899ஆம் ஆண்டு மே, ஜூன் விடுமுறைக் காலங்களில் இவர்தம் தமையனாரிடம் வெண்பா, கட்டளைக் கலித்துறைப் பாவகைகளின் இலக்கணங்களைப் பயின்றார். கட்டளைக் கலித்துறையின் இலக்கணம் நன்கு அறிந்தவுடன் தம் கைப்பட பாடல் ஒன்றை எழுதிக் காட்டினார்.

**"கண்ணனும் வேதனும் போற்றுமுருகா கவின்மணியே**
**விண்ணவர் கோன்தன் பதம்பெறச் செய்தசெவ் வேலவனே**
**பெண்ணொரு பாகன் அளித்த குமரா பெருநிதியே**
**தண்ணருளே பொழி தேவே தணிகைத் தயாநிதியே!"**

"என் தமையனாரே எனக்குத் தமிழ்க்குரு. அவரே என் தமிழ்க் கண்ணைத் திறந்தவர். அவரால் வெண்பா இலக்கணம் தெரிந்தவுடன் விருத்தப்பாவின் இலக்கணம் எளிதாக விளங்கியது என்பார் தணிகைமணி" (த.வரலாறு ப.12).

இவருக்கு பி.ஏ. வகுப்பில் வாய்த்த முப்பெரும் தமிழ் ஆசிரியர்களும் இவண் குறிப்பிடத் தக்கவராவர். தலைமைத் தமிழ்ப் பண்டிதராக விளங்கியவர் பரிதிமாற் கலைஞர் என்னும் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார், கம்பராமாயணப் பாடல்களை நடத்தியவர் கோபாலாசாரியார், திருக்குறள் பாடல்களைக் கற்பித்தவர் சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள்.

இவர் பயின்ற வகுப்புகளில் எல்லாம் தமிழில் முதன்மையாகத் தேறினார். அதற்காக இவர் பெற்ற பாராட்டும் உதவித் தொகைகளும் பலப்பல. இவையெல்லாம் இவர்தம் தமிழ்ப் புலமைக்குக் கிடைத்த பரிசுகள் என்றே கூறலாம். பிற்காலத்தில்

இவருக்குக் கிடைத்த பட்டமும் பாராட்டும் இவர்தம் தமிழ்த் தொண்டிற்காக என்பதும் இவண் எண்ணிப் பார்க்கத்தக்கதாகும்.

### பணிக்கால வாழ்க்கை

1905 ஆம் ஆண்டு இவர் முதுகலைப் பட்டப் படிப்பை முடித்து விட்டு வேலை தேடத் தொடங்கினார். பத்திரப் பதிவுத் துறையில் சப்-ரிஜிஸ்ட்ரார் வேலைக்கு விண்ணப்பம் செய்தார். அவ்வேலை உடனே கிடைக்கவில்லை. இருப்பினும் 24-5-1905 அன்று பத்திரப் பதிவுத்துறை இலாகாவில் ஆவணத்துறை அலுவலகம் சம்பந்தப்பட்ட மாத பரிசீலனை செய்யும் வேலை கிடைத்தது. இவருக்குக் கிடைத்த மாத ஊதியம் ரூ.25. இரண்டு மாதங் கழித்து இவருக்குப் பத்திரங்களை ஒழுங்கு படுத்தும் பணி கொடுத்தனர். 1906 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 17 ஆம் தேதி அன்று 30 ரூபாய் ஊதியத்தில் உறுதியளிக்கப்பட்ட எழுத்தராக நியமிக்கப்பட்டார். நவம்பர் மாதத்திலிருந்து ஆவணக் காப்பாளராகப் பணிசெய்யத் தொடங்கினார்.

கல்லூரிப் பாடப்புத்தகங்களைப் படிப்பதற்குக் காலத்தைச் செலவிட்டு வந்த பிள்ளையவர்கள் சமய நூல்களைப் படித்து முடிப்பதிலும் ஆர்வம் கொண்டார். முதன்முதலில் தேவாரமும் மெய்கண்ட சாத்திரமும் படிக்கத் தொடங்கினார். அடுத்துத் திருக்கோவையார் என்னும் சைவத் திருமுறையைப் படித்து முடித்தார்.

பிள்ளை அவர்கள் எம்.ஏ. படித்த பொழுது தமிழுடன் மலையாளமும் படித்தார். தமிழிலும் மலையாளத்திலும் புலமைபெற்று விளங்கியதால் காசி மகாத்மியம் என்னும் மலையாள நூலைத் தமிழாக்கம் செய்து, வெளியிட்டார். 1907 ஆம் ஆண்டு அலுவலகத் தொடர்புடைய கணக்குத் தேர்விலும் (Account Test) வெற்றி பெற்றார்.

பணிக்காலத்தில் சமய நூல்களைப் படித்து வந்ததோடு அமையாமல் அலுவலகத் தேர்வுகள் எழுதியும் வந்தார். அவ்வடிப்படையில் 1908 இல் Precis Writing என்று கூறப்படும் அலுவலகத் தேர்வெழுதித் தேர்ச்சி பெற்றார். உண்மை உழைப்பிலும் ஒழிந்த நேரங்களில் தெய்வீக நூல்களைப் படிப்பதிலும் தெளிந்த நீரோடை போன்று இவரது வாழ்க்கை சென்று கொண்டிருந்தது. 1909 ஆம் ஆண்டு கந்தபுராணம், பழநி புராணம் என்னும் இருபெரும் புராணங்களையும் படிக்கத் தொடங்கினார்.

1910 ஆம் ஆண்டில் வானூர் என்னும் இடத்தில் சார்பதிவாளராக (Sub Registrar) நியமிக்கப்பட்டார். ஒரு மாதத்திற்குள் அங்கிருந்து மீண்டும் சென்னைக்கு மாற்றப்பட்டார். இவ்வாண்டு இவரது சம்பளம் ரூ.70 ஆக உயர்த்தப்பட்டது.

1912 ஆம் ஆண்டு தலைமை அதிகாரியுடன் மதுராந்தகம், தருமபுரி ஆகிய இடங்களிலுள்ள அலுவலகங்களுக்குச் சென்று பார்வையிட்டார். அங்கிருந்து சென்னை திரும்பியதும் ரூ.80 ஊதியத்தில் கணக்கராக நியமிக்கப்பட்டார். படிப்படியாகப் பணி உயர்வும் ஊதிய உயர்வும் பெற்று வந்தார்.

இக்காலக்கட்டத்தில் காலையில் திருப்புகழ் முதல் பாகத்தில் சில பாடல்களையும் இரவில் இரண்டாம் பாகத்தில் சில பாடல்களையும் படிப்பதை வழக்கமாக மேற்கொண்டார். இதனோடு அவர்தம் கல்வித்தாகம் தணியவில்லை. எனவே சில தலபுராணங்களையும் படித்து முடிக்க எண்ணம் கொண்டார். இரண்டாண்டுகளில் அவர் படித்து மகிழ்ந்த தலபுராணங்கள் பல. தணிகைப் புராணம், திருவுறந்தைப் புராணம், திருவிளையாடற் புராணம், திருக்குற்றாலப் புராணம் என்பன அவற்றுள் சில.

1914 ஆம் ஆண்டு இவர்தம் தாயார் மேல் சாமிவந்து இம்மாதம் எழுத்தர் வேலை கிடைக்கும் என்று கூறியது. அதே போல் ஒருவார காலத்திற்குள் ரூ. 120 ஊதியத்தில் தலைமை எழுத்தராக நியமிக்கப்பட்டார். 1915 ஆம் ஆண்டு தலைமைச் செயலகத்தில் ரூ. 150 ஊதியம் வரத்தக்க பணி ஒன்றிற்குத் தலைமை அதிகாரி (Inspector General) பரிந்துரை செய்தார்.

1918 ஆம் ஆண்டு அலுவலகத் தொடர்புடைய Civil Judicial Test எனப்படும் தேர்வு எழுதித் தேர்ச்சி பெற்றார். 1920 ஆம் ஆண்டு கந்தரனுபூதி, கந்தரலங்காரம் என்னும் முருகன் புகழ்பரப்பும் நூல்களின் ஆராய்ச்சிகளை விவேகபோதினியில் வெளியிட்டார். இக்காலக் கட்டத்தில் தாயுமானவர் பாடல், சிவராத்திரி புராணம், சிவரகசியம் என்னும் நூல்களைப் படித்து முடித்தார்.

1921 ஆம் ஆண்டு **தணிகை நவரத்தின மாலை** என்னும் நூலை இயற்றினார். 1923 இல் அலுவலகப் பணி காரணமாகத் திருச்சி, மதுரை, தஞ்சாவூர், நாகப்பட்டினம், திருவாரூர் போன்ற இடங்களுக்குச் சென்று வந்தார். பின்னர் அனந்தபூர், பெல்லாரி, கர்நூல் என்னும் இடங்களுக்கும் சென்று வந்தார். இவ்வாண்டு "சேவல் பாட்டு" என்னும் சிறு நூலை இயற்றினார்.

1924 ஆம் ஆண்டு மாவட்ட பதிவாளருக்கு உதவியாளராக நியமிக்கப்பட்டார். அலுவலக உழைப்பும் ஆன்மீக நூல் படிப்புமாகச் சீராகவும் சிறப்பாகவும் இவர்தம் வாழ்க்கை சென்று கொண்டிருந்தது. பல்வேறு பணிகள், பணிப்பயணங்கள் இவற்றினிடையேயும் இவர் நூற்பணிகளும் செய்து வந்தார். கடோரசித்தன் கதையை மொழிபெயர்த்தும் வெளியிட்டார். History of the Tamil Prose Literature என்னும் ஆங்கில நூலையும் வள்ளிக் கிழவர் வாக்குவாதம் என்னும் நூலையும் எழுதி வெளியிட்டார்.

1929 ஆம் ஆண்டு மாவட்டப் பதிவாளராகப் பாளையங் கோட்டைக்கு மாற்றப்பட்டார். இக்காலத்தில் “வேல் பாட்டு” என்னும் சிறு நூலை இயற்றினார். 1931 ஆம் ஆண்டு சென்னை ஆவணப் பதிவுத்துறை அலுவலகத்தில் ஆய்வாளராகப் பொறுப்பேற்றார். இவரது ஊதியம் உயர்ந்தது. ஆய்வாளர் என்னும் பதவி சிறிது நாட்களுக்குள் நீக்கப்பட்டுவிட்டதால் தலைமை அதிகாரியின் நேர்முக உதவியாளராக இவர் (Personal Asst. to the I.G. of Registration) நியமிக்கப்பட்டார்.

ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட காலஅளவுதான் பணி செய்ய வேண்டும் என்று இவர் கருதவில்லை. அலுவலக வேலைகளை உடனுக்குடன் முடிக்க வேண்டும் என்னும் கடமை உணர்வோடு இரவு பகல் பாராமல் உழைத்து வந்தார். பல ஆண்டுகளாக அயரா உள்ளத்துடனும் தளரா ஊக்கத்துடனும் உழைத்து வந்த பிள்ளை அலுவலகப் பணியினின்று 14.8.1938 அன்று ஓய்வு பெற்றார்.

## குடும்ப வாழ்க்கை

1907 ஆம் ஆண்டு திருத்தணி சந்நிதியில் இவருக்கும் தனுக்கோடி (சிற்பி) என்னும் அம்மையாருக்கும் திருமணம் நடந்தது. 1922 ஆம் ஆண்டு இவருடைய அன்புத் தாயாரும் மனைவி சிற்பியும் உடல்நலம் குன்றிப் பல நாட்கள் வருந்தினர். இறுதியில் இவருடைய மனைவி மே மாதம் இறைவனடி சேர்ந்தார்.

உற்றார் உறவினர்களின் முயற்சியால் 1922 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இவருக்கும் ஆரணங்கு அம்மையாருக்கும் இரண்டாவது திருமணம் நடந்தது. 1925 ஆம் ஆண்டு இவர்தம் இல்லற வாழ்வின் பயனாய்ப் பெண்குழந்தை பிறந்தது. பிஞ்சுக் குழந்தையோடு கொஞ்சி விளையாடி ஞானசக்தி என்னும்

பெயரிட்டு மனம் மகிழ்ந்திருந்தனர். இம்மகிழ்ச்சி கலந்த வாழ்வு நீடிக்கவில்லை. ஆரணங்கு அம்மையார் சிலநாட்களாக நோயுற்றிருந்தார். எவ்வளவோ மருத்துவர்கள் சிகிச்சை அளித்தும் பயனின்றி அன்புச் செல்வி ஞானசக்தியையும் அன்பு இறை கணவனையும் மீளாத் துயரில் ஆழ்த்திவிட்டு இறைவனடி சேர்ந்தார்.

இவர்தம் குடும்பநலன் கருதித் தமையனார் 3ஆம் திருமணம் செய்து கொள்ளுமாறு இவரை வற்புறுத்தினார். அவர்தம் வற்புறுத்தலுக் கிணங்கி 1930 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் சாரதா என்னும் அம்மையாரை மூன்றாம் தாரமாகத் திருமணம் செய்து கொண்டார். இம்மனைவியுடன் பல தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டார். 1934 ஆம் ஆண்டு ஞானபூரணி என்னும் பெண் மகவொன்றுக்குத் தந்தையானர். இல்லற வாழ்வு இனிதே நடந்தது. சமய நூற்பணிகளும் சிறப்பாக நடந்து வந்தன.

1939 ஆம் ஆண்டு இவர்தம் குடும்பத்துடன் திருத்தணிகை சென்று தினமும் திருத்தணிகேசரை வழிபட்டு வந்தார். இவ்வாண்டு இவருடைய இரண்டாவது மகள் சசிவல்லி பிறந்தார். கல்விப் பணியால் காலங்கள் உருண்டன. திருமுருகன் திருவருளால் குலம் தழைக்கத் தந்த தணிகை நாயகன் என்னும் ஆண்குழந்தையும் பிறந்தது. இங்ஙனம் இரண்டு பெண் குழந்தைகளுடனும் தணிகை நாயகனுடனும் இனிதே வாழ்ந்து வந்தனர்.

## ஓய்வுக்கால வாழ்க்கை

கால நேரம் கருதாமல் கருமமே கண்ணாய் இருந்து கடமை உணர்வோடு அலுவலகப் பணிகளை உடனுக்குடன் முடித்து வந்தார். இரவு பகல் பாராமல் உழைத்து வந்த இவருக்கு அலுவலகப் பணியிலிருந்து ஓய்வு பெற வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. ஓய்வு பெற்று சைவ சமய நூல் ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்னும் ஆர்வமும் பிறந்தது. இவ் ஆர்வமே ஓய்வுக்குப் பின் மலர்ந்து மணம் வீசி மரமாகத் தழைத்துச் செழித்தது. பத்திரப் பதிவுத் துறையிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு இவர்தம் வாழ்வு மறுமலர்ச்சி பெற்றதென்றால் அது மிகையன்று.

ஓய்வுக்கால வாழ்க்கையில் இவர்தம் உயரிய ஒழுக்கச் சிறப்பு இவண் சுட்டத்தக்கதாகும். காலையில் எழுந்து திருநீறணிந்து பூசை அறையில் திருமுருகாற்றுப்படை பாராயணம் செய்வார். இறைவனைத் தொழுத பின்னர் ஆராய்ச்சி வேலைகளைத் தொடங்குவார். காலை 10 மணிவரை அவ்வேலையில் ஈடுபடுவார்.

நீராடி, அனுட்டானம், கந்தர் கலிவெண்பாப் பாராயணம், தணிகேசரைக் குறித்த தியானம் முதலியவை செய்வார். பின்னர்த் தணிகேசருக்கு அபிடேக ஆராதனை செய்து திருப்புகழைச் சொல்லி கந்தரலங்காரப் பாடலைக் கூறி உணவருந்துவார். சில மணி நேர ஒய்வுக்குப் பின் மறுபடியும் ஆராய்ச்சி வேலையில் ஈடுபடுவார்.

மாலை அனுட்டானம் முடித்துத் திருமுருகாற்றுப்படை முதலான நூல்களைப் பாராயணஞ் செய்வதுண்டு. பின்னர் உணவருந்தி "மாவடு வகிரன்ன கன்னி பங்கா" என்ற திருவாசகத்தைச் சொல்லிக் கொண்டு உறங்கச் செல்வார்.

1939 ஆம் ஆண்டு சைவத் திருமுறைகளுள் முதலிடம் பெறும் திருஞான சம்பந்தரின் தேவாரப் பாடல்களின் ஆராய்ச்சியைத் தொடங்கினார். 1940 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் சம்பந்தர் தேவார ஆராய்ச்சியை எழுதி முடித்தார்.

1941 ஆம் ஆண்டு தமது குருவாகக் கருதிய வள்ளிமலை சுவாமிகள் மேல் "**சச்சிதானந்த கலிவெண்பா**" பாடினார். 1943 ஆம் ஆண்டு பழனியில் கூடிய திருப்புகழ் மாநாட்டில் பேசினார். "**திருப்புகழில் கண்ட சில குறிப்புகள்**" என்னும் தலைப்பில் சொற்பொழிவாற்றினார். 1943 ஆம் ஆண்டு "**தணிகை நாயகன் மாலை**" என்ற பாமாலையும், **தணிகை முப்பூ** என்னும் நூலையும் பாடியுள்ளார்.

1944 ஆம் ஆண்டு பல இடங்களில் முருகன் திருநாமம், அருணகிரிநாதரும் திருமூல நாயனாரும், முருகரும் தமிழும் போன்ற தலைப்புகளில் சொற்பொழிவாற்றினார். திரு விரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழுக்கு அரும்பத விளக்கமும் **தணிகை வரலாறும் கார்த்திகை வண்ணமும்** எழுதினார்.

ஒவ்வோர் ஆண்டும் சனவரி முதல் தேதியிலும் தாம் பிறந்த நாளன்றும் திருத்தணிக்குச் சென்று வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். நிலையான பணியொன்று செய்ய வேண்டும் என்னும் அடிப்படையில் சைவத் திருமுறைகளுக்குச் சொல்லகராதியும் அவற்றிற்கான கட்டுரைகளையும் எழுதத் தலைப்பட்டார்.

"அலைபோல் உலகில் மனிதர்கள் தோன்றி மறை கின்றார்கள். அவ் அலையில் நானும் ஒருவனே. எனினும் தணிகேசர் அருளால் இந்த அலை ஒரு முத்தேனும் பூமியென்னும் கரையில் சொரிய வேண்டும். அம்முத்து தணிகேசருக்கு உரியதாக வேண்டும். அம்முத்தே தேவார ஒளிநெறியும் அதன் கட்டுரையும்" எனத் தமது நாட்குறிப்பில் பிள்ளை அவர்களே எழுதியுள்ளார்.

1946 ஆம் ஆண்டு விளத்தொட்டிப் புராணம், மயூர புராணம் ஆகிய புராண நூல்களைப் படித்து முடித்தார். **அருணகிரி நாதர் வரலாறும் ஆராய்ச்சியும்** என்னும் நூலை எழுதி முடித்தார். இவ்வாண்டு **சம்பந்தர் தேவார ஒளிநெறி** என்னும் நூல் வெளிவந்தது. 1949 ஆம் ஆண்டு அப்பர் தேவாரம் என்னும் **4 ஆம் திருமுறை ஆராய்ச்சியை** எழுதி முடித்தார். நால்வர் பிள்ளைத்தமிழில் **சம்பந்தர் பிள்ளைத்தமிழ்** என்னும் பகுதியை இவர் பாடி முடித்தார்.

பல்வேறு பணிகளுக்கிடையேயும் வள்ளிமலை சுவாமிகளின் விருப்பத்திற்கிணங்கி **வள்ளி கல்யாண கும்மி, அறுபத்து மூவர் துதிப்பா** என்னும் நூல்களையும் எழுதினார். திருப்புகழ் பாராயணத் தொகுதியையும் துணைமாலையம்மை பிள்ளைத் தமிழையும் பதிப்பித்தார்.

1951 ஆம் ஆண்டு திருப்புகழ்ப் பாடல்களுக்கு உரை எழுதத் தொடங்கி 1954 ஆம் ஆண்டு எழுதி முடித்தார். ஓராண்டிற்குள் (1958-1959) சுந்தரர் ஆராய்ச்சியை எழுதி முடித்தார். 1962 ஆம் ஆண்டு தமது சொந்த வருவாயில் கட்டிய வீட்டில் குடியேறினார். 1963 ஆம்ஆண்டு அண்ணாமலைபுரத்தில் வீடு வாங்கி "சிவாலயா" எனப்பெயரிட்டு அவ்வீட்டில் குடியேறினார்.

1963 ஆம் ஆண்டு **திருவாசக ஆராய்ச்சியைச்** செய்து முடித்தார். 1970 ஆம் ஆண்டு **திருக்கோவையார் ஆராய்ச்சியைச்** செய்து முடித்தார். தேவாரத்தில் ஆராய்ச்சிப் பணிகளைத் தொடங்கிய பிள்ளையவர்கள் 1971 ஆம் ஆண்டு **திருவிசைப்பாவில்** தமது ஆராய்ச்சிப் பணிகளை முடித்துக் கொண்டார்.

## வாழ்க்கையின் இறுதிக் காலம்

உடல்நலம் குன்றிய நிலையில் ஆய்வுப் பணிகளை மேற்கொண்டு செய்ய இவர் முயற்சி செய்யவில்லை. தம்முடைய முழுநேரத்தையும் இறைவழிபாட்டிற்கே செலவழித்து வந்தார். இனிமேல் நீண்டநாட்கள் தாம் உயிர்வாழத் தேவையில்லை என்னும் எண்ணம் கொண்டார்.

1971ஆம் ஆண்டு சூலை மாதம் 26ஆம் நாள் பகல் உணவருந்திய பின் கைகழுவச் சென்றபோது வழுக்கி விழுந்து விட்டார். காலில் உட்காயம் ஏற்பட்டு எழுந்து நடக்க இயலாது இன்னலுற்றார். மருத்துவ சிகிச்சையினாலும் திருமுருகன் திருவருளாலும் கால்வலி மறைந்து உடல்நலம் தேறி வந்தது. ஆகஸ்டு மாதம் 15ஆம் நாள் இவர்தம் 89ஆவது பிறந்தநாளாகும். அன்று நண்பர் பலரும் பார்த்து நலம் உசாவி

ஆசியுரை பெற்றுச் சென்றனர். ஆகஸ்ட் மாதம் 25ஆம் தேதி காலையிலிருந்து அவர் உடல்நலம் கவலைக்கிடமாய் இருந்தது. அன்று மாலை 4.45 மணியளவில் உற்றார் உறவினரையும் அன்புசால் நண்பர்களையும் ஆறாத் துயரில் ஆழ்த்திவிட்டுத் திருமுருகன் திருவடியைச் சேர்ந்தார்.

## பட்டமும் பாராட்டும்

பள்ளிக்கல்வி முதல் கல்லூரிக் கல்வி வரை முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றுப் பாராட்டும் பரிசுகளும் பல பெற்றுள்ளார். இவை மட்டுமல்லாமல் தமிழ்த் தேர்வுகளில் முதன்மை பெற்றுப் பல்வேறு உதவித் தொகைகளும் பதக்கங்களும் பெற்றுள்ளார். இத்தனைக்கும் மேலாக ஜூனியர் எம்.ஏ. படித்துக் கொண்டிருந்தபொழுது 1899ஆம் ஆண்டு மதுரை மாவட்டத் தலைவர் பார்ட்ரிட்ஜ் என்பவர் கட்டுரைப் போட்டி நடத்தினார். வெளிநாட்டுப் பயணத்தால் வரும் நன்மைகள் (Benefits of Foreign Travel) என்னும் தலைப்பில் கட்டுரை எழுதி முதலாவதாக வருவோர்க்கு ரூ.15 பெறுமான கைக்கடியாரம் கொடுக்கப்படும் என்று அறிவித்திருந்தார். பிள்ளையவர்கள் கட்டுரைப் போட்டியில் முதலாவதாக வந்து கடியாரப் பரிசைத் துரையிடம் பெற்றமை சுட்டத்தக்கதாகும்.

1902 ஆம் ஆண்டின் முடிவில் இவர் பி.ஏ. படித்துக் கொண்டிருந்தார். மதுரைத் தமிழ்ச் சங்கம் பி.ஏ. படிக்கும் மாணவர்களுக்கு நடத்திய தேர்வில் முதலாவதாகத் தேறி முதற்பரிசு ரூ.50 பெற்றமை இவண் குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறு பள்ளி, கல்லூரி வாழ்க்கையில் பாராட்டும் பரிசுகளும் பெற்று வந்ததோடு அமையாமல் இவர்தம் அலுவலகப் பணிகளைப் பாராட்டி 1935ஆம் ஆண்டு ஜூன் மாதம் 3ஆம் தேதி ராவ் சாகிப் (**Rao Sahib**) என்னும் பட்டம் கிடைக்கப் பெற்றது. பணிக்காலத்தில் பெற்ற பட்டங்களை விட பணிஓய்வுக் காலத்தில் அதிகம் பெற்றார். 1943ஆம் ஆண்டு பழனியில் கூடிய திருப்புகழ் மாநாட்டில் சூரியனார் கோவில் ஆதீனத்தலைவர் தவத்திரு மீனாட்சி சுந்தர தேசிகர் "தணிகை மணி" என்னும் பட்டத்தைச் சூட்டி மகிழ்ந்தார்.

1938ஆம் ஆண்டு இவர்தம் அலுவலகப் பணிகளை மேலும் பாராட்டி "இராவ் பகதூர்" பட்டம் வழங்கப்பட்டது.

இவர்தம் ஆராய்ச்சிப் பணிகளைப் பாராட்டும் வகையில் மதுரைப் பல்கலைக்கழகம் இவருக்கு டாக்டர் பட்டம் வழங்க முடிவு

செய்தது. ஒரு பல்கலைக்கழகத்தால் மட்டுமே செய்யக்கூடிய தமிழ்ப் பணிகளைத் தனிமனிதர் நிலையில் இவர் செய்துள்ளார் என்பதை நினைவு கூர்ந்து 1969 ஆம் ஆண்டு செப்டம்பர் 1ஆம் தேதி அன்றைய துணைவேந்தர் தெ.பொ.மீனாட்சி சுந்தரனாரின் பரிந்துரையில் தமிழக ஆளுநர் சர்தார் உச்சல்சிங் அவர்கள் பிள்ளை அவர்களுக்கு டாக்டர் பட்டம் (D. Litt) வழங்கிச் சிறப்பித்தார்.

### உ.வே.சாமிநாதையருடன் தணிகைமணி

1910ஆம் ஆண்டு பிள்ளை அவர்கள் சென்னையில் பணியாற்றிக் கொண்டிருந்தார். அப்பொழுது ஒருநாள் சிதம்பரத்திற்குச் சென்று "அருணகிரி நாதர் வரலாறு" என்னும் தலைப்பில் சொற்பொழிவாற்றினார். இவர்தம் பேச்சைக் கேட்ட டாக்டர் உ.வே.சாமிநாத ஐயர் இவரைப் பாராட்டிப் பேசிய நிகழ்வு குறிப்பிடத் தக்கதாகும்.

ஒருநாள் உ.வே.சா. பிள்ளை அவர்களின் இல்லத்திற்கு வருகை தந்தார். இந்நிகழ்வை; நமது வீடு புண்ணியம் பண்ணிற்று என்றும் "தமிழ்த் தொண்டுக்காக ரூபாய் 50 அவருக்குக் கொடுத்தோம்" என்றும் தமது நாட்குறிப்பில் குறித்து வைத்துள்ளமை இவண் குறிப்பிடத்தக்கதாகும்.

ஒவ்வோர் ஆண்டும் பிள்ளை அவர்கள் உ.வே.சா. ஐயரைப் பார்த்துப் பேசி மகிழ்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். 1942ஆம் ஆண்டு சனவரி மாதம் ஐயர் அவர்களது இல்லத்திற்கு இவர் சென்றார். அங்குத் தமிழ்த்தாத்தா என்று அன்போடு அனைவராலும் கூறப்படும் உ.வே.சா. நோயுற்று படுக்கையில் இருந்தார். பிள்ளையவர்கள் அவர் அருகில் சென்று நின்றார். ஐயர் அவர்கள் மகிழ்ச்சியோடு திருப்புகழ் ஆராய்ச்சி செய்த கைகளாயிற்றே என்று பிள்ளையவர்களின் இருகைகளையும் தம் கண்களில் ஒத்திக் கொண்டார்.

உடனே உள்ள நெகிழ்ச்சியோடு கண்களில் நீர்மல்க ஐயரவர்களின் திருவடிகளைப் பற்றிக்கொண்டு சங்கத் தமிழ் நூல்களைத் தேடி அலைந்த கால்களாயிற்றே என்று கூறி பிள்ளை அவர்களை வணங்கி நின்றார். தமிழ்மேல் பிள்ளையவர்கள் கொண்ட பேரன்பிற்குரிய சான்றுகளில் இதுவும் ஒன்றாகும்.

### தந்தையும் மகனும்

நூலால் உரையும் உரையால் நூலும் பெருமை பெற்றாற்போல் திருப்புகழ்ப் பதிப்பாசிரியர் என்னும் நிலையில் தந்தை வ.த. சுப்பிரமணிய பிள்ளையும் திருப்புகழ் முதலான பன்னிரு

திருமுறைகளின் உரையால் அவர்தம் மகன் வ.சு. செங்கல்வராய பிள்ளையும் பெருமை பெற்றனர். இவ்விருவருமே தாம் பெற்ற பெருமையால் தமிழ்த்தாயின் தவப்புதல்வர்களாய் இன்றும் எல்லோராலும் போற்றப்படுகின்றனர்.

தந்தையைப் போல் பிள்ளை அவர்களின் வாழ்க்கையும் பல ஊர்களில் அமைந்தது. தந்தையைப் போல் பிள்ளையவர்களும் நாட்குறிப்பு எழுதும் பழக்கமுடையவராவர். இவர்தம் தந்தையார் திருப்புகழ் மட்டுமல்லாமல் வேறுபல நூல்களைப் பதிப்பித்த சிறந்த பதிப்பாசிரியராவார். இவர் தம் வாழ்நாளில் 200க்கும் மேற்பட்ட திருத்தலங்களைத் தரிசித்துள்ளார். இவர் தமிழிலுள்ள தலபுராணங்கள் பலவற்றையும் ஆழ்ந்து படித்துள்ளார். இருவருமே வாழ்க்கையில் நன்னெறிகளைக் கடைப்பிடித்துக் கரையேறிய பெரியோர்களாவர். வ.சு..செ. பிள்ளை மிகவும் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தவர் என்பதை இவர்தம் தந்தையார் வாழ்க்கை வரலாற்றினைப் படிப்போர் உணரலாம். இருவருமே வாழ்க்கையில் உழைப்பால் உயர்ந்தவர்கள். உயர்ந்த உள்ளம் படைத்தவர்கள். சைவ சமயப் பற்றுடையவர்கள். தமிழ் ஆர்வமும் புலமையும் உடையவர்கள். வாழ்வில் உய்யும் வழி அறிய விரும்பும் ஒவ்வொருவரும் இவ்விருவர் வாழ்க்கை வரலாறுகளையும் படிக்க வேண்டும். இவற்றைப் படிப்போர் முயற்சி திருவினையாக்கும்; கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்னும் ஆன்றோர் வாக்கின் உண்மையை உணர்வர் என்பதில் ஐயமில்லை.

## சிந்தனைக்குச் சில துளிகள்

1883இல் பிறந்து 1971இல் மறைந்த தவத்திரு தணிகைமணி ஏறத்தாழ 88 ஆண்டுகள் இத் தமிழ்கூறு நல்லுலகில் வாழ்ந்துள்ளார். இவர்தம் வாழ்க்கை வரலாறு இளமைக் காலம், பணிக்காலம், ஓய்வுக்காலம் என்னும் முப்பெரும் பிரிவுக்குள் விரிந்து கிடக்கின்றது. இளமைக்கால வாழ்க்கை பள்ளி மற்றும் கல்லூரிகளில் கல்விக்காகச் செலவழிந்து விடுகிறது. இவர் 33 ஆண்டுகள் அலுவலகப் பணியாற்றியுள்ளார். அலுவலகப் பணியோடு பணியிடைக் கல்விபோல சமய நூல்களை ஆழ்ந்து பயின்றும் வந்துள்ளார். அதனோடும் அமையாமல் நூற் படைப்பிலும் வெளியிடுவதிலும் கருத்தூன்றி வந்துள்ளார். அவ்வப்போது அலுவலகத் தேர்வுகளையும் எழுதி அவற்றிலும் வெற்றி பெற்றுள்ளார். தொடக்கக் காலத்தில் ரூ. 25 ஊதியம் பெற்றுவந்த இவர் பணிஓய்வு பெறும் காலத்தில் ரூ. 600 பெறுகின்ற அளவுக்குத் தம் நிலையைப் படிப்படியாக உயர்த்தி வந்துள்ளார்.

பணிக்காலத்தில் பல தலங்களுக்குச் சென்று தரிசிப்பதையும் வழக்கமாகக் கொண்டுள்ளார்.

பணி ஒய்வுக்குப் பின்னர் ஏறத்தாழ 33 ஆண்டுகள் ஆராய்ச்சிப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். பிறிதொரு நிலையில் கூறுவதாயின் 33 ஆண்டுகள் அலுவல் பணியும் 33 ஆண்டுகள் கல்விப் பணியும் ஆற்றியுள்ளார். இவ்விரு நிலைகளும் பாராட்டப் பெற்றுப் பட்டமும் பெற்றுள்ளார். அலுவல் பணி பாராட்டப் பெற்று "ராவ்பகதூர்" பட்டமும் கல்விப் பணி பாராட்டப் பெற்று டி.லிட் பட்டமும் பெற்றுள்ளமை இவண் சுட்டத்தக்கதாகும். ஓய்வுக்கால வாழ்க்கையில் இவர் தம் இலக்கியப் பணியினின்று ஓய்வு பெற்றாரேயன்றி ஆராய்ச்சிப் பணிகளினின்று இவர் ஓய்வு பெறவில்லை.

33 ஆண்டுகள் சிவத்தொண்டும் தமிழ்த் தொண்டும் ஆற்றியுள்ளார். இவர்தம் ஆராய்ச்சிப் பணிகள் ஒவ்வொன்றும் சிறந்த தமிழ்த் தொண்டாகவே இன்றும் போற்றப்படுகின்றன. கல்வியாளர் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டிய நன்னெறிகள் பலவற்றை இவர்தம் வாழ்க்கை வரலாற்றில் காணலாம். காலத்தைப் பயனுள்ள வழியில் செலவழிக்க முற்படுவோரும் மன அமைதியோடும் மகிழ்ச்சியோடும் வாழ முற்படுவோரும் பிள்ளை அவர்களின் வாழ்வியல் நெறிமுறைகளை முன்னோடியாகக் கொள்ளலாம்.

முதன் முதலாகத் தமிழ் உரை நடையைப் பற்றி ஆங்கிலத்தில் நூல் எழுதிய பெருமை பிள்ளை அவர்களுக்கு உண்டு. தமிழ்மேல் தணியாத தாகமும் இவருக்குண்டு என்பதற்கு இவர்தம் நூலாராய்ச்சிப் பணிகளே தக்க சான்றாகும்.

இவர் மிகச் சிறந்த உரையாசிரியர் மட்டுமல்லர்; பதிப்பாசிரியர். படைப்பாற்றல் மிக்கவர், சொற்பொழிவாளர், மொழி பெயர்ப்பாளர் என்பதற்கும் இவர்தம் பணிநிலைகளே சான்றுபகரும். இவர் உண்மை உழைப்பிலும் ஒழிந்த நேரங்களில் தெய்வீக நூல்களைப் படிப்பதிலும் படைப்பதிலும் காலத்தைச் செலவழித்து வந்த உத்தமர். வாழ்க்கை வரலாற்று நூல்பல எழுதியவர் என்பதும் இவர்தம் வரலாற்றில் நினைவு கூரத்தக்கதாகும். திருமுருகன் பெருமையெலாம் பைந்தமிழில் பாடி மகிழ்ந்த இவருக்கு வாய்த்த சூழல்களும் தணிகேசன் திருவருளும் குறிப்பிடத்தக்கனவாகும். தமது மூச்சிருக்கும்வரை திருமுறையின் ஆராய்ச்சிப் பணிகளை முயன்று செய்தார். பேச்சிருக்கும் வரை திருமுருகன் நாமத்தைத் தினமும் உச்சரித்து வந்தார். இவர்தம்

வாழ்க்கையின் செயன்மைகள் ஒரு அஷ்டவதானியின் செயன்மை போல இருப்பதைக் காணலாம். பள்ளி வாழ்க்கையிலும், கல்லூரி வாழ்க்கையிலும், ஓய்வுக்குப் பின்னரும் பல்வேறு பணிகளைத் திட்டமிட்டு ஓர் ஒழுங்கான முறையில் செய்து வந்துள்ளமை இவர்தம் வாழ்வியல் நெறிமுறைகளுள் குறிப்பிடத்தக்கதாகும்.

இவர் ஆகஸ்ட் மாதம் பிறந்து ஆகஸ்ட் மாதத்திலே இறந்துள்ளார். பணிக்கால வாழ்க்கையும், ஓய்வுக்கால வாழ்க்கையும் ஒவ்வொன்றும் 33 ஆண்டுகள் அமைந்துள்ளன. இவ்வாறு பல கூறுகள் வியப்புறு நிலையில் அமைந்துள்ளன.

தணிகைமணியின் தந்தையார் திருப்புகழை வெளியிட்டு முருகன் அடியார்களுக்கு உதவினார். தணிகைமணி அவர்களோ திருமுருகனுக்குப் பன்னிரு திருமுறைகளைத் தொகுத்துப் பக்திப் பயிர் தழைக்க உதவினார். தந்தையும் தமையரும் திருத்தணிகை முருகப்பெருமானுக்கு வழிவழி ஆள் செய்யும் பெரும்பேறு பெற்றார்கள். தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை அவர்களின் புகழ் தரணி உள்ளவரை நின்று நிலவும். குன்றுதோறாடும் குமரன் அருள்பெற்ற தணிகைமணியின் பண்பும் பணிகளும் குன்றின் மேலிட்ட விளக்காக நமக்கெல்லாம் வழிகாட்டும். சிவ பக்தியால் சிவப்பழமாக விளங்கிச் சிவத்திலே கலந்து விட்ட செங்கல்வராய பிள்ளை அவர்களை நாம் வணங்கி மகிழ்வோம்.

******

# இலக்கியக்கொடை

**வெ. ஜெயலெட்சுமி**

சித்தாந்தக் கலாநிதி செந்தமிழ் மாமதி தணிகைமணி செங்கல்வராயபிள்ளை பல்லாண்டுகள் முயன்று பயபக்தியுடனும் பைந்தமிழ் உணர்வுடனும் படைத்தளித்த நூல்கள் செந்தமிழ்ச் சைவம் பெற்ற சீரிய சொத்துகள் (தமிழ் வளர்த்த நல்லறிஞர்கள், குன்றக்குடி பெரிய பெருமாள், ப.386).

செங்கல்வராயபிள்ளையின் காலம் 15-08-1883 முதல் 25-08-1972 வரையிலானது. அன்றைய காலக்கட்டத்துச் சிறந்த படைப்பிலக்கியவாதியும் திறனாய்வாளருமான செங்கல்வராய பிள்ளையின் படைப்பிலக்கியங்களையும் அவர்தம் திறனாய்வு நூல்களையும் ஆய்விற்கு உட்படுத்துவதாக இவ்வாய்வுக் கட்டுரை அமைகிறது.

1. இறைவனைத் துதித்தல் அல்லது தோத்திரம் செய்தல் என்ற போக்கில் அமையும் இலக்கியங்கள்.

2. நாடகம், கதை, வாழ்க்கை வரலாறு என்ற வகையில் அமையும் இலக்கியங்கள்.

3. தனிப்பாடல்கள்.

4. இறைவனையும் இறையடியார்களையும் அவர்தம் தன்மைகளையும் எடுத்துரைக்கும் இலக்கியங்கள்.

5. திறனாய்வு நூல்கள்.

என்ற ஐந்துவகைப் பகுப்பின் கீழ் ஆய்வாளர் தேடிக் கண்டடைந்த 40 நூல்களையும் அவரது மகள்களான திருமதி ஞானபூரணி (சென்னை), முனைவர் சசிவல்லி (பேராசிரியர் (ஓய்வு) உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை), அவரது உறவினரான திருமதி வி. ஞானாம்பாள் (சென்னை) ஆகியோரிடம் ஆய்வாளர் நிகழ்த்திய நேர்காணல்களையும் அடிப்படையாகக் கொண்டு இக்கட்டுரை அமைக்கப்படுகிறது.

**இறைவனைத் துதித்தல் அல்லது தோத்திரம் செய்தல் என்ற முதல்வகை பகுப்பினுள் அடங்கும் தணிகைமணியின் நூல்கள்:**

1. திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ்
2. தணிகை முப்பூ

    1. தணிகை நாதர் பல்லாண்டு
    2. தணிகைப் பதிகம்
    3. தணிகைத் தசாங்கம்
    4. வடகதிர்காம முருகன் அந்தாதி
    5. தணிகை நவரத்ன மாலை
    6. திருத்தணிகேசர் எம்பாவை
    7. திருத்தணிகேசர் திருப்பள்ளி எழுச்சி
    8. தணிகை நாயகன் மாலை
    9. சிவ பராக்ரம போற்றி அகவல்
    10. வள்ளிக் கல்யாணம் - கும்மிப்பாட்டு
    11. வள்ளி- கிழவர் வாக்குவாதம்
    12. மஞ்ஞைப்பாட்டு
    13. வேல் பாட்டு
    14. சேவல் பாட்டு
    15. தணிகைக் கலி வெண்பா
    16. அன்னைப் பத்து
    17. கோழிக் கொடி
    18. வள்ளித் திருமணத் தத்துவம்
    19. தேவி அநுபூதி
    20. வைஷ்ணவி ஆலய வரலாறு (உரைநடை)
    21. வைஷ்ணவி சந்நிதி முறை
    22. ஸ்ரீ வைணவி எம்பாவை
    23. பராசக்தி திருப்பள்ளி எழுச்சி
    24. வைணவி திருப்பள்ளி எழுச்சி
    25. வைணவி திருப்பல்லாண்டு
    26. அருணகிரி வரலாற்றுத் துதி

மேற்கண்ட 26 நூல்களுள் வைஷ்ணவி ஆலய வரலாறு என்ற ஒரு நூல் உரைநடை வடிவிலும் ஏனைய நூல்கள் செய்யுள் வடிவிலும் அமைந்தவை.

நாடகம், கதை, வாழ்க்கை வரலாறு என்ற வகையில் பின்வரும் நூல்களைக் குறிக்கலாம் :

1. சுந்தர விலாசம் (நாடகம்)
2. காலனைக் கட்டி அடக்கிய கடோரசித்தன் கதை
3. காசி மஹாத்மியம் அல்லது சிம்ஹத்வஜன் கதை
4. திருப்புகழ்ப் பதிப்பாசிரியர் வரலாறு
5. தணிகைமணி டாக்டர் வ.சு. செங்கல்வராய பிள்ளை வரலாறு.

மேற்கண்ட நூல்களுள் சுந்தர விலாசம் செய்யுள் வகையாலும் ஏனைய நூல்கள் உரைநடை வடிவிலும் யாக்கப்பட்டுள்ளன.

**தனிப்பாடல்கள்** என்ற வகையில் பின்வரும் பாடல்களைக் குறித்துக் காட்டலாம்: 1. மாவடு 2. அகப்பொருள் 3. மயிலை 4. முருகனார் இயற்றிய ரமண சந்நிதி முறை மீது 5. ரமண சந்நிதி முறை பற்றி 6. அந்தகன் 7. பிரமன் 8. சலந்திரன் 9. யானை 10. இராவணன் 11. சுறா செட்டியார் கந்தசாமிப்பிள்ளை ஆகியோர் நலம் உசாவினர் நிலை 14. வேண்டுநிலை 15. திருவள்ளுவர் பெருமை 16. மீனாட்சியைக் கனவில் கண்டு பாடியது. 17. வள்ளிமலை சுவாமிகள் மீது பாடியது. 18. போலிக்குறள் 19. புத்தேள் பதினாறு 20. முருகன் கருணை நினைந்து பாடியது 21. காந்தி இறந்த போது பாடியது 22. ரமண மகரிஷி மறைந்தபோது பாடியது 23. திரு.வி.க வைப் பாடியது 24. ஈசன் கருணை நினைந்து பாடியது 25. அங்குலம் அடி கசம் அமையப்பாடியது.

**சிவபெருமானையும் சிவனடியார்களையும் பாராட்டும் இலக்கியங்கள் பின்வருமாறு:**

1. மதுரைச் சொக்கநாதர் அறுபத்து நான்கு திருவிளையாடல்
2. அறுபத்து மூவர் துதிப்பா
    1. துதிப்பா - கருத்து
3. ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்
4. ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரச் சுருக்கம் அநுபந்தம்

**திறனாய்வு நூல்கள்** என்ற ஐந்தாவது வகையில் அடங்கும் நூல்கள் பின்வருமாறு

1. முருகரும் தமிழும்
2. அருணகிரிநாதர் வரலாறும் நூல் ஆராய்ச்சியும்
3. திருக்கோவையார் உரைநடை
4. திருமந்திர ஆராய்ச்சியும் ஒப்புமைப் பகுதியும்

## துதிநூல்கள்

திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ் என்னும் நூல் தணிகைமணியால் 22.01.1935 இல் இயற்றி வெளியிடப்பட்டுள்ளது. இந்நூல் திருத்தணிகை நாதனாகிய முருகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு (குழந்தையாய்ப் பாவித்து) பருவத்துக்கு ஒரு பாடல் வீதம் பத்துப் பாடல்களை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது.

இந்நூலுள் "காப்புப் பருவம்" என்ற நிலையில் அமையும் முதற்பாடல் "திருத்தணிகை முருகா நான் உன்னைப் போற்றும் காரணத்தால் நீயே நின்னைக் காக்கவே" என்று முருகனை வழிபட்டு வேண்டுவதாக உள்ளது. காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்ற பத்துப் பருவங்களை அமைத்து 'ஆண்பாற் பிள்ளைத்தமிழாக' வடிவமைக்கப்பட்டுள்ளது இந்நூல்.

செங்கீரைப் பருவப் பாடலின் எட்டு வரிகளும் இறுதியில் "செங்கோ செங்கீரை" என அமைவதும் தாலப் பருவப் பாடலின் எட்டு வரிகளும் ஈற்றில் தாலேலோ, தாலோ தாலேலோ என அமைவதும் சப்பாணிப் பருவப்பாடலின் 2,4,6,8 ஆம் வரிகள் ஈற்றில் "கொட்டுக சப்பாணி" என அமைவதும் முத்தப் பருவப் பாடலின் எட்டு வரிகளிலும் "முத்தந் தருகவே" என அமைவதும் வருகைப் பருவப் பாடலின் எட்டு வரிகளிலும் "வருகவே, வருக வருகவே" என அமைவதும் குறிப்பிடத்தக்கது.

செங்கல்வராயருக்கு முருகனிடத்துப் பக்தி இருந்தது போன்று முருகன் அடியாராகிய அருணகிரியிடத்தும் பக்தி நிறைந்துள்ளமையை அவர்தம் படைப்பிலக்கியங்கள், திறனாய்வு நூல்கள் ஆகியவற்றின் வழி அறிய முடிகிறது. 'சந்தப்புலவற் கன்புற் றவனே' (பாடல் 4) 'சந்தத் தமிழ் சொல் அருணகிரி தனது படிவ அமைப்பென்ன' (பாடல் 8), 'சந்தத் தமிழ் சொலு மெந்தைக் கொருகுரு' (பாடல் 3) எனப் பல பாடல்களில் அருணகிரியை நினைவு கூர்வதன் வாயிலாகச் செங்கல்வராயபிள்ளை அருணகிரியிடத்துக் கொண்ட அன்பும் ஈடுபாடும் புலப்படுகின்றன.

அருணகிரியாரைக் குறிப்பிடாத பாடல்களில் அருணகிரியின் நூல்களைக் குறிப்பிடும் போக்கும் தணிகைமணியிடம் மிகுந்துள்ளது. "திருப்புகழ், கந்தரந்தாதி" ஆகியவற்றைப் பாடித் துதிக்கும் பொழுது சேர்ப்பது மாலய' என்ற பாடலை ஓதுதற்கு மறந்துவிட்ட நிலையில் முருகப் பெருமானே நீ என் கனவில் ஒரு விப்பிரச் சிறுவனாகத் தோன்றிக் 'கந்தரந்தாதியில் நல்ல எலுமிச்சம் பழமொன்று மறந்தனை' என்று எனக்கு அறிவுறுத்திய செந்தமிழ் நேயனே"

(பாடல் 9) என்று அருணகிரியின் கந்தரந்தாதிப் பாடலை எலுமிச்சம்பழம் என முருகப் பெருமான் விரும்பிப் புகழ்ந்த நிலை பேசப்படுகிறது.

பிள்ளைத்தமிழ் நூலின் பிற பருவப் பாடல்களில் முருகனைக் குழந்தையாக்கித் தம்மைத் தாயாகப் பாவித்துப் பாடும் செங்கல்வராயர் சிற்றில் பருவத்தில் மட்டும் 'இந்தப் படியுனக்கு. . . எந்தப் பொருளும் அமைத்துள்ளோம், எளியேம் சிற்றில் அழியேலே! எழிலார் தணிகைமலையாரே! எளியேம் சிற்றில் அழியேலே!' என்று தம்மைச் சிற்றில் இழைத்து விளையாடும் சிறுவனாக்கி, முருகப் பெருமானைத் தம் சிற்றில் சிதைத்து விளையாடும் சிறுவனாகப் பாவித்துப் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

பிள்ளைத்தமிழ் போன்று அந்தாதி, மாலை, கலிவெண்பா போன்ற இவர்தம் இலக்கியப் படைப்புகளும் முருகன் புகழ் பாடுபவையாக அமைந்துள்ளன. வடகதிர்காம முருகன் அந்தாதி, தணிகை நவரத்னமாலை, தணிகைநாயகன் மாலை, தணிகைக் கலிவெண்பா ஆகியன முறையே வடகதிர் காமத்தில் எழுந்தருளியுள்ள முருகனையும், தணிகை முருகனையும் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு படைக்கப்பட்டன.

வடகதிர்காமத்தில் குடிகொண்டுள்ள முருகனது சிறப்புகளையும் அவன் உறைந்துள்ள வடகதிர்காமத்தையும் அதன் பெருமைகளையும் பேசுவதாக 'முருகன் அந்தாதி' அமைகிறது. இதில் முப்பது பாடல்கள் இடம் பெறுகின்றன.

**"சிற்பர தத்துவ! அப்பர மாக்களுள் சின்மயனே!**
**தற்பர வித்தக! கற்றம னத்தினர் சார்பினனே!**
**அற்பரு ளத்தினில் அற்றவ நற்றவர் அன்பினிலே**
**உற்பவ! தெய்வ வடகதிர் காமநல் உத்தமனே"**
**(வடகதிர் காம முருகன் அந்தாதி, பாடல்-23).**

அருணகிரியார் மீதுள்ள அபிமானத்தின் அடிப்படையில் இப்பாடலில் 'சந்த முயற்சி' நிகழ்ந்துள்ளமை நயமுடையதாக அமைகிறது. ஒருபாடலின் அந்தம் அடுத்த பாடலின் ஆதியாக அமையும்படி முப்பது பாடல்களும் அந்தாதிப் பாடல்களாக யாக்கப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

'தணிகை நவரத்ன மாலை' தணிகை மணி செங்கல்வராயரின் காமாலை நோய் நீங்குவதற்காகப் பாடப்பட்டது என்ற குறிப்புக் கிடைக்கிறது. இம்மாலையில் மொத்தம் ஒன்பது பாடல்களே உள்ளன.

"சொல்லாயோ எனைச் சூழுங்காமாலை நோய்
நில்லா தோடு நெறியிஃ தாமென
நல்லா ரேத்து தணிகை நயந்தமர்
இல்லா கக்கொளு மெந்தை இறைவனே"
(தணிகை நவரத்ன மாலை)

என்ற பாடலின் அகச்சான்று கொண்டும் இப்பாடல் காமாலை நோய் நீங்கப் பாடப்பெற்றமையை உணரலாம்.

'தணிகைநாயகன் மாலை' என்னும் நூல் 15-8-1943 அன்று பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது. "சுபானு வருஷம் ஆவணி பன்னிரண்டில் பூராட நாளில் (15.8.1883) பிறந்த அடியேனுக்கு அறுபது ஆண்டு நிறைவாகின்ற நலம் கருதி. . . அவன் திருவடிகளிலே சமர்ப்பித்த மாலையாகும் இந்நூல்" என்ற செங்கல்வராயபிள்ளையின் முன்னுரை வாயிலாக அவரது அறுபதாம் ஆண்டு நிறைவின் போது இந்நூல் வெளியிடப் பட்டமை புலனாகிறது.

"தேவர் கோன் மகளை ஏற்ற உனது திருவருள் வேடர் மகளையும் ஏற்றதல்லவா? அது போலப் பெருமானே! நக்கீரர், அருணகிரிநாதர் ஆகிய பெருந்தமிழ்ப் புலவர்கள் பாடிய திருப்பாடல்களை ஏற்றருளிய நீ அடியேன் உரைத்த பாடலை ஏற்று அருளே தழைத்து உகந்து வரவேணும்" என்று செங்கல்வராயபிள்ளை முருகனிடத்து விண்ணப்பிக்கும் நிலையில் இந்நூல் அமைகிறது.

108 பாடல்களைக் கொண்ட இம்மாலையின் இறுதியில் ஓலம், அபயம், சரணம், அடைக்கலம், போற்றி, நமோ நம, மங்களம், ஜெயஜெய, வாழ்த்து என்ற தலைப்புகளில் மேலும் ஒன்பது பாடல்கள் அமைகின்றன. நூலின் பிற்பகுதியில் முக்கிய விஷய அகராதி என்ற தலைப்பில் இம்மாலையில் இடம்பெறும் பெயர்கள், ஊர்ப்பெயர், மலை, பிற இலக்கியங்களின் பெயர், மயில், முருகர் போன்ற செய்திகளைத் தொகுத்து அகரவரிசைப்படுத்தி அச்சொற்கள் அல்லது செய்திகள் இடம்பெறும் பாடல் எண்களையும் குறிப்பிடும் பாங்கு நோக்கத்தக்கது.

செங்கல்வராயபிள்ளை இயல்பிலேயே படைப்பாசிரியரும் திறனாய்வாளருமாதலால் அவர்தம் படைப்பிலக்கியங்களிலும் அவர்தம் ஆராய்ச்சி மனப்பான்மை மேலோங்கிக் காணப்படுகிறது. இந்நூலின் 'பொருள் அடக்கத்தில்' தோத்திரம் (1-2), அறுபடை வீடு (3-4), முருகன் பெருமை (5-7), முருகன் வீரம் (8) என்பன போன்று பாடல் செய்திகள் மற்றும் அச்செய்திகள் இடம்பெறும் பாடல் எண்கள் ஆகியன

வகுத்து அமைத்துத் தரப்பட்டுள்ளமை இவர்தம் ஆராய்ச்சிப் போக்கிற்குச் சான்றாக அமைகிறது.

நூலின் இறுதியில் 'குறிப்புரை' ஒன்று இடம்பெறுகிறது. பாடலுள் இடம்பெறும் புராணச் செய்திகள், கதைகள் போன்றன எண் இடப்பட்டு, அந்த எண்ணிற்கான விளக்கம் அளிப்பதாக இக்குறிப்புரை உள்ளது. சான்றாக 6, 19 முருகர் வண்டின் உருவம் கொண்டது கச்சியானந்த ருத்திரேக்ஷர் வண்டு விடு தூது' என்று இடம் பெறும் குறிப்புரை ஒன்றை எடுத்துக்காட்டலாம். இவ்வாறு வெவ்வேறு நூல்களில் இடம்பெறும் ஒத்த குறிப்புகளையும் பாடல்வரிகளையும் எடுத்துச் சொல்வதாகவும் பாடல் வரிகளுக்குப் பொருள் கூறுவதாகவும் இக்குறிப்புரைப் பகுதி அமைக்கப்பட்டுள்ளது. இக்குறிப்புரைக்கு அடுத்ததாக, 'பாட்டு முதற்குறிப்பு அகராதி' ஒன்றும் இடம்பெறுகிறது.

இது போன்று திருத்தணிகை கலிவெண்பாவிலும் பாடல் வரிகளில் எண் இட்டு, அடிக்குறிப்பில் அந்த எண் இடப்பெற்ற செய்தியை விளக்கும் முறை காணப்படுகிறது.

**". . .எனத்துதித்தே**
**நான் மீண்டும் – மண்புகா**
**வண்ணமெனை யாண்டருள்வாய்**
**வள்ளால்! – தணிகேச!**
**எண்ணமிஃதீடேறவே"**
**(திருத்தணிகை கலிவெண்பா ப.27)**

இப்பாடல்வாயிலாகப் 'பிறவாமை' வேண்டும் நெறிபுலப்படுகிறது.

மேற்காட்டியவாறு படைப்பிலக்கியங்களிலும் ஆய்வுநெறி செயல்பட்டமை செங்கல்வராயரின் தனித்தன்மைகளுள் ஒன்றாக விளங்குவது இங்குச் சுட்டிகாட்டத்தக்கது.

தணிகை முப்பூ, தணிகாசலநாதர் பல்லாண்டு, தணிகைப் பதிகம், தணிகைத் தசாங்கம், திருத்தணிகேசர் எம்பாவை, திருத்தணிகேசர் திருப்பள்ளி எழுச்சி, ஸ்ரீவைணவி எம்பாவை, பராசக்தி திருப்பள்ளி எழுச்சி, வைணவிதேவி திருப்பள்ளி எழுச்சி, வைணவி திருப்பல்லாண்டு ஆகிய தோத்திர நூல்கள் தணிகேசர் பால் செங்கல்வராய பிள்ளை கொண்ட பிணைப்பை நயமுடன் புலப்படுத்துகின்றன.

தணிகாசலநாதர் பல்லாண்டு, தணிகைப் பதிகம், தணிகைத் தசாங்கம் ஆகியன பத்துப்பத்துப் பாடல்களைக் கொண்டதாக

அமைந்து 'தணிகை முப்பூ' எனப் பெயர் பெறுகிறது. தக்கராகப் பண்ணில் காம்போதி ராகத்தில் தணிகைப் பதிகம் அமைக்கப்பட்டிருப்பதையும் நேரிசை வெண்பா என்னும் செய்யுள் வடிவமைப்பில் தணிகைத் தசாங்கம் இடம் பெறுவதையும் இவர்தம் செய்யுள் நயத்திற்கும் இசை ஈடுபாட்டிற்கும் சான்றுகளாகக் குறிப்பிட்டுக் காட்டலாம்.

எம்பாவை, பள்ளிஎழுச்சி, பல்லாண்டு என்ற இலக்கியங்களை இயற்றியுள்ள செங்கல்வராயபிள்ளை, அவ்விலக்கிய வகைகளுக்குப் பின்வருமாறு விளக்கமளிக்கிறார்.

'ஏலோ ரெம்பாவாய்'. . . ஏல்- ஏற்றுக் கொள், ஓர் - ஆய்ந்துணர் எம்பாவாய் என ஏலோரெம்பாவாய் என்ற சொல்லுக்குப் பொருள் உணர்த்தும் செங்கல்வராயர், 'ஏல், ஓர் என்பவற்றை அசை என்பாரும் உண்டு' என்றும் குறித்துக் காட்டுகிறார் (வைணவி எம்பாவை ப. 8).

திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களை வடமொழியில் சுப்ரபாதம் என்பர். "..அன்னையின் அருளால் பாடப்பெற்ற பராசக்தி பள்ளி எழுச்சி ஒன்றும் வைணவி தேவிக்கே உரிய பள்ளி எழுச்சி ஒன்றும் இங்கு வெளியிடப்படுகின்றன" எனப் பள்ளியெழுச்சிப் பாடல்களைப் பற்றிப் பேசும் செங்கல்வராயர், 'பல்லாண்டு' என்பது ஆண்டவன் பல்லாண்டுகள் வாழ வேண்டும் என்று வாழ்த்திப்பாடும் பாட்டு வகையைச் சேர்ந்தது. வைஷ்ணவர்கள் வடமொழியில் இதை "மங்களா சாஸனம்" என்பர் எனக் குறிப்பிடுகிறார்.

30 பாடல்க்ளாக அமையும் எம்பாவை வெண்டளையான் வந்த இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பாவால் அமைய, 10 பாடல்களாக அமையும் பராசக்தி பள்ளி எழுச்சி அறுசீரடி ஆசிரிய விருத்தத்தாலும் 10 பாடல்களாக அமையும் வைணவி பள்ளியெழுச்சி எண்சீரடி ஆசிரிய விருத்தத்தாலும் அமைந்து பூபாள ராகம் ஆதி தாளத்தில் பாடப்படுகின்றன. திருப்பல்லாண்டு கட்டளைக் கலித்துறையில் அந்தாதித் தொடை பெற்று மலையமாருதம் ராகம் சுத்தாங்கத்தில் பாடப்படுகிறது. இதுபோன்று திருத்தணிகேசர் எம்பாவை, பள்ளியெழுச்சி ஆகியன முறையே 20 பாடல்களையும் 12 பாடல்களையும் கொண்டனவாக அமைகின்றன.

திருத்தணிகேசர் திருப்பள்ளியெழுச்சி நூலில் பின்வருமாறு ஒரு குறிப்புக் காணப்படுகிறது: "சென்னைச் சிவனடியார் திருக்கூட்டச் சார்பில் ஆண்டு தோறும் ஆனி மகத்தை ஒட்டி

மணிவாசகர் திருநாள் விழா திருமுறை விழாவாக ஆனி மாதத்தில் நான்கு நாட்கள் நடைபெறும். குருகுலம் அதில் ஆண்டு தோறும் கலந்து கொள்கிறது. குருகுலத்திலிருந்து புறப்பட்டுக் காஞ்சி சென்று கழுகுன்றம் சேரும் விழாப் பயணம் மேற்கொள்கின்றது. திருமறை, திருமுறை, திருப்புகழ் விழாக்களை அங்கங்கும் கொண்டாடுகின்றது' (திருத்தணிகேசர் திருப்பள்ளியெழுச்சி, ப.22).

மேற்கொண்ட செய்தியின் வாயிலாகச் சமயப் பெரியார் களுக்கு விழா எடுப்பதைப் பெரிதும் ஈடுபாட்டுடன் மேற்கொண்டு வந்த செங்கல்வராய பிள்ளையின் செயல்பாடுகள் அறியப்படுகின்றன. மேலும் 'குருகுலத்தில் எட்டாம் வகுப்பு வரையில் கல்வியும், நெசவும், தையல் முதலிய தொழில்களும் நற்பண்பும் சிறுவர், சிறுமியர்க்குக் கற்பிக்கப்படுகின்றன. வெளியூர்ப்பிள்ளைகளுக்காகக் குருகுலத்தில் உணவுவிடுதி உள்ளது. அரிசன பிள்ளைகளுக்குக் கட்டணம் இல்லை, மற்றவர்களுக்கு ஓரளவு குறைந்த கட்டணம் உண்டு' (ப.22) என்ற செய்தியின் வாயிலாகக் குருகுலம் அமைத்துக் கல்வி கற்பிப்பதையும் அத்துடன் அவர்களுக்குத் தொழிற்கல்வி கற்பிப்பதையும் ஒரு தொழிலாக அன்றித் தொண்டு உள்ளத்துடன் ஏற்றுச் செயல்பட்டு வந்த ஆசிரியர் தம் எண்ணம் புலப்படுகிறது.

சேவல் பாட்டு, மயில் பாட்டு, வேல் பாட்டு ஆகிய நூல்கள் முருகனின் வாகனம், கொடி, வேல் ஆகியவற்றைப் புகழ்ந்து பாடுவனவாக அமைந்து இருப்பதுடன் குறைந்தவிலையில் அச்சிடப்பட்டுப் பலரும் கையில் கொண்டு இறைவனைத் துதிப்பதற்கு ஏதுவாக வெளியிடப்பட்டு இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

'கொக்கறுகோ' என விடியற்காலை கூவும் சேவல், சூரனாகிய (கொக்கு) மாமரத்தை அறுத்த (அறு) தலைவனை (கோ) எண்ணிக் கூவுவதாகப் பாடியுள்ள செங்கல்வராயரின் இலக்கியப் புலமை எண்ணுதற்குரியது.

எளிய நடையில் அமைந்து உயர்ந்த தத்துவங்களைப் பேசுவனவாக வள்ளிக் கல்யாணம், கும்மிப்பாட்டு, வள்ளி-கிழவர் வாக்குவாதம் ஆகிய நூல்கள் அமைகின்றன.

'குன்றமலைந்தே திரிந்தும் கோழி பிடித்தே திரியும் குறவனை நீ உளம் வரித்தல் பிழை' என்று கூறும் கிழவனிடம், 'குன்றம் வினைக்குன்றம் என்றும் கோழி சிவஞான நிலையென்றும் உண்மை

நாம் உணரின் ஏது பிழை' என வள்ளி மறுமொழி கூறுவதாக அமையும் வாக்குவாதம் இதனைப் புலப்படுத்தும்.

முருகனின் பெருமைகளையும் முருகன் சார்ந்த புராணக்கதை நிகழ்வுகளையும், சிவன் பார்வதி ஆகியோரின் மகனாகிய முருகனின் ஆற்றலையும் நயம் பட எடுத்துரைத்துத் திருத்தணிகை முருகனைப் போற்றிப் புகழ்வதாகவும் வைஷ்ணவி தேவியின் புகழ் பேசுவதாகவும் மேற்குறித்த செங்கல்வராயரின் தோத்திரப் பாடல்கள் என்னும் வகையில் உள்ளடங்கிய 27 நூல்களின் செய்திகள் அமைந்திருப்பது இதன் வழி அறியப்படுகிறது.

## நாடகம், கதை, வாழ்க்கை வரலாறு

செங்கல்வராயரின் சுந்தரவிலாசம் என்ற நாடக நூல் ஒன்றும் கடோர சித்தன் கதை, காசி மகாத்மியம் என்ற கதை நூல்கள் இரண்டும் திருப்புகழ்ப் பதிப்பாசிரியர் வரலாறு, செங்கல்வராயர் பிள்ளை வரலாறு என்ற வாழ்க்கை வரலாற்றுநூல்கள் இரண்டுமாக அவர்தம் ஐந்து நூல்கள் இப்பகுதியில் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

செங்கல்வராய பிள்ளை சிவனைப் பற்றியும், சிவனடியார்கள் குறித்தும் பற்பல நூல்களைப் படைத்துள்ளார். சிவனடியார்களில் குறிப்பாகச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறித்துப் பல நூல்கள் யாத்துள்ளார். அவற்றுள் 'சுந்தரவிலாசம்' என்னும் நாடக நூல் குறிப்பிடத்தக்கது. இந்நூல் சீர் கருணீக குல திலக அந்நிய பூபன் என்பவரால் இயற்றப்பட்டு வ.சு. செங்கல்வராய பிள்ளையால் 1931இல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. 'சுந்தரவிலாசம்' என்னும் நூல் ஓலைச் சுவடியிலிருந்து படிசெய்து செங்கல்வராயரால் வெளியிடப்பட்டது என்று வரலாற்றுக் களஞ்சியம் குறிப்பிடுகிறது. (தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம், பகுதி-II வெ.பழனியப்பன், உ.பழனி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1984, ப.(570))

158 பாடல்கள் கொண்ட இந்நூலில் வெண்பா, திபதை, (இரட்டை கன்னி) விருத்தம், தரு, ஓடத்தரு (ஒருவகை இசைப் பாட்டு) தாடிப்பதம், சம்பை, திருப்புடை, பதம், கட்டளைக் கலித்துறை, குறுந்தாழிசை, அர்த்த சந்திரிகை ஆகிரி, திருப்பங்குலு, ஏலப்பதம் என்னும் யாப்பு வடிவங்கள் பயன்படுத்தப்பட்டுச் சுந்தரரின் வாழ்க்கை வரலாற்றின் நிகழ்ச்சிகள் பேசப்படுகின்றன. இடையிடையே வசனமும் வினா விடை வடிவமும் அமைக்கப்பட்டுள்ளன. இந்நாடகநூலின்

இறுதியில் அநுபந்தமாக நூல் ஆராய்ச்சி இடம்பெறுகிறது. நூலில் வரும் பழமொழிகள், சொல் சாதுரியங்கள், நூலில் இடம்பெறும் சாதாரணமாய் வழங்கும் சொற்கள் ஆகியன செங்கல்வராய பிள்ளையால் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

காலனைக்கட்டி அடக்கிய கடோர சித்தன் கதையும் காசி மஹாத்மியம் என்னும் கதையும் ஒரே நடையில் அமைந்து, மக்களுக்கு நீதிகளை எடுத்துரைப்பனவாக உள்ளன.

கண்ணபுரத்தில் வாழ்ந்து காலனை வென்ற கடோரசித்தனது கதை வாயிலாகச் சொர்க்கம், நரகம் என்பது உண்டென்பதும் அவரவர் செயல்களுக்குத்தக நரகம் அல்லது சொர்க்கம் சேர்வர்; 'பூமியில் இறப்பு' என்ற நிகழ்வு இல்லையாயின் மக்கள் இறைவனை மதிக்கமாட்டார்கள் என்பன நகைச்சுவை உணர்வுடன் சுட்டப்படுகிறது.

'காலன் கட்டி அடக்கப்பட்டது முதல் உலகில் உள்ளோர் ஒரே குதுகலமாய் உள்ளனர். இறத்தல் என்னும் அச்சம் ஒழிந்து ஆலயம் தொழாது சாலவும் வீணே ஒழிந்தனர். . . கடோர சித்தன் இட்டது தான். . யமனுக்கு அஞ்சித்தானா கடவுளை வழிபட்டனர். . பாபம் ஏது? சாவேது? கடவுளேது?. . . என்று மக்கள் வாழ்ந்தனர்' (கடோர சித்தன் கதை ப.6-9) என்ற பகுதியின் வாயிலாகச் செங்கல்வராயபிள்ளையின் நகைச்சுவை உணர்வு வெளிப்படுகிறது.

காலன் கடோரசித்தனின் உயிரைக் கவர்ந்து செல்லும் போது அவன் தன் மனைவியிடம் என் உடலைப் பத்திரமாகப் பாதுகாத்திருந்தால் உனக்கு முத்துமாலையும் நவரத்ன வங்கியும் தருவேன் என்று கூறுவதும் முத்துமாலை மீதிருக்கும் காதல் காரணமாகவேனும் இவள் நமது தேகத்தைப் பாதுகாப்பாள் என்ற திடசித்தத்துடனும் உயிரைவிட்டான் என்று கூறுவதுமாகிய கதைப் பகுதிகள் (ப.13) நகைச்சுவையோடு கூடிய நீதிக்கருத்துகளையும் சமுதாய நடைமுறை யதார்த்தத்தையும் பேசுகின்றன.

நைமி சாரணிய முனிவர்கள் கேட்டுக்கொண்டதற்கேற்பச் சூத முனிவர் காசி நகரச் சிறப்பைச் சொல்வதாக அமையும் 'காசி மகாத்மியமும்' கடோரசித்தன் கதை போன்று நகைச்சுவையுடன் நீதிக் கருத்துகளைப் பேசுகிறது. 'இந்நூல் மலையாள மொழியில் எழுத்தச்சன் எழுதிய சிவபுராணம் என்னும் நூலிலிருந்து எடுத்துத் தமிழில் எழுதப்பட்டது' எனத் தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் (ப.571) குறிப்பிடுகிறது.

முற்பிறவியில் கள்வர் தலைவனாக இருந்து பச்சைக் குழந்தையின் உயிரைக்குடித்த சாபத்தால் பாவமேற்றவனும் வேசியர் குலத்தில் பிறந்த ரத்னமாலிகையும் சாபம் ஏற்று காசி செல்வோர் தானமளித்த சிறு புண்ணியத்தால் இப்பிறவியில் சிம்ஹள தீபம் எனும் தேசத்தை ஆளும் சிம்ஹத்வஜனாகவும் அரசி மந்தாரலஷ்மியாகவும் பிறந்து புண்ணியம் செய்து புத்திர பாக்கியம் பெறுதல் பற்றியது இக்கதை.

முற்பிறப்பு-மறுபிறப்பு, பாவம்-புண்ணியம், சாபம்-விமோசனம், சொர்க்கம்-நரகம், நல்வினை-தீவினை ஆகியன தொடர்பான நீதிகளை எடுத்துரைக்கும் செங்கல்வராய பிள்ளை நரகலோக வர்ணனையாகப் பேய்க்கூட்டத்தைச் சுட்டிக் காட்டி, அக்கதைப்பகுதியில் எண்இட்டு அடிக்குறிப்பில் இப்பேய் வர்ணனைப் பகுதி கலிங்கத்துப்பரணி வர்ணனையைத் தழுவி அமைக்கப்பட்டது என்று கூறி அப்பரணிப் பாடல்களையும் கொடுத்துள்ள நேர்மை பாராட்டுதற்குரியது.

'திருப்புகழ்ப் பதிப்பாசிரியர் வரலாறு' என்னும் வாழ்க்கை வரலாற்று நூல் திருப்புகழைப் பதிப்பித்து அச்சில் வெளிக்கொண்டு வந்தவரான வ.த. சுப்பிரமணிய பிள்ளையின் வாழ்க்கை வரலாறு பற்றியது. அவர் வ.சு. செங்கல்வராயரின் தந்தையாராவார். 'தணிகை மணி டாக்டர் வ.சு. செங்கல்வராய பிள்ளை வரலாறு' என்னும் வாழ்க்கை வரலாற்று நூல், செங்கல்வராயரின் வாழ்க்கை வரலாற்றைப் பேசுவது வ.சு.செ. ஞானபூரணி, வ.சு.செ. சசிவல்லி, வ.சு.செ. தணிகைநாயகன் ஆகியோர் முறையே செங்கல்வராயபிள்ளையின் மகள்களும் மகனுமாவர். இம்மூவரும் மேற்கண்ட நூலின் தொகுப்பாசிரியர்கள் என்ற போதிலும் இந்நூலின் முற்பகுதி அழகரடிகளின் வேண்டு கோட்கிணங்கி இவரே (செங்கல்வராய பிள்ளையே) எழுதிப் போந்த சுயசரிதமாகும். பின்னிருபகுதிகளும் இவரது வாழ்நாள் குறிப்புகளைக் கொண்டு திரட்டப் பெற்றவையாகும் (தணிகைமணி. டாக்டர் வ.சு. செங்கல்வராயபிள்ளை வரலாறு, கழகவெளியீடு, சென்னை, 1972, ப.1) என்ற காரணத்தால் இந்நூலின் முற்பகுதி இவரே எழுதிய சுயசரிதம் என்பதைக் கருத்தில் கொண்டு இந்நூல் இக்கட்டுரையில் செங்கல்வராயரின் இலக்கியக் கொடையாகக் கருதப்பட்டு இணைக்கப்பட்டுள்ளது.

மேற்கண்ட இருவாழ்க்கை வரலாற்று நூல்களுள் வ.த. சுப்பிரமணிய பிள்ளை (தந்தை)யின் வாழ்க்கை வரலாறு செங்கல்வராய பிள்ளையால் இளம்பருவம் (1846-1864) உத்தியோக பருவம் (1870-1888) கடை நாட்பருவம் என்ற மூன்று பெரும்

பிரிவுகளாகவும் சென்னை வாசம் 1865 மஞ்சக்குப்ப வாசம் 1870-1888 நாமக்கல் வாசம் 1888-1891 கும்பகோண வாசம் 1892-1894 திருத்தருப்பூண்டிவாசம் 1894-1897 மதுரை வாசம் 1897-1898 மானாமதுரை வாசம் 1899-1901 என்ற பல்வேறு உட்பிரிவுகளாகவும் பகுக்கப்பட்டு முறைப்படுத்தப் பட்டு வ.த. சுப்பிரமணிய பிள்ளையின் இலக்கியப் பணி, அவர்தம் தொழில், அவர்தம் சொந்த வாழ்க்கை ஆகியவற்றைத் தெளிவாக எடுத்துரைக்கும் பாணியில் அமைக்கப்பட்டுள்ளது.

செங்கல்வராய பிள்ளையின் வாழ்க்கை வரலாற்று நூல் 15.8.1883இல் தென் ஆற்காடு மாவட்டம் மஞ்சக்குப்பத்தில் பிறந்தார் என்று தொடங்கிச் செங்கல்வராயபிள்ளையின் பணி, பணிமாற்றம், அளிக்கப்பட்ட கௌரவப்பட்டங்கள், அயராத இலக்கியப்பணி, படைப்புகள் ஒவ்வொன்றும் உருவாகி வெளிவருதல், முருகபக்தி, அருணகிரிபால் கொண்ட ஈடுபாடு, திருமணம், குழந்தைப் பேறு, நட்பும் உறவும், நண்பர்கள், மறைவு ஆகியவற்றை ஆண்டு வாரியாக அடுத்தடுத்து எடுத்துரைக்கும் போக்கில் அமைந்துள்ளது.

பிள்ளைத்தமிழ், அந்தாதி, மாலை, எம்பாவை, பள்ளியெழுச்சி போன்ற நூல்களைச் செய்யுள் நடையில் பாடும் வல்லமை மிக்க செங்கல்வராய பிள்ளை நாடகம், கதை, வாழ்க்கை வரலாறு போன்ற உரைநடை இலக்கியங்களையும் திறம்படப் படைத்தளிக்கும் தன்மை இங்குக் கருதுதற்குரியது.

### தனிப்பாடல்

செங்கல்வராயர் அவ்வப்போது வெவ்வேறு சூழல்களில் இயற்றிய தனிப்பாடல்களுள் சிலவற்றைத் தொகுத்துச் 'செங்கல்வராயபிள்ளை வரலாறு', நூலில் பிற்சேர்க்கை-3 இல் கொடுத்துள்ளனர் அந்நூலின் தொகுப்பாசிரியர்கள். இவரது தனிப்பாடல்களுள் மாவடுப்பாடல் குறிப்பிடத்தக்கது. 8.3.1932 இல் இயற்றப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ள பின்வரும் பாடல் நன்றுடையானை என்னும் பண்ணமைப்பில் அமைந்தது.

"மாவடுகாலம் வருகிறகாலம் வடுமாங்காய்
ஆவடி சென்றே ஒருபடி வாங்கி அதை உண்டால்
பாவொடு நல்ல பண்ணது சேர்ந்த பதமே போல்
மேவிடு மின்பம் விண்ணமு தொக்கும் வியப்பிதே".

(ப.80–81)

1.7.1923இல் பாடப்பட்டதாகக் குறிப்பிடப்படும் தனிப்பாடல் பின்வருமாறு:

"கடற்கத் தரிக்காய்வேற் கையா வத்திக்கா
யடற்கத்தர் வாழ்வே அருள்வாய்-விடற்கத்த
பேதமுற காயமிதைப் பேணித்தேங் காயாசம்
பூதமு ளங்கி புரை". (ப.77)

இப்பாடலுக்கு 'வேற்கையா! வாழ்வே! அத்த ஆயாசம் புரை விடற்கு அருள்வாய்' என்று பொருள் தரப்பட்டுள்ளது கொண்டு முருகனை வேண்டிப் பாடும் பாடலாகப் பொருள் கொள்ள முடிகிறது. இது போன்று ஆண்டவனின் அருள் வேண்டிப் பாடும் அகப்பொருள் பாடல் ஒன்று 11.3.1932இல் செங்கல்வராய பிள்ளையால் பாடப்பட்டுள்ளது.

"மல்லி கேசுர நீவருவா யென்று
மல்லி கைமலர் மாலைநான் வாங்கினேன்
நல்ல நாளின்று நாயக நீ வந்து
புல்லி என்னைப் புணருதல் வேண்டுமே". (ப.81)

மேற்கண்டவாறு வெவ்வேறு சூழல்களில் வேறுவேறு காலகட்டங்களில் பாடிய பாடல்கள் பண்ணமைத்துப் பாடுதற்கு ஏற்ப அமைந்திருப்பதும் பல்லவி, அனு பல்லவி, சரணம் அமைத்துப் பாடப் பட்டிருப்பதையும் பாடல் அமைப்பு வாயிலாகவும், பாடல் குறிப்பு வாயிலாகவும் உணரமுடிகிறது.

மதுரைச் சொக்கநாயகரின் அறுபத்து நான்கு திருவிளையாடல்களை உரைநடையில் விளக்கும் செங்கல்வராயர் அறுபத்து மூன்று நாயன்மார்களின் கதையைச் செய்யுள் நடையில் அறுபத்து மூவர் துதிப்பா எனப்பாடியுள்ளதுடன் அவற்றுக்கு அவரே பொருள் எழுதும் நோக்குடன் துதிப்பா- கருத்தும் எழுதியுள்ளார். அறுபத்து மூன்று நாயன்மாருள்ளும் சுந்தரர் மீது கொண்ட பற்றுதலின் காரணமாக 'ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்' என்ற உரைநடை நூலை யாத்துள்ளார். அத்துடன் அநுபந்தம் என்ற நிலையில் அவற்றைச் செய்யுளாகவும் அமைத்துள்ளார்.

முருகப் பெருமான் மீதும், முருகனடியாரான அருணகிரிநாதர் மீதும் அளவற்ற அன்பு கொண்டவரான செங்கல்வராயர் வைணவக் குடும்பத்தைச் சேர்ந்தவராயிருந்தும் சைவ சமயக் கடவுளர்களிடத்துக் கொண்ட அன்பின் காரணமாகச் சிவவெருமான் மீதும், சிவபெருமானின் அடியவர்கள் மீதும், அவருள்ளும் சுந்தரர் மீதும் மிகுந்த பக்தியும் ஈடுபாடும்

கொண்டிருந்தமையை மேற்கண்ட அவர் படைப்புகள் உணர்த்துகின்றன.

'தமிழ் பாஷையில் அன்பும் சிவபிரானிடத்துப் பக்தியும் வாழ்க்கையில் நன்னெறியும் கைப்பற்றுதல் வேண்டும் என்னும் புத்தியை எனக்குப் புகட்டின வருமான எனது அருமைத் தந்தையின் ஞாபகார்த்தமாக இந்நூல் வெளிவருகிறது' (மதுரைச் சொக்கநாயகர் அறுபத்து நான்கு திருவிளையாடல், ப.1) என்று குறிப்பிடும் செங்கல்வராயபிள்ளை 'அறுபத்து நான்கு விதமாகப் பாடவேண்டும் என்னும் அவா ஒருபாலும், சிற்றறிவினனாகிய எளியனா இப்பெரும் காரியத்தை மேற்கொள்ளுதல் என்னும் நாணமும் அச்சமும் ஒருபாலுமாகத் தினம் போராட ஈற்றில் ஆசையே வென்ற தம்மா' (ப-4) என்று இந்நூலின் தோற்றம் பற்றிக் கூறுகின்றார்.

சிவபெருமானின் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கனையும் செய்யுள் வடிவில் பாடுவதாக அமைந்துள்ள இந்நூலில் பாடல்கள் பெரும்பாலும் சிவபெருமான் தொடர்பான புராணச் செய்திகளைப் பேசுவதற்கு முக்கியத்துவம் அளிப்பதாகவும் சிவபெருமான் பற்றிய கதைச் செய்திகளை முன்னிறுத்தக் கருதுவதாகவும் அமைவதால் இப்பாடல்களில் உவமை, உருவகம், இயற்கை வர்ணனை, உள்ளுறை போன்ற கவிதைக்கூறுகளைப் பெரும்பான்மையும் காண முடியவில்லை. சான்றாகப் பின்வரும் ஒரு பாடலைச் சுட்டிக் காட்டலாம்:

> "துங்கப் புலவர்கள் வேண்டத் தூயபுலமை யளக்குஞ்
> சங்கப் பலகையொன் றீந்துன் சார்ந்தவர் தம்மொடு மாங்கண்
> தங்கித் தமிழ்வரு பாடற் றன்மை பலபல ஆய்ந்தே
> அங்கர்த்த மோதிய ஆதி அண்ணல் பொலன்
> கழல் போற்றாய்"
> (51 சங்கப் பலகை தந்தது ப.19)

இறைவனின் அறுபத்துநான்கு திருவிளையாடல்களைப் பாடியது போன்று சிவனடியார்கள் அறுபத்து மூவரையும் 'அறுபத்து மூவர் துதிப்பா' என்ற பெயரில் பாடியுள்ளார் செங்கல்வராயர்.

> "என்னைப் பொருட்படுத்த என் இளவல் ஆறுமுகன்
> முன்னை அறுபத்து மூவர்புகழ் பாவகையிற்
> சொல்நீ யெனச் சொல்லச் சொன்னேன் சிவனருளால்
> என்னே! என் பாக்கியந்தான் இன்று"
> (அறுபத்து மூவர் துதிப்பா ப.1)

நாயன்மார்களின் பெயர்களை அகரவரிசைப் படுத்திப் பாடல் எண்ணுடன் தருதல், துதிப்பாவினை அடுத்ததாக அறுபத்து மூன்று பாடல்களுக்கும் 'துதிப்பா - கருத்து' என்ற பெயரில் பொருள் தருதல், நாயன்மார்களின் பின் தொகை அடியார் பற்றிப் பேசுதல், நூலின் இடம் பெறும் அறுபத்து நான்கு பாடல்களும் என்ன பாவகை என்றும் என்ன பண்ணில் பாட வேண்டும் என்றும் அநுபந்தம் என்ற பகுதியில் அட்டவணைப் படுத்தித் தருதல் ஆகிய ஆராய்ச்சிப் பகுதிகளும் நூலில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

அறுபத்து மூன்று நாயன்மார்களைப் பற்றி எடுத்துரைத்தது போன்று அடியாருள் சுந்தரரின் தனித்தன்மைகளை உரைநடையில் கூறும் செங்கல்வராயர் 'சைவ முதற்றிருத் தொண்டராம் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளின் சரித்திரம் வசன நடையில் முன்னரே எழுதப்பட்டிருப்பினும் ஆசையை அளவறுத் தாரிங்காரே' என்பதற் கேற்ப அச்சரித்திரத்தை என் சொல்வழி எழுத ஆசைப்பட்டு நூலை எழுதி முடித்து 'லக்ஷ்மி' எனும் மாதப் பத்திரிகையில் வெளியிட்டுப் பின் தனியே அச்சிடத்துணிந்தேன் (ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகள் சரித்திரச் சுருக்கம் ப.1) என்று 92 பக்கங்கள் அடங்கிய தம் நூலின் முன்னுரையில் குறிப்பிடுகின்றார்.

சுந்தரர் சரித்திரம் தொடர்பான தேவாரப் பாடல்கள் நூலுள்ளும், அவரது சரித்திரத்தைப் பேசும் பிற இலக்கியங்கள், சுந்தரர் தொடர்பான புராணச் செய்திகள், சுந்தரரது திருநாமங்கள், தேவாரத்தைப் பற்றிய ஆராய்ச்சிப் பகுதி ஆகியவை நூலின் இறுதியில் அநுபந்தமாகவும் தரப்பட்டுள்ளன.

செங்கல்வராயபிள்ளையின் செய்யுள் படைப்பாயினும் உரைநடைப் படைப்பாயினும் படைப்பு முழுவதும் அவர்தம் ஆராய்ச்சி மனப்பான்மை புலப்படுவதைக் காணமுடிகிறது.

## திறனாய்வு நூல்கள்

அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும், முருகரும் தமிழும், திருமந்திர ஆராய்ச்சியும் ஒப்புமைப் பகுதியும், திருக்கோவையார் உரைநடை போன்ற ஆராய்ச்சி நூல்களின் வாயிலாகச் செங்கல்வராயரின் திறனாய்வுப் போக்கு புலப்படுகின்றது.

'அச்சேறியுள்ள திருப்புகழ்ப்பாக்கள் எல்லாம் சுவாமிகளது திருவாக்கே என உறுதியுடன் கூறுதற்கு இயலாமையானும் மாயை பாசங்களில் தாம் படாத போதினும் உலகுக்கு நன்மையூட்ட வேண்டித்

தாம் அத்தகைய பாசங்களில் பட்டதாகத் தமிழ்ப் புலவர் பெருமக்கள் எடுத்துக் கூறும் பெருவழக்கு உண்மையானும் சிற்சில அகச் சான்றுகளைக் கூடச் சுவாமிகளின் வாழ்க்கைச் சான்றாகக் கூறுவதற்கு அஞ்சி விடுத்துள்ளேன்' (அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும் ப. 5) என்று தன் ஆய்வு முறையின் அடிப்படை குறித்துப் பேசுகிறார்.

சுவாமிகளது குலம் யாது என்பது குறித்து, "இருபத்து ஆறாம் பாடலில் 'விடக்கு அன்பாய் நுகர் பாலனை' எனத் தம்மை நொந்து கொள்கின்றனர். விடக்கு என்பது மாமிசம் எனக்கொண்டு இவர் புலால் உண்ணும் குலத்தினர் என்னலாமா? கந்தரந்தாதியில் இவரே, 'ஜீவகாருண்யம் இல்லாமல் ஆட்டை வதைத்து யாகம் செய்கின்ற மறையோரே'[31] என வேதியரையும் கண்டிக்கின்றாரே? இவரா புலால் உண்ணும் குலத்தவர் எனச் சங்கைகள் தோன்றுகின்றன". (ப.6) எனப் பாடலுள் இடம் பெறும் அகச்சான்றுகளாயினும் மேலும் மேலும் ஆராயாமல் தவறான முடிவிற்கு வருதல் கூடாது என்னும் செங்கல்வராயர்தம் ஆய்வுப் போக்கு இதன் வழிப் புலப்படுகின்றது.

அருணகிரிநாதர் யாத்திரை செய்த முறைப்படியே தரிசிக்கப்பட்ட இருநூறு தலங்களின் வரிசையைக் காட்டும் அட்டவணை ஒன்றும் அகராதி முறைப்படி அத்தலங்களின் பெயர்களும் அவ்வத் தலத்துக்கு உரிய யாத்திரை வரிசை எண்ணும் அத்தலத்தைப் பற்றிச் சொல்லப்பட்ட பக்க எண்ணும் காட்டும் பிறிதோர் அட்டவணையும் நூலகத்துச் சேர்க்கப்பட்டுள்ளன.

அருணகிரிநாதர் சரித்திரத்தின் ஒவ்வொரு பகுதியும் திருப்புகழ் முதலிய நூல்களின் ஆதராங்கொண்டே எழுதப் பட்டுள்ளன.

பிற்காலத்தவர் பாடல்கள் பல பழைய திருப்புகழ் ஏடுகளில் கலந்துள்ளன. திருநெல்வேலிப் பிரதேசத்தில் வெவ்வேறு இடங்களில் கிடைத்த ஏட்டுப் பிரதி இரண்டில் இராமானுஜதாசர் பாடிய 108 திருப்புகழுள் ஒன்றான 'உடைச் சேலை தா' கலந்து கிடந்தது. ஒரு திருப்புகழ் ஏட்டில் புலவர் புராணம் பாடிய முருகதாச சுவாமிகளின் பன்னிரண்டு பாடல்கள் (புதுவைத்திருப்புகழ்) கலந்து கிடந்தன. இவற்றைக் கண்டு அஞ்சியே எந்தையார் திருப்புகழ் முதல் பாகம் முதல் பதிப்பின் முகவுரையில் இவ்வளவு தூரம் ஆராய்ச்சி செய்து ஒழுங்குபடுத்தியும் பாடல்களெல்லாம் அருணகிரிநாத சுவாமிகள் திருவாக்கிலிருந்து வந்தபடியே கலப்பு இல்லாமல் இருக்கின்றன

என்று சொல்லத் துணிந்திலன் என எழுதியுள்ளார் (ப97) என்று பாடல்களின் இடைச் செருகல் குறித்த அக்கறை கொள்ளும் செங்கல்வராய பிள்ளையின் ஆய்வுத்திறன் போற்றுதற்குரியது.

அருணகிரியின் பாடலுக்கு உள்ளிருந்து அகச் சான்றுகளை எடுத்துக் காட்டுவதோடு அத்தகைய நிகழ்ச்சிகள் சுட்டப்பட்டுள்ள ஏனை இடங்களையும் பிற இலக்கியங்களையும் சுட்டிக் காட்டியிருப்பதன் வாயிலாக வ.சு.செ.யின் இலக்கியப் புலமையும் ஆய்வுப் போக்கும் புலப்படுகின்றன.

அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும் போன்று முருகரும் தமிழும் என்ற ஆராய்ச்சி நூலும் நுண்ணிதாக ஆழ்ந்த ஆராய்ச்சி மேற்கொண்டுள்ளமையைப் புலப்படுத்தும். 1934இல் சிந்தாதிரிப் பேட்டையில் பேசிய செய்திகள் கிருபானந்த வாரியாரின் 'திருப்புகழ் அமிர்தம்' பத்திரிகையில் வெளியிடப் பட்டுப் பின்னர்த் தனி நூலாக வெளிவந்துள்ளது. கந்தராந்தாதி, திருமுருகாற்றுப்படை, கல்லாடம், திருப்புகழ், திருவிடைக்கழி பிள்ளைத்தமிழ், திருவகுப்பு, பரிபாடல் போன்ற நூல்களிலிருந்து முருகனைப் பற்றிய செய்யுள் வரிகளை எடுத்துக் காட்டி விளக்குவது இந்நூலின் போக்காக அமைகிறது.

முருகன்-ஔவையார், முருகன்-நக்கீரன், முருகன்-தருமி, முருகன்-அகத்தியர், முருகன்-உக்கிரப் பெருவழுதி, முருகன்-உருத்திரசன்மன், முருகன்-பொய்யாமொழிப் புலவன் என்ற முறையில் முருகனுக்கும் தமிழுக்கும் உள்ள உறவு செங்கல்வராயரால் எடுத்துரைக்கப்படுகிறது.

இறுதியாக, சேனையின் கலவி இன்பத்தைக் காட்டிலும் கீரன் சொல்லே (திருமுருகாற்றுப்படை) முருகனுக்கு அதிகம் தித்தித்தது என்ற அருணகிரியாரின் கருத்தை எடுத்துக் காட்டி அருணகிரியின் கந்தரந்தாதியிலும் அனுபூதியிலும் முருகனுக்கு அதிக ஆர்வம் உண்டு என முருகன் - அருணகிரியின் வாயிலாக முருகனின் தமிழுணர்வினை எடுத்துக்காட்டும் செங்கல்வராயரின் நுண்ணறிவு எண்ணுதற்குரியது.

திருக்கோவையார் உரைநடை என்னும் செங்கல்வராய பிள்ளையின் நூல் 'திருக்கோவையாருக்கு உரை' என்ற நிலையில் அமையாமல் திருக்கோவையார் என்னும் இலக்கியத்தை உரைநடை வடிவில் அமைத்துத் தந்த பாவனையில் சிறப்புற்றுத் திகழ்வதை அந்நூலினை நுணுகி ஆய்ந்தால் உணர முடியும். மேலும் இவ்வுரைநடை கதை வடிவில் அமைக்கப்பட்டிருத்தலால் இதனைக்

கற்பது எளிமையும் இனிமையும் உடைத்தாய் விளங்குகிறது என்பதும் இங்குக் குறிப்பிட வேண்டுவது.

'மணிவாசகர் அருளிய திருக்கோவையார் என்னும் நூல் அவர் அருளிய திருவாசகம் போலப் படிக்கப்படாது இருப்பதன் காரணம் அது தோத்திர நூலாக இல்லாமையே' (திருக்கோவையார் உரைநடை ப.3) என்று உணர்ந்த வ.சு. செங்கல்வராயபிள்ளை இந்நூலை உரைநடையில் யாத்தளித்துள்ளார்.

இதுபோன்று இவரது ஆய்வு நூல்களுள் குறிப்பிடத்தக்கது, திருமந்திர ஆராய்ச்சியும் ஒப்புமைப் பகுதியும் என்ற நூலாகும். 'நம்பி ஆருரரால் போற்றப்படாமையால் ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முன்னர் இவர் இருந்தார் என்பது தெளிவு. தமிழ் மூவாயிரஞ்சாத்தி மன்னிய மூவாயிரத்தாண்டு இப்புவிமேல் மகிழ்ந்திருந்து' எனச் சேக்கிழார் பெருமான் கூறுவதால் கி.மு. 2100-க்கு முன்னரும் சித்தப் பிரசித்தராகிய இவர் இருந்திருத்தல் வேண்டும் (திருமந்திர ஆராய்ச்சியும் ஒப்புமைப் பகுதியும் ப.4) எனச் செங்கல்வராயபிள்ளை எடுத்துரைப்பதன் வாயிலாக அவர்தம் 'காலம் கணிக்கும் முறை' புலப்படுகிறது.

"திருமூலர் பல்லாண்டுக் காலம் உயிர் வாழ்ந்திருந்தனர் என்பது, 'தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின் ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே(74)', 'இருந்தேன் இக்காயத்தே எண்ணிலிகோடி(80)' என்னும் திருமூலர்தம் திருவாக்காலும் 'சந்ததமும் இளமையோடிருக்கலாம்' எனத் தாயுமானவர் கூறியிருத்தலாலும் ஐயமின்றிக் கொள்ளக் கிடக்கின்றது" (ப. 4) என்ற ஆராய்ச்சிப் பகுதியின் வாயிலாக அகச் சான்றுகளுடன் புறச்சான்றுகளும் காட்டி நிறுவும் ஆய்வுமுறை வெளிப்படுகிறது.

பிறநூல்களில் போலவே திருமந்திரத்திலும் இடைச் செருகலான சிலபாடல்கள் உள்ளன. சில பாடல்கள் இருமுறை, மும்முறை வந்துள்ளன. எடுத்துக்காட்டாக 448-3011, 490-2012-3024. இவை நன்கு ஆயப்பட்டு இப்பதிப்பிலும் சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்பிலும் காட்டப்பட்டுள. சைவப்பெரியார் துடிசைகிழாரது பதிப்பில் திருத்தப்பட்டுள (ப.8) என்ற வ.சு.செ.வின் கருத்துரைகள் அவர்தம் 'ஆழ்ந்தகன்ற' ஆய்விற்குச் சான்றாகத் திகழ்கின்றன.

மேலும் திருமந்திரத்துள் மனப்பாடஞ் செய்யத்தகுந்த பாடல்கள் எவை என்பதும் சிறப்பித்துச் சொல்லத்தக்க சிலபாடற் பகுதிகள் எவை என்பதும் நூலின் வாயிலாக வெளிப்படும் பிற உண்மைகள் எவை என்பதும் திருமந்திர நூலின் பழமையும்

பெருமையும் யாவை என்பதும் திருமூலருக்கும் அருணகிரி நாதருக்கும் உள்ள ஒத்த இயல்புகள் எவை என்பதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

இத்துடன் திருமந்திரத்தின் கருத்தும் அவை பிற நூல்களில் எடுத்தாளப்பட்டுள்ளமையும் நுணுகி ஆராயப்பட்டு அந்நூலின் இறுதியில் எட்டுப் பக்கங்களில் பட்டியலிட்டு அட்டவணைப் படுத்தித் தரப்பட்டுள்ளமையும் அவர்தம் இலக்கிய ஆய்வு அனுபவத்தின் வெளிப்பாடாக அமைவது கண் கூடு.

கவிஞனின் படைப்புள்ளம் கற்பனைச் சிறகுகளை விரித்துச் செயல்படுவது. ஆய்வாளனின் ஆய்வுள்ளம் கற்பனைகளை விடுத்து உண்மைகளைத் தேடுவது. இவ்விரு திறன்களும் ஒருசேரக் கைவரப் பெற்றுப் படைப்புத் தேடலும் ஆய்வுத் தேடலும் ஒருங்கே அமையப் பெற்றுள்ள ராவ்பகதூர் டாக்டர் தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளையின் இலக்கியப் படைப்புகளும் அவர்தம் ஆய்வுப் படைப்புகளும் மேலும் மேலும் ஆழ்ந்தும் அகன்றும் நுணுகி ஆராயத்தக்கன.

******

# ஒளிநெறிக் கட்டுரைகளின் பகுப்பாய்வுத் திறன்

அரு. மருததுரை

தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை குடிப் பிறப்பிலும் கல்வியறிவிலும் மரபுவழியான சிறப்பினைக் கொண்டவர். சைவக்குடும்பத்தில் பிறந்த தணிகைமணி இயல்பாகவே குடும்பச் சூழலில் சமயநலமும் புலமை வளமும் வாய்க்கப்பெற்றவர். தமது வாழ்நாளில் பல்வேறு அரும்பெருஞ் செயல்களைச் செய்தபோழ்திலும் அவரது ஆராய்ச்சி நுண்ணறிவு தேவார ஒளிநெறி நூல்களில் மிகுதியும் துலக்கமாகித் திகழ்கின்றது. பல்வேறு ஆராய்ச்சிகளுக்கு ஒளியேற்றும் வகையில் அமைந்துள்ள தணிகைமணியின் தேவார ஒளிநெறித் தொகுப்பின் பகுப்பாய்வுத் திறனை இக்கட்டுரை சிந்தித்தமைகின்றது.

### ஒளிநெறி விளக்கம்

ஒளி + நெறி = ஒளிநெறி. ஒளியெனில் வெளிச்சம். நெறியெனில் வழி. சமய இலக்கியங்களில் பொதிந்துள்ள செல்வங்களைத் துய்க்கும் வகையில் ஒளியிட்டு வழியமைத்துத் தந்தமையினாலே ஒளி நெறியெனும் தலைப்பிட்டுள்ளார். ஒளி நெறித்தலைப்புகளுக்கு விளக்கவுரை எழுதி ஒளிநெறிக் கட்டுரையெனும் நூலையும் தணிகைமணி தமிழுலகிற்குத் தனியே வழங்கியுள்ளார். இவற்றின் பயன்மதிப்பு மதிப்பிடுவோர்க்கு ஆயுந்தோறும் இன்பமும், வியப்பும், உண்மையும் நல்குவதாகும்.

நூற்றுக்கணக்கான தலைப்புகளின் கீழ் அனைத்துச் செய்திகளையும் பிரித்து வகைப்படுத்தி வேண்டுமிடத்து உடுக்குறியிட்டு விளக்கம் நல்கியிருப்பதும் பாடபேதமிருப்பின் அவற்றினை விளக்கி அறிந்து கொள்ளும் பொருட்டு ஆய்வுக்குறிப்புகளைத் தந்திருப்பதும், அவரது ஆய்வுப் புலமைக்குச் சான்றாகும். தேவார ஆராய்ச்சியில் ஈடுபடுவோர் எப்பொருள் பற்றி அறிய விழையினும் அப்பொருள் பற்றி விளக்கம் காண ஒளி நெறி வழி வகுக்கின்றது. பொது நிலையில் தேவாரம் என்பது 8250 பக்திப் பனுவல்களைக் கொண்ட தோத்திர நூல் என்பதை அனைவரும் அறிவர். இத் தோத்திர நூல்களுள் புதைந்துள்ள எண்ணற்ற செய்திகளை விளங்கிக் கொள்ளவும் மேலும் சிந்தித்துத் தெளிவு பெறவும், பயன்பெறவும், தேவார ஒளிநெறி வழிகாட்டுகின்றது. இச் சாதனையைத் தனிமனிதனால் எவ்வாறு ஆற்றியிருக்க முடியும்

என்பது இன்றைய ஆராய்ச்சியாளர்களின் திகைப்பு. ஆனால் இறையருள் துணைகொண்டு ஒரு பல்கலைக்கழகம் திட்டமிட்டு முயன்று முடிக்கவேண்டிய பெரும்பணியைத் தனிமனிதனாக நின்று சாதித்துக்காட்டியுள்ளார். தேவார ஒளிநெறி நூல்கள் தணிகைமணியின் வாயிலாக இறைவன் நிகழ்த்திய அருளிப் பாடாகவும் கொள்ளலாம். இத்துறையில் இவருக்கு முன்னும் பின்னும் இத்தகைய தனித்த முயற்சி மேற்கொள்ளப்படவில்லை எனலாம்.

## தேவார ஒளிநெறி அமைப்பும் சிறப்பும்

திருஞானசம்பந்தர் தேவார ஒளிநெறி நானூற்று அறுபத்தியாறு (466) ஆராய்ச்சித் தலைப்புகளை உள்ளடக்கி மூன்று மடலங்களாகவும், திருநாவுக்கரசர் தேவார ஒளி நெறி நூற்றுத் தொண்ணூறு (190) ஆராய்ச்சித் தலைப்புகளைக் கொண்டு இரண்டு மடலங்களாகவும், சுந்தரர் தேவார ஒளிநெறி இருநூற்று அறுபத்தியோர் (261) ஆராய்ச்சித் தலைப்புகளைக் கொண்டு ஒரு நூலாகவும் தேவார ஒளிநெறி நூல்கள் அமைந்துள்ளன. இந்நூல்கள் தேவாரத்தில் பொதிந்துள்ள செய்திகளை அறிந்துகொள்ள உதவும் உடனடி நோக்கு நூல்களாக அமைந்துள்ளன.

பல்வேறு ஆய்வுத் தலைப்புகளை முறையே அகரநிரல் படுத்தி எளிமையாக அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் தேவாரத் தொடர்கள் தொகுக்கப்பெற்றுள்ளன. தேவையான சொற்களுக்கு விளக்கக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன. 'அநுபந்தம்' என்று பின்னிணைப்பு இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. இதில் அருஞ்சொற்கள் நிரல் படுத்தப்பட்டுள்ளன. இச்சொற்களுக்குரிய பொருள்களும் இடம் பெற்றுள்ள பாடல் எண்களும் அடைப்புக்குறியில் உடன் கொடுக்கப் பெற்றுள்ளன. அருஞ்சொற்கள் சிலவற்றிற்கு ஆங்கிலச் சொல்விளக்கமும் ஒரு சில இடங்களில் தரப்பட்டுள்ளன. அருஞ்சொல் பட்டியல் ஒவ்வோர் ஒளிநெறியிலும் உள்ளது. அப்பர் தேவார ஒளிநெறியில் 621 சொற்கள் பட்டியலில் உள்ளன. சுந்தரர் தேவார ஒளிநெறியில் 794 சொற்கள் பட்டியல் படுத்தப்பட்டுள்ளன. சொற்கள் தொகுக்கப்பெற்று விளக்கமும் தரப்பட்டுள்ளமையும் குறிக்கத்தக்கது. இதுவன்றியும் பின்னர்ச் சேர்க்கப்படவேண்டிய எஞ்சிய செய்திகளையும், விடுபட்ட செய்திகளையும், பின்னிணைப்பில் நூலாசிரியர் இணைத்துள்ளார். மேலும் ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும் பிழை திருத்தப்பட்டியல் உள்ளது. இவ்வாறு தேவார ஒளி நெறியின் அமைப்பு சிறப்புடன் விளங்குகின்றது.

சொற்கள், தொடர்கள், ஒத்த பொருளமைந்த தொடர்கள், பொருள் என்று ஒப்புமைப்பகுதி எனும் பிரிவு அமைந்துள்ளது. ஒப்பிலக்கிய நோக்கில் தணிகைமணியின் பார்வை குறிக்கத்தக்கது. இலக்கண இலக்கியங்களைத் தக்காங்குப் பயன் கொண்டுள்ளார். சங்க இலக்கியங்கள், பெருங்காப்பியங்கள், சைவ, வைணவ, சாத்திர, தோத்திர நூல்கள் ஆகியவற்றை மேற்கோள்காட்டி ஒப்புமைப் பகுதியினை அமைத்துள்ளார். பிற நூல்களில் எடுத்தாளப் பெற்றுள்ளதோடு ஒப்புமைப் பகுதியில் காட்டப்பெற்ற 'முக்கிய விஷய அகராதி' என்று அதனையும் நிரல்படுத்தியிருப்பது இத்துறையின் ஆய்வில் ஈடுபடுவோர் அனைவரின் பணியையும் எளிமையாக்கி மேன்மேலும் அப்பொருள்மீது சிந்திக்கத் தூண்டும் பெற்றியது என்பது குறிக்கத்தக்கது.

இதுவன்றியும் பல சொற்களுக்கு விளக்கம் கூறும் நிலையில் உடுக்குறியிட்டுப் பொருள் விளக்கம் செய்தும் அந்தந்தத் தொடரின் பொருளை உணர்ந்து கொள்ளுமாறும் செய்துள்ளார். பழந்தமிழ் இலக்கியங்களை மேற்கோள்காட்டி விளக்கம் தந்திருப்பது சுட்டுதற்குரியது. இத்தகைய இவரது ஆராய்ச்சி நெறிமுறைகள் பகுப்பாய்வின் சிறப்பினைப் புலப்படுத்துகின்றன.

## தணிகைமணியின் ஆய்வு நெறிமுறை

தேவார ஒளிநெறி நூலுக்கென்று தனித்த ஆய்வுமுறையினைத் தணிகைமணி மேற்கொண்டுள்ளார். ஒத்த கருத்துள்ள தொடர்களைத் தொகுத்தல், பொருள்படப் பகுத்தல், கருத்து விளக்கமளித்தல், ஆய்வுக் குறிப்புகள் தேவையெனில் தருதல் என்ற நெறிமுறையினைப் பின்பற்றி ஒளிநெறி நூல்கள் அமைக்கப் பெற்றுள்ளன. எட்டாயிரத்து இருநூற்றைம்பது பாடல்களைக் கொண்ட தேவாரத்திருப்பதிகங்களின் தொடர்களைத் தொகுத்து அகர நிரல்படுத்தி உரிய தலைப்பிட்டு வேண்டுமிடங்களில் விளக்கம் தந்து ஆய்வுக் குறிப்புகளை அளித்திருப்பது இவரது ஆராய்ச்சி நெறி முறையாகும்.

> "ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
> பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத் திரநிலை"

என்பது நன்னூல் சூத்திரம் (19). ஆற்றொழுக்கும், முன்பின் நோக்கும் சிங்கத்தின் பார்வையும், இடையிட்டுக் குதிக்கின்ற தவளையின் பாய்ச்சலும் நுணுக்கமான பருந்தினது பார்வையும் சூத்திரங்களின் தன்மை என்று கூறும் கருத்து, தேவார ஒளிநெறிக்கு மிகவும் பொருந்திவருகின்றது. இச் சூத்திரத்தினையே தணிகைமணியின்

தேவார ஒளிநெறி நூலின் நோக்கு நிலையாகக் கொள்வதிலும் தவறில்லை. தணிகைமணியின் ஆராய்ச்சி நோக்கு மேற்கண்ட சூத்திரத்தின் அடிப்படையிலேயே அமைந்துள்ளது எனலாம். பரந்துபட்ட தமிழிலக்கிய, இலக்கண, சாத்திரப் புலமையும் அனுபவ அறிவும் இணைந்த இந்த ஆராய்ச்சிக்கு ஈடு இணை கூறுதல் எளிதன்று.

வழிபாடு தொடர்பான செய்திகளுக்கு மட்டுமன்றி மொழி நிலையிலும் தமிழர்தம் பண்பாடு காக்கும் போற்றும் முயற்சியை ஒளி நெறி நூல் நெடுகிலும் வெளிப்படக் காணலாம். இத்தகு ஆராய்ச்சி நெறிமுறையினை மனத்திற் கொண்டு தேவார ஒளி நெறி நூல்களைத் தமிழுலகம் பயனுறும் வண்ணம் வழங்கியுள்ளார். பகுப்பாய்வுத் திறனை வெளிப்படுத்தும் களங்களாக ஒளிநெறியில் பழந்தமிழ் இலக்கிய ஆட்சி, சொல் விளக்கம், இலக்கணப் பார்வை, தத்துவ விளக்கம், பிறர் கருத்துகளைப் போற்றுதல், தலபுராணக்கதை விளக்கம், ஒப்பிலக்கிய நோக்கு, நாட்டுப்புறவியல் பார்வை, பல்துறைப் பார்வை, பாடபேதம் என்பன அமைகின்றன.

## பழந்தமிழ் இலக்கிய ஆட்சி

பல சொற்களுக்கு விளக்கம் கொடுக்கும் நிலையில் பழந்தமிழ் இலக்கியங்களைச் சான்று காட்டி விளக்கியுள்ளார். காட்டாக, இறைவனாடிய கூத்துகளில் பண்டரங்கக் கூத்தும் ஒன்று. இக் கூத்தினை ஆடிய காரணத்தால் சிவபெருமானைப் பண்டரங்கன் என்று அடியவர் போற்றி வணங்குகின்றனர். ஒளிநெறியில், பண்டரங்கன் (98.1) எனும் சொல்லிற்குத் தணிகைமணி கொடுத்துள்ள விளக்கம் இங்கு அவரது மேற்கோள் இலக்கிய ஆட்சிக்குக் காட்டாகின்றது.

''பண்டரங்கம் பதினோராடல்களுள் ஒன்று; இது வானோராகிய தேரில் முன்னின்ற திசைமுகன் காணும்படி பாரதி வடிவாகிய இறைவன் வெண்ணீற்றை அணிந்து ஆடியது.

"தேர்முன் நின்ற திசைமுகன் காணப்
பாரதி ஆடிய வியன்பாண் டரங்கம்"

சிலப்பதி 6.44–45

"பாண்டரங்கம் முக்கணான் ஆடிற்று"

சிலப்பதி3.14–15உரை

"பண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால்"

கலித்தொகை -கடவுள் வாழ்த்து பாண்டரங்கம் - பண்டரங்கம் என விகாரமாயிற்று" (தேவார ஒளிநெறி, சுந்தரர் ப. 273)*. இவ்வாறு பல சொற்களுக்கு மேற்கோள் விளக்கமாகப் பழந்தமிழ்ச் சான்றுகளை விளக்கக் குறிப்புகளாக மேற்கோள் காட்டியிருப்பது சுட்டுதற்குரியது.

சொற்பொருள் விளக்கம் கொடுத்துள்ள நிலையிலும் பழந்தமிழ் இலக்கியங்களின் அடிப்படையில் நோக்கி விளக்க மளித்துள்ளார். பண்டைய ஆட்சியில் சொல் பயின்றுள்ள நிலையினை நினைவூட்டும் பாங்கிலும் தேவார ஒளிநெறியின் பங்கு மிகச் சிறந்த இடத்தைப் பெறுகின்றது. இத்தகைய வகைக்குக் காட்டாகக் கீழ்க்காணும் தொடருக்குரிய விளக்கம் அமைகின்றது.

வண்டார் கொன்றைத் தாரன் மாலையன், தண்ணார் கண்ணியன் (125.7) என்ற அப்பர் தேவார அடிக்கு விளக்க மேற்கோளாகக், "கார்விரி கொன்றைத் தாரன், மாலையன், கண்ணியன்" அகநானூறு 1, என்ற அடியைக் கொடுத்து விளக்கியுள்ளார் (அப்பர், தொகுதி 1, ப. 275). மேற்சுட்டியவாறு வேண்டியாங்கு நூலினுள் பழந்தமிழ் இலக்கியங்கள் மேற்கோள்களாக ஒளிநெறியில் பயன் கொள்ளப்பட்டுள்ளன. இவை மரபுத் தொடர்ச்சியினை மறக்காமல் போற்றும் தேவார ஆசிரியர்களின் சிறப்பினைப் புலப்படுத்துவதோடு நூலாசிரியரின் மாண்பினையும் வெளிப்படுத்துகின்றன.

## சொல்விளக்கம்

ஒரு சொல்லிற்குப் பல பொருள் இருப்பது மொழிகளின் தனிச் சிறப்பாகும். சொல் காலவோட்டத்தில் பொருள் மாற்றத்திற் குள்ளாதலும் இயல்பு. பக்திப் பனுவல்களிலும் ஒரு சொல் பல்பொருள் சுட்டும் நிலையில் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றைப் புரிந்து கொள்வதற்குச் சமயப் புலமையும் இலக்கியத் தெளிவும் தேவை. அவ்வாறில்லையெனில் பல சொற்களின் உண்மைப் பொருளைப் புரிந்து கொள்ளவியலாது. அத்தகைய சொற்களுக்கு ஒளிநெறி ஆசிரியர் தேவையான விளக்கங்களைத் தந்துள்ளார்.

"மான்மறிக் கையினான், கணிசெய் வேடத்தராயவர் காப்பினால் பணிகள் தாஞ் செயவல்லவர் யாவர்தம் பிணிசெய் யாக்கையை நீக்குவர் பேயரே (210.24)" எனும் வழிபாட்டின் பயன்கூறும் பாடற்றொடர்களைக் காட்டி அதில் கணி என்ற

* அடைப்புக் குறிக்குள் தொடர்ந்து அமையும் பக்க எண்கள் தேவார ஒளிநெறியைக் குறிக்கும்.

சொல்லிற்கு உடுக்குறியிட்டுக் கீழ்க்காணுமாறு பலபொருள் கூறி விளக்கம் தருகின்றார்.

"கணி - கண்ணி - மாலை

கணி செய் வேடத்தர் - என்பதில் வேங்கை வேடங் கொண்ட முருகவேள் என்றும் ஒரு பொருள் கிடைக்கின்றது. கணி - வேங்கை மரம்.

"மான்மறிக் கையினான் கணிசெய் வேடத்தர்", என்பதற்குச் சிவபெருமானின் மதிக்கத்தக்க வேடத்தர் சிவவேடத்து அடியவர்கள் எனவும் பொருள் காண்பர்'' என்று விளக்கம் தந்துள்ளார் (அப்பர், தொகுதி 2, ப. 395). மேற்காட்டியவாறு சமய நோக்கிலும், இலக்கிய நோக்கிலுமாகக் கணி என்ற சொல்லிற்கு விளக்கமளித்துள்ளார். கணி என்பதனை இலக்கியச் சொல்லாக நோக்கி மாலை அணிந்த சிவபெருமான் எனவும் கணி என்ற சொல்லை வேங்கை மரமாகக் கொண்டு வேங்கை வேடங் கொண்ட முருகப்பெருமான் எனவும் சிவபிரானது மதிக்கத்தக்க வேடத்தைக் கொண்ட அடியவர் என்று சமய நோக்காகவும் கொண்டு தணிகைமணியளித்துள்ள விளக்கம் குறிக்கத்தக்கது.

நத்தார் படை (80.1) எனும் சுந்தரர் தேவாரக் குறிப்பிற்கு விளக்கமளிக்கின்ற போழ்து விரிவான விளக்கத்தைக் கொடுத்துள்ளார். "நத்து - சங்கு; நத்து - சங்கேந்திய திருமால், பிரமன் திரிபுரம் எரித்தபோது அம்பாக இருந்த திருமால் ஆகிய படை. நத்தார் படை ஞானம் - எனும் பாடத்துக்குப் பகைவரை அழிக்கும் ஞானன். திருமாலைப் பக்கத்தில் கொண்டவர் என்பது பொருள். நந்து - ஆர் - படை; நந்துதல் - அழிதல் அழித்தலைச் செய்யும் சூலப்படை - நத்தார் படை - திருமாலுக்குத் தலைச்சங்காட்டில் அளித்த (நத்து) சங்குப் படை எனலும்" (சுந்தரர், ப. 304) என்று தணிகைமணி கொடுத்துள்ள விளக்கம் சொற்பொருள் விளக்கத்திற்குத் தரும் காட்டாகும். இவ்வாறே சொல் விளக்கத்திலிருந்து விரிவான தேவையான விளக்கம் வரை ஆய்வில் ஈடுபடுவோர்க்கும் உண்மைப் பொருளுணர்ந்து துய்ப்போருக்கும் தேவாரத்தைப் பற்றி அறிந்து கொள்ள விழைவோர்க்கும் மிகு பயன் நல்கும் வகையில் உள்ளது.

இதுவன்றியும் சாத்திரங்களுக்கும் தோத்திரங்களுக்குமுரிய சொற்களுக்கும் வேண்டுமிடங்களில் வேண்டும் பொருள் தந்து விளக்குவதோடு வடமொழிச் சொற்களுக்கும் உடுக்குறியிட்டு விளக்கம் கொடுத்திருப்பது சுட்டுதற்குரியது.

## இலக்கணப் பார்வை

தேவாரத்தை அணுகும்போழ்து தமிழ் இலக்கணப் பார்வை மிகவும் தேவை என்பதனை அவரது பகுப்புத்திறன் விளக்குகின்றது. இலக்கண அடிப்படையில் பொருள்கண்டு குறிப்புகளைத் தக்காங்கு பயன் கொண்டுள்ளார். நன்னூல் சூத்திரங்களைப் பல இடங்களில் மேற்கோள் காட்டி விளக்கியுள்ளார். மேலும், அணிகள் பாடலுள் பயின்றுள்ள திறத்தினையும் எடுத்துக்காட்டியுள்ளார். எனவே, தேவாரத் திருப்பதிகங்களின் பயன்மதிப்பைப் பல்லாற்றானும் உயர்த்தும் நோக்கில் தணிகைமணியின் பகுப்பாய்வுப்பணி அமைந்துள்ளது. செய்யுளியல், சொல்லியல், அணியியல், பொருளியல், எழுத்தியல் கூறுகள் தேவாரப் பாடல்களில் எங்ஙனம் இடம் பெற்றுள்ளன என்பதனை இவரது பகுப்பாய்வு தெளிவாகப் புலப்படுத்துகின்றது.

நீணுலகு எனும் சொற்கு மரூஉச் சொற்கள் எனும் தலைப்பிட்டு அதன்கீழ் நன்னூல் சூ.267 என்று நினைவூட்டுகின்றார். அதற்கு மேற்கோளாக, "நள்ளனல் - நண்ணனல் என்புழிப் போல, சிவஞான போதம் சூ.10 அதிகரணம் 2 உதாரணம் "நண்ணனல் வேவாத நற்றவர்" என்று குறிப்பிட்டுள்ளார் (அப்பர், தொகுதி, ப. 122). இவ்வாறே வழுவமைதி (21) எனும் தலைப்பின் கீழ் இடவழுவமைதி (முன்னிலைப் பொருளில் தன்மை வந்தது) என்று விளக்கியிருப்பது இவண் குறிக்கத்தக்கது.

"நாம் படிக்கமலம் செய்து தொழுதுய் மடநெஞ்சமே" நாம் - நீ 1025 என்றும், "நாமிருக்கும் ஊர் பணியீர் அடிகேள் (நாம் - நீர்) (2587) என்றும் குறிக்கப்பெற்றுள்ள தொடர்களுக்கு இலக்கணப் பொருள் விளக்கம் கொடுத்துள்ளார் (மேலது, ப. 123). இச் சொற்களுக்கு விளக்க மேற்கோள் சான்றாகத் திருக்கோவையாரிலிருந்து, 'நாம் அரையாமத் தென்னோவந்து வைகி நயந்ததுவே' (திருக்கோவையார் 164) "நெருநல் கடந்தவரோ நாமென்ன" கம்பராமாயணம், சூர்ப்பநகை 119 என்று மேற்கோள் (மேலது) காட்டிய பாங்கு அவரது பகுத்தாய்வுத் திறனுக்குச் சான்றாகின்றது.

மேலும், விகுதி விசேடங்கள் (24) எனும் தலைப்பின் கீழ் ஆர், ஈர், மை, பான், மின், வான் (நன்140) பகுதிப்பொருள் விகுதி, விகுதிமேல் விகுதி (நன்னூல் சூ.278) என விகுதிகள் பெறும் பொருளினையும் அடைப்பினில் கொடுத்து விளக்கியிருப்பது இந்நூலின் தனித்தன்மைகளில் ஒன்றாகக் கொள்ளலாம் (மேலது). புணர்ச்சி விசேடம் எனும் தலைப்பின் கீழ், மாயிரு ஞாலம் 56.1 நன்னூல் சூ.162 உரை சூ.239) என்ற குறிப்பும் மற்றும் போலியைப்

பற்றிக் குறித்துள்ள குறிப்புகளும் சுட்டுதற்குரியன (மேலது, ப. 121). போலிக்குரிய நன்னூல் சூத்திர எண்ணைக் குறித்து விளக்கியிருப்பது தேவாரச் சொற்களை இலக்கண நோக்கிலும் சிந்திக்கவேண்டும் என்பதனை வலியுறுத்துகின்றது.

“வெண்பிறைக் கண்ணி தன்னையோர் பாகம் வைத்துகந் தீர்” 49.9 எனும் தொடருக்கு விளக்கமளிக்கையில், “பிறைக் கண்ணி” ஆகுபெயராய்ப் பிறைக்கண்ணியைச் சூடினதேவி எனப் பொருள்படும். தேவி பிறைசூடி என்பது, ‘தருணவாள் நிலா வீசு சுடர் சடிலபோலிமாகாளி’, எனவரும் தக்கயாகப் பரணி (107) காண்க என்று குறித்துள்ளார் (சுந்தரர், ப. 589). மேலும், “பந்தும் கிளியுமே பயிலும் பாவை, சிந்தை கவர்வார் செந்தீ வண்ணன்” 91.2 என்ற தொடருக்கு இது அகப்பொருள் துறைக் கூற்றாகவும் கொள்ளக் கிடக்கின்றது (மேலது), என்ற குறிப்பும் சிந்தனைக்குரியது. மேற்கண்ட காட்டுகள் தேவாரச் சொற்களுக்கு இலக்கண மரபுகளினடிப்படையில் பொருள் காண வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டுவதோடு தணிகைமணியின் தமிழ்ப் பற்றினையும் வெளிப்படுத்துகின்றன எனலாம்.

### தத்துவ விளக்கக் குறிப்பு

தணிகைமணியவர்கள் ஒளிநெறியில் தேவையான சொற்களுக்குத் தத்துவக் குறிப்புகளையும் வேண்டியாங்கு கொடுத்துள்ளார். சாத்திர நூல்களை மேற்கோள் காட்டி நூலாசிரியர் நூலினுள் விளக்கக் குறிப்புகளை அமைத்துள்ளார்.

‘உரை ஒன்ப தொத்துநின் றென்னுள் ஒடுங்குமே’ 2029 என்ற தொடருக்கு விளக்கமளிக்கையில், “ஒன்பதை எந்த எண்ணில் பெருக்கிக் கூட்டினாலும் ஒன்பது வரும். உதாரணம் 9x7=63; 6+3=9 அதுபோல நமது செயல் எல்லாம் யான் என்னும் அகங்கார நிலையில் நம் உள்ளே அடங்கும் என்று குறிப்பிட்டுள்ளார். அத்துடன் பெரியபுராணம்- சிவக்கவிமணி தெளிவுரை, திருநாவுக்கரசர் புராணம் 663-664இல் இதன் விளக்கம் காண்க (அப்பர், தொகுதி 2, ப. 229) என்றும் குறித்துள்ளார்.

‘பாடி காவல்’ 191-2,6 என்பதற்குப் பாடி காவலாவதும் களைகணாவான் ஒருவனைக் கொண்டு வேந்தன் செய்யவிட்டதொரு தண்டத் தொழில் விசேடம். சிவஞானபோத உரை 2ஆவது அதிகரணம் என்று குறித்துள்ளமை (மேலது, ப. 442) நூலாசிரியர் சாத்திர நூல்களைப் பயன் கொண்டு தத்துவ விளக்கக் குறிப்புகளைக் கொடுத்திருக்கும் தன்மைக்குக் காட்டாகின்றது.

### பிறர் கருத்தைப் போற்றுதல்

ஆய்வில் மேற்கோள் விளக்கமாகப் பிறரது கருத்துகளை எடுத்தாள்வது இயல்பு. தணிகைமணியவர்களும் வேண்டு மிடங்களில் சொற்பொருள் விளக்கத்திற்காகவும் கருத்து விளக்கத்திற்காகவும் தக்காங்கு மேற்கோள்களை ஒளிநெறியில் எடுத்தாண்டுள்ளார். இதழ்களிலும், பிறர் நூல்களிலிருந்தும் எடுக்கும் கருத்துகளுக்கு மேற்கோள் காட்டியதுடன் எதிலிருந்து எடுக்கப்பட்டது என்ற குறிப்பினையும் தெளிவாகவும் விளக்கமாகவும் நூலினுள் பதிவு செய்துள்ளார்.

"கோற்றட்டியாளர் - உங்களுக்காட்செய்ய மாட்டோம் ஒண் காந்தன் தளியுளீரே 5.2" என்ற தொடரைப் புகழாப் புகழ்ச்சி என்று குறித்துள்ளார். அதற்கு அடிக் குறிப்பாக இதன் பொருள் சித்தாந்தம், மலர் 12 (1939) பக்கம் 453, 523இல் பார்க்கலாம். தலைப்பு 215.6இல் பார்க்க என்ற குறிப்பினைத் தந்துள்ளார் (சுந்தரர், ப. 107). தலைப்பு 215.6இல்,

> **"கங்கை யாளேல் வாய் திறவாள் கணபதியேல் வயிறுதாரி**
> **அங்கை வேலோன் குமரன் பிள்ளை தேவியார்**
> **கோற்றப்படியாளர்"**

என்ற "இப் பாடலுக்கு வயிறுதாரிப் பிள்ளை கணபதியை அதிகமாக உண்ணாதே என்றும், சிறுபிள்ளை குமரனைக் கையில் வேல் வேண்டாம் கண்ணைக் குத்திவிடும் என்றும் புத்திமதி சொல்லிக் கோலால் தட்டி அடக்கவில்லை தாயாம் தேவி என்பது பொருள் என்பர் ஓர் அறிஞர். சித்தாந்தம் 1939 மலர் 12 பக்.520" என்று விளக்க மேற்கோள் (மேலது, ப. 588) கொடுத்திருப்பது பிறர் கூற்றைத் தக்காங்கு ஏற்கும் திறத்திற்குச் சான்றாகின்றது.

அன்னமார் பொய்கை சூழ் அம்பர் 235.4 என்ற தொடருக்கு அன்னவடிவம் கொண்ட பிரமதேவன் உண்டாக்கிய தீர்த்தம் - மீனாட்சி சுந்தரம் பிள்ளை சரிதம் பக்.209 என்று மேற்கோள் (மேலது, ப. 306) காட்டி விளக்கமளித்துள்ளார். இவ்வாறு பிறர் கருத்துகளை ஏற்று வேண்டுமிடத்து நூலாசிரியர் பயன் கொண்டுள்ளமை இவரது ஆராய்ச்சி நோக்கினையும் பொருள் விளக்கத்திலும் பகுப்பாய்வுத் தெளிவிலும் கொண்டிருக்கும் ஊற்றத்தினையும் காட்டுகின்ற தெனலாம்.

### தலபுராணக்கதை விளக்கம்

தேவார ஆசிரியர்கள் தலவழிபாட்டில் மக்களை ஈடுபடுத்திட மாபெரும் இயக்கத்தைத் தோற்றுவித்தார்கள். தலங்கள்

தோறும் தலபுராணக்கதைகளுக்கு மதிப்பளித்து அந்தந்தத் தலங்களுக்குரிய பதிகங்களில் குறிப்பாகவும் விளக்கமாகவும் பதிவு செய்தலை முதன்மையான நோக்கமாகக் கொண்டிருந்தனர். குறிப்பாகக் கொடுக்கப் பெற்றுள்ள கதைகளுக்குத் தேவார ஒளி நெறியில் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

**"சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச்**
**சூழ்கொடி முல்லையாற் கட்டிட்(டு)**
**எல்லையில் இன்பம் அவன்பெற வெளிப்பட் டருளிய**
**இறைவர்"**

என்ற தேவாரக் குறிப்பிற்குத் தொண்டைமானுக்கு அருளியது எனும் தலைப்பினுக்கு உடுக்குறியிட்டுக் கீழ்க்காணும் விளக்கத்தைத் தந்துள்ளார். "தொண்டைமான் ஏறிவந்த களிற்றை முல்லைக் கொடியிற் சிக்கவைத்தார் இறைவன். சிக்கை நீக்கக் கொடியை வாள் கொண்டு வெட்டினான் தொண்டைமான். அந்த வெட்டு, முல்லைக் கொடியில் மறைந்திருந்த இறைவன் முடிமேற்பட்டது. இரத்தம் அங்குப் பெருகக் கண்ட அரசன் அயர்ந்து வீழ்ந்தான். இந்த மாபாதகம் செய்தேனே நான்; என்னையே வெட்டிக் கொண்டால் ஒழிய இந்தப் பாதகம் தீராது என்று எண்ணித் தன் வாளை உருவினான்; அப்போது பெருமான் வெளிப்பட்டு நீ தந்த இந்த வெட்டு என் முடி மீது ஒரு மாமணி போல் என்றும் விளங்கும் என்று கூறி அவனுக்குப் போருக்குத் துணையாக நந்தியை அனுப்பி அவன் வெற்றிபெற வைத்தார் என்பது தலபுராணம். சிவலிங்கத்தின் முடிமீது அந்த வெட்டு ஒரு சிறிய லிங்கம் போல இப்போது காட்சி அளிக்கின்றது.

**"தந்தனை நீ வெட்டெனினும் தாரணியில் எஞ்ஞான்றும்**
**முந்துமாமணி என்றே மொழிந்து வந்தனன்"**

வட திருமுல்லைவாயில் புராணம் - தொண்டைமான் வழிபடு படலம் 105," என்று விளக்கம் தந்துள்ளார். தலபுராணச் செய்திகளைக் குறிப்பிட்டுள்ளதோடு (மேலது, ப. 307) தாம் நேரில் கண்டவற்றையும் பதிவு செய்துள்ளார். இதே போன்று தலபுராணக் குறிப்புகளுக்கு அந்தந்தத் தலபுராணங்களிலிருந்து பெறலாகும் செய்திகளைத் தொகுத்துச் சுருக்கி விளக்கமாகத் தந்துள்ளார். மேலும், தலம் பற்றிய மரபுவழிச் செய்திகளையும் வேண்டு மிடங்களில் சுட்டியும் விளக்கியும் நூலினுட் காட்டியுள்ளார். தேவார ஆசிரியர்களின் நோக்கத்தினை ஒளி நெறியின் வாயிலாக அறிந்து பயன்கொள்ள வேண்டும் என்பது தணிகைமணியின் பகுப்பாய்வின் நோக்கமாக அமைந்துள்ளது. இதற்கு மேற்கண்ட விளக்கம் காட்டாகின்றது.

## ஒப்பிலக்கிய நோக்கு

ஒப்பிலக்கியப் பார்வை இன்றைய ஆய்வில் மிக இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது. ஒரேவகை இலக்கியத்திலும் பொருண்மை நிலையிலும் சொல்லாட்சியிலுமாக ஒப்புமை நோக்கு விரிந்து செல்லுகின்றது. தணிகைமணி, தேவாரத்துட் காணலாகும் செய்திகளைப் பிற தமிழ் இலக்கிய, இலக்கண நூல்களுடன் ஒப்பிட்டு நோக்கி ஒப்புமைப் பகுதி எனும் பகுதியை ஒளிநெறியில் அமைத்துள்ளமை அவரது ஒப்பிலக்கிய நோக்கினைப் புலப்படுத்துவதுடன் இத்துறை ஆய்விற்குச் சிறந்த பங்களிப்பாகத் திகழ்கின்றது. ஒப்புமைப் பகுதி என்று தலைப்பிட்டு ஒளிநெறியில் தொகுக்கப்பெற்றுள்ள தொடர்களின் கீழ் ஒப்புமையுடைய பிற இலக்கியத்தொடர்கள் நிரல்படுத்தப் பெற்றுள்ளன. இதற்குக் காட்டாகக் கீழ்க்காணும் தொடர் அமைகின்றது.

> **"வண்டாமரையின் மலர்மேல் நறவ மதுவாய் மிகவுண்டு**
> **பண்டான் கெழும வண்டியாழ் செய்யும்" 67-10**

என்ற திருஞானசம்பந்தரது பாடல் தொடர்களின் கீழ்

> மென்சிறை வண்டியாழ் முரல 214.11
> குரவமேறி வண்டினம் . . . . . . யாழ்செய் கோவலூர் 236.2
> வண்டி யாழ்செய் பைம்பொழில் 300.1, 3
> இன்னெடுஞ் சோலை வண்டியாழ் முரலும் 359.10
> வரிய சிறை வண்டியாழ் செய்யும் - சுந்தரர் 80.4
> சிறையார் பொழில் வண்டியாழ் செய்யும் - சுந்தரர் 80.10
> யாணர் வண்டினம் யாழிசை பிறக்க - பரிபா 21-35
> வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் - கலி 32
> யாழிசை கொண்ட இனவண் டமர்ந்தார்ப்ப -கலி. 131
> அரவ வண்டினம் ஆர்த்துடன் யாழ்செயும் - சிலப்.12-85
> இருங் குயிலால இனவண்டி யாழ்செய - சிலப். 26-112
> பயிலிளந்த தாமரைப் பல்வண் டியாழ்செய - சிலப்.27.194
> அரவ வண்டொடு தேனினம் யாழ்செயும், சிந்தா. 1196
> யாழிசை இனவண்டார்ப்ப - முல்லைப்பாட்டு 8
> வண்டினம் 'நல்லியாழ் செய்ய - மணிமே.4-4; 19.58
> அரவ வண்டினம் யாழெனு ஆர்ப்ப - பெருங்கதை 5-2-18
> அறுபதங்கள் . . . . பண்டிருந்த யாழ் முரல - ஈங்கோய் - 10

மேற்கண்ட தொடர்கள் (சம்பந்தர், தொகுதி 1, பக். 26-27) தேவாரத்தொடருக்கு ஒப்புமையாகக் காட்டப்பட்டுள்ளன. வண்டின் இனிய ஓசை யாழ் ஓசையாக அமையும் திறத்தினை ஞானசம்பந்தர்

பாடியுள்ளார். சொல்லும் பொருளும் பழந்தமிழ் இலக்கியங்களில் ஞானசம்பந்தருக்கு முன்னும் பின்னும் எங்ஙனம் பயன் கொள்ளப்பட்டிருந்தன என்பதனை ஒளி நெறியின் ஒப்புமைப் பகுதிகள் காட்டுகின்றன. இத்துறையில் நாட்டமுடையோர்க்கும் ஆய்வாளர்களுக்கும் இப்பகுதி கலைக்களஞ்சியம் போன்று தகவல்களை நல்குகின்றது.

## நாட்டுப்புறவியல்

தேவாரத்தில் பயின்றுள்ள நாட்டுப்புறவியல் கூறுகளை உரிய தலைப்புகளிட்டுத் தொகுத்தளித்துள்ளார். பழமொழிகள், கதைகள், வழக்குச் சொற்கள் என்று பல கூறுகள் தேவாரத்துள் பொதிந்துள்ளன. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் குறிப்பாகவும் விளக்கமாகவும் கதைக்கூறுகள், பழமொழிகள் பலவற்றைப் பதிகப் பாடல்களில் கையாண்டுள்ளனர். பழமொழிகளைத் தனியே பட்டியலிட்டு (அப்பர், தொகுதி-2, பக். 228-231; சுந்தரர், ப. 550) நிரல்படுத்தியுள்ளார். வழக்குச் சொற்களையும் ஒளி நெறியில் பட்டியலிட்டுள்ளார். குறிப்பாகச் சுட்டிய கதைக் குறிப்புகளைத் தேவார ஒளிநெறியில் குறியிட்டு விளக்கியுள்ளார். இதற்குக் காட்டாக நரிவிருத்தக் கதையினையே கொள்ளலாம்.

> **அரி அயற் கரியானை அயர்த்துப் போய்**
> **நரி விருத்தமதாகுவர் நாடாரே 213.7**
>
> **நரி வரால் கவ்வச் சென்று நற்றசை இழந்த தொத்த**
> **தெரிவரல் 27.5**

என்ற தொடர்களில் குறிப்பாகச் சுட்டப்பெற்றுள்ள நரி விருத்தத்தினை உடுக்குறியிட்டு ஒளிநெறியில் தணிகைமணி விளக்கியுள்ளார். "தசையைக் கவ்வி வாயில் வைத்திருந்த நரி ஆற்று நீரில் எட்டிப்பார்க்க அதன் நிழலில் தசையைக் கண்டு வாயிலிருந்த தசையைக் கரை ஓரத்தில் வைத்துவிட்டு நிழலில் தெரிந்த தசையைக் கவ்வக் குதித்தது. அதற்குள் கரையில் இருந்த தசையைக் காக்கை எடுத்துப் பறந்து போயிற்று. நரி இங்ஙனம் வாயில் இருந்த தசையையும் இழந்தது. பேராசை பெரு நஷ்டம்" (அப்பர், தொகுதி 2, ப. 370) என்று கதை உணர்த்தும் நீதியையும் குறிப்பிட்டுள்ளார்.

பகுப்பாய்வு நோக்கில் நாட்டுப்புறவியல் கூறுகளுக்கென்று உரிய தலைப்புகளிட்டு ஒளிநெறியில் தொடர்புடைய தேவாரத் தொடர்களை நிரல்படுத்தியுள்ளார். தேவார ஒளிநெறியில் இடம் பெற்றுள்ள நாட்டுப்புறவியல் தொடர்பான குறிப்புகளும்

தொகுப்புகளும் நாட்டுப்புறவியல் ஆய்வினை மேற்கொள்ள விழைவோர்க்குப் பல தகவல்களைத் தொகுத்தளிக்கின்றன.

## பல்துறைப் பார்வை

தேவார ஒளி நெறியின் பகுப்பாய்வின் நோக்கம் முழுமையும் தேவாரத்துட் பொதிந்துள்ள செய்திகளைப் பலரும் அறிந்து கொள்ளவேண்டும்; அத்துடனின்றி அதன்பயன் மதிப்பினை உலகறியச் செய்திடவேண்டுமென்பதாகும்.

தேவாரத் திருப்பதிகங்களை முற்றமுழுவதும் பழுதறக் கற்ற ஞானத்தால் அவற்றுள் கண்ட செய்திகள் அனைத்தையும் 917 உட்தலைப்புகளிட்டு நிரல்படுத்தியுள்ளார். இன்றைய அறிவியற் கூறுகளும், மொழியியல், சமூகவியல், வரலாற்றியல், புராணவியல், மெய்ப்பொருளியல், சிற்பவியல், வானியல், விலங்கியல், இயற்பியல், தாவரவியல் என்ற பொதுப்பகுப்பில் பிரித்தும் ஒவ்வொன்றிற்கும் உட்தலைப்புகளிட்டு நுணுகியும், பெருக்கியும் விளக்கமாக ஆராய முயல்வோர்க்கு நூற்றுக்கணக்கான செய்திகளைத் தேவார ஒளிநெறி நல்கும். காட்டாக ஒளிநெறியில் சமூகவியல் கூறுகளை நோக்க வேண்டுமென விழைவோர்க்கு மக்களின் சாதி (சம்பந்தர், தொகுதி 1, பக். 334 - 337), பழக்க வழக்கங்கள் (சுந்தரர், பக். 577-578, அப்பர் தொகுதி 2, பக். 245-246), தொழில் பிரிவுகள் (சம்பந்தர், தொகுதி 3, தலைப்பு எண். 272) முதலான பல செய்திகள் கிடைக்கக் காணலாம். விலங்கியலில் ஊர்வன, பறப்பன (மேலது, பக். 688-692, 692-706) என விலங்குகளின் பெயர்கள், இயக்கங்கள் அவற்றின் தன்மை முதலான பல செய்திகளை நூல் தாங்கியுள்ளது. இதேபோன்று மேற்சுட்டிய எத்துறை குறித்த விளக்கமும் குறிப்பும் தேவையெனில் ஒளிநெறியில் காணலாம். தேவார ஆசிரியர்களின் பல்துறைப் புலமையை ஒளிநெறி விளக்கிட்டு வெளிப்படுத்தியுள்ளது.

## பாடபேதம்

பன்னூறு ஆண்டுகளுக்கு முந்தைய நூலானமையால் பாடபேதங்கள் தேவாரத்துள் ஏற்படுதல் இயல்பு. தேவாரத் திருப்பதிகங்களைப் பதிப்பிக்க விழைவோர்க்கும் ஆராய்ச்சியில் ஈடுபடுவோர்க்கும் உதவும் வகையில் ஆங்காங்குப் பாடபேதம் காணுமிடங்களில் பாடபேதங்களைக் குறித்துள்ளார். பாடபேதக் குறிப்புகளை ஒளிநெறியில் தணிகைமணி குறிப்பிட்டுள்ளமைக்குக் கீழ்க்காணும் தொடர்கள் காட்டுகளாகின்றன.

"சால நல அழகுடை ஐயர்" 34-10 என்ற தொடருக்குப் பாட பேதமாக, "சால நல் வழக்குடையே" என்றும் பாடம் எனக் குறித்துள்ளார் (மேலது, ப. 599).

"மருளாளர் பொழில் வண்டறையும் . . . . கொன்றை" 97.2

என்பதற்கு, "மருளாளர் மொழி" என்றும் பாடம் (மேலது, ப. 703) எனக் குறித்துள்ளார். மேலும், "தீராக் குலையாளர் 88.9" என்ற தொடருக்குக் "கொலையாளர்" என்று (மேலது, ப. 62) பாடபேதம் சுட்டியுள்ளார். இவ்வாறு பல பாடபேதங்கள் ஒளிநெறி ஆசிரியரால் ஒளிநெறியில் பதிவு செய்யப் பெற்றுள்ளன. இக்குறிப்புகள் பதிப்புப்பணியில் ஈடுபடுவோர்க்கு மிகுந்த பயனை அளிப்பதோடு ஆய்விற்கும் துணை நிற்கும்.

**நிறைவாக. . .**

தேவாரம் என்பது மூவர் முதலிகளால் பாடப்பெற்றுள்ள பக்திப் பனுவல்களின் தொகுப்பு என்று பேசுவோரையும் சிந்திப்போரையும் ஒளிநெறி நூல்களில் இடம்பெற்றுள்ள தலைப்புகளின் வாயிலாகப் பெறலாகும் செய்திகள் அவர்களது சிந்தனையை மாற்றிவிடும். மேலும் அத்தகையோர் தேவாரப் பாக்கள் பல்துறைக் களஞ்சியங்களாகத் திகழ்கின்றன என்னும் உண்மையினையும் உணர்வர். இதற்குக் காரணமாகத் திகழ்வது தணிகைமணியின் பகுப்பாய்வுத் திறனேயாகும். பழமையான இலக்கண இலக்கிய நூல்கள் மட்டுமன்றி எதிர்காலத்திற்குரிய அறிவியற் கருத்துகளையும் தேவாரப் பாடல்கள் பதிவு செய்து வைத்துள்ளன. இதனை ஒளிநெறி நூல்கள் வெளிப்படுத்தியுள்ளன. தேவாரத்தை எக்காலத்தும் எத்துறை நாட்டமுடையோரும் அணுகுதற்கும் ஆய்வதற்கும் சிந்திப்பதற்கும் துணைநிற்கும் ஒளிநெறியினை விட்டு விலகி எவரும் புதுமைகளைத் தேடவியலாது. ஒளிநெறிக் கீற்றுகளைப் பற்றியே தேவார ஆராய்ச்சிக்கு வலிவும் பொலிவும் ஏற்றிடவியலும் என்பது தணிகைமணியின் பகுப்பாய்வுத் திறனுக்குக் கிடைத்த வெற்றியாகும்.

******

# ஆய்வுத் திறன்

பு. பாலாஜி

சைவ சமயத் தொண்டுலகில் அறிஞர் பெருமக்களுள் முத்தாய்ப்பாகத் திகழும் தணிகைமணி வ.சு. செங்கல்வராயரின் ஆய்வுத்திறன் இக்கட்டுரையில் நோக்கப்படுகிறது.

## ஒளிநெறி நூல்களின் நோக்கம்

முருகப் பெருமானை வணங்குவதை வாழ்வு நோக்கமாகக் கொண்ட செங்கல்வராயர், 'தேவாரத்தை ஆய்க' எனும் அருணகிரியாரின் உபதேசத்தைத் தன் சிரமேற்கொண்டு வாழ்வுப் பணியாக்கினார்.

தேவாரத்தில் ஆங்காங்கு உள்ள செய்திகள் அவ்வத் தலைப்பின் கீழ் அகராதி முறையில் ஓரிடமாக வரிசைப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் அமைந்தது. தேவாரத்திலிருந்து ஏதாவதொரு சொல் அல்லது பொருளைச் சொன்னாலும் அந்தச் சொல் அந்தப் பொருள் இன்ன பதிகத்தில் இன்ன பாட்டில் உள்ளது என்று அகராதியில் ஒரு சொல்லை எடுப்பதுபோல் எடுக்க எளிதாக அமையவேண்டும். இத்தகைய பயன்பாட்டை நோக்கமாகக் கொண்டு தேவார ஒளிநெறி நூல்களையும், தேவார ஒளிநெறிக் கட்டுரைகளையும் ஆய்வாளர் உருவாக்கியுள்ளார்.

தேவாரத்துள் ஆங்காங்குக் காணப்படுவனவற்றை முறைப்படுத்தி எளிமை, இனிமை அமைய முயன்று யாத்துள்ளமை வரவேற்புக்குரியது. இதனைக் கற்பவர் தேவாரத்தின் முழுப்பயனையும் உணர்வதுடன் அதனைக் கற்கும் வழியையும் தெரிந்து கொள்வர்.

## திருமுறையில் அறிஞரின் பங்கு

தமிழாய்வறிஞர் தணிகைமணியார் திருமுறையின் பெரும் பகுதியை ஆய்வு செய்துள்ளார். தேவார ஒளிநெறி எனும் தலைப்பில் திருஞான சம்பந்தரின், தேவாரப் பதிகங்கட்கு 1600 பக்கங்களில் 3 பகுதிகளும், திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கட்கு 1086 பக்கங்களில் 9 பகுதிகளும், சுந்தரர் தேவாரப் பதிகங்களுக்கு 740 பக்கங்களில் 6 பகுதிகளும் மாணிக்கவாசகர் திருவாசகப்பதிகங்களுக்குத் திருவாசக ஒளிநெறி எனும் தலைப்பில் 644 பக்கங்களில் ஒரு பகுதியும் எனத் திருமுறை ஆய்வுகள் அமைகின்றன. திருக்கோவையார் ஒளிநெறி திருவிசைப்பா ஒளிநெறி என்பனவும் இதன்பாற்படும்.

தேவார ஒளிநெறிக் கட்டுரைகள் எனும் தலைப்பில் 336 பக்கங்களில் சம்பந்தருக்கும், 261 பக்கங்களில் திருநாவுக்கரசருக்கும் 286 பக்கங்களில் சுந்தரருக்கும், 336 பக்கங்களில் மாணிக்கவாசகருக்கும் 139 பக்கங்களில் திருக்கோவையாருக்கும், 285 பக்கங்களில் திருவிசைப்பாவிற்கும் எனத் தனித்தனியாக ஆறு நூல்கள் ஒளி நெறிநூல்களின் சாரமாக அமைகின்றன.

## ஆய்வுக்களம்

தணிகைமணியின் தமிழ்க் கொடைகள் பல இருப்பினும் திருமுறை ஒளிநெறி ஆய்வில் திருவாசக ஒளி நெறியும், சுந்தரரின் தேவார ஒளி நெறியும் அப்பரின் தேவார ஒளி நெறிக் கட்டுரையும் அறிஞரின் ஆய்வுத் திறனுக்காக நோக்கப்படுகின்றன.

## தேவார ஒளிநெறி பெயர்க்காரணம்

தமிழறிஞரே இப்பெயர்க்காரணத்தைக் குறிப்பிடுகிறார். தேவாரம் என்ற சொல்லை உமாபதி சிவாச்சாரியார் சிவக்ஷேத்திர சிவநாகம் கலிவெண்பாவில் கண்ணி 288 இல் குறிப்பிடுகிறார்.

தேவாரத்தில் உள்ள பொருளை அவ்வத் **தலைப்பின் கீழ் விளக்கமாக எடுத்துக் காட்டும் காரணத்தால்** இவ்வாராய்ச்சி நூல்களுக்குத் தேவார ஒளிநெறி எனப் பெயர் சுட்டப்பெற்றது. 'ஒளிநெறி' என்ற தொடர் திருஞானசம்பந்தரின் திருவெழுக் கூற்றிருக்கையில்

> "ஓரால் நீழல் உன் கழல் இரண்டும் முப்பொழுதேத்திய
> நால்வர்க்கு ஒளிநெறி காட்டினன்"

என்னும் மறைமொழி வழிப் பெறப்பட்டதாகும் என்கிறார் அறிஞர்.

## ஆய்வு நூல்களின் உள்ளுறை

தேவார ஒளிநெறி நூல்களின் உள்ளுறைகளை நோக்கினால் ஆய்வுப் போக்குத் தெளிவுறும்.

அனைத்து ஒளிநெறி உள்ளுறை தலைப்புகளையும் நோக்கும் பொழுது (1) ஆராய்ச்சித் தலைப்புகள் (2) தலங்கள் (3) ஒப்புமைப்பகுதி, (4) பதிக அமைப்பு எனும் பகுப்பில் அறிஞர் ஆய்ந்திருப்பதை அறியலாம்.

## ஒளிநெறி நூல்களில் செய்திகள் அமைந்த முறை

தேவார ஒளிநெறியில் செய்திகள் அமைந்த முறையைச் சம்பந்தரின் தேவார ஒளிநெறி கொண்டு உய்த்துணரலாம்.

1. சம்பந்தரின் தேவாரப் பாக்கள் 3 திருமுறைகளில் உள்ளனவும், திருவிடைவாய்ப்பதிகத்தையும் சேர்த்து 384 பதிகங்கள் ஆகின்றன. பண்முறை தேவாரப் பதிப்பின்படி ஒன்று முதல் 384 வரை பதிகங்கள் வரிசையாய் எண்ணிட்டு அந்த எண்கள் ஆராய்ச்சியில் குறிக்கப்படுகின்றன.

ஒரு தலைப்பின் நேரே 124-4 என இருந்தால் முதல் எண் 124 பதிகத்தையும், எண் 4 அப்பதிகத்தில் அத் தலைப்பு வரும் பாட்டின் எண்ணையும் குறிக்கும். ஏதேனும் ஒரு செய்தி 3 இடங்களுக்கு மேல் ஒரு பதிகத்தில் வந்தால் பதிக எண் மாத்திரம் குறிக்கப்படும் பாட்டின் எண் குறிக்கப்படமாட்டா. இந்த எண்ணுள்ள பதிகம் அந்தத் தலத்துத் தேவாரம் என்று தெரிய '**பதிக எண்களின் விளக்கம்**' என்றும் ஓர் அட்டவணை அச்சிடப்பட்டுள்ளது. அதில் இந்த எண் இந்தத் தலத்தின் பதிகம், அப்பதிகத்தின் முதல் இன்னது என விளக்கப் பட்டுள்ளது.

உதாரணமாக '**52இல் 9 அரசர்**' என்னும் தலைப்பில் பஞ்சவர் 62-5 எனக் குறிப்பிட்டுள்ளது. இதன் விளக்கம் 62ஆவது பதிகம் எது எனத் தெரியவேண்டின் பதிக எண்களின் விளக்கம் என்னும் அட்டவணையில் 62 என்னும் எண்ணுக்கு நேராகப் பார்த்தால் -அது திருக்கோளவிப்பதிகம் என்பதும் 'நாளாய' எனத் தொடங்கும் பதிகம் என்பதும் பெறப்படும். ஆதலால் சம்பந்தர் தேவாரம் எந்தப் பதிப்பு கையிலிருந்தாலும் இவ்வாராய்ச்சி நூலை எளிதில் பயன்படுத்தலாம்.

2) தலங்கள் அகராதியில் அவ்வத் தலங்களுக்குரிய பதிக எண்கள் தலத்துக்கு நேரே குறிக்கப்பட்டுள்ளன. ஓர் அட்டவணையும் அச்சிடப்பட்டுள்ளது.

3) கணபதி எனும் தலைப்பை முதலாவதாக்கிப் பிற எல்லாத் தலைப்புகளையும் அகராதி முறையாக அமைத்து ஒளிநெறி நூல்கள் அச்சிடப்பட்டுள்ளன. எவ்வெத் தலைப்புகள் இவ்வாராய்ச்சியில் வருகின்றன என்பதனைக் காட்ட '**ஆராய்ச்சித் தலைப்புக்களும், தலைப்புக்களின் எண்ணும்**' எனத் தனி அட்டவணை ஒன்றும் அச்சிடப்பட்டுள்ளது.

4) ஒரு செய்தி ஒன்றுக்கு மேற்பட்ட தலைப்பில் வருமாயின், தலைப்புகள் எல்லாவற்றிலும் அது குறிக்கப் பட்டுள்ளது.

இவ்வாறு சம்பந்தரின் ஒளிநெறிக்கு அமைந்த முறைமை பிறவற்றுக்கும் அமைகின்றது. இனி, திருவாசக ஒளிநெறி அமைந்த முறையையும், சுந்தரர் தேவார ஒளிநெறி அமைந்த முறையையும் விரிவாகக் காண்போம்.

## திருவாசக ஒளிநெறி

திருவாசக ஒளிநெறியின் உள்ளுறைப் பகுதியில் உள்ள தலைப்புகளுள் முதலில் ஒப்புமைப்பகுதி 64 பக்கங்கள் கொண்டுள்ளது. அடுத்துச் சிவபிரான் பகுதி 113 தலைப்புகளிலும், மணிவாசகர் பகுதி 33 தலைப்புகளிலும், திருவாசக ஆய்வு - 51 தலைப்புகளிலும், பிற பொருள் பகுதி 231 தலைப்புகளிலும், இலக்கணப் பகுதி 33 தலைப்புகளிலும் அமைகின்றன. முதற்கண் திருவாசகப் பதிகம் தலைப்புகள் நூலில் அமைந்த வரிசைப்படி ஒரு பக்கத்திலும் அடுத்த பக்கத்தில் அகரவரிசைப்படுத்திப் பதிக எண் இட்டும் அமைக்கப்பட்டுள்ளது.

### 1. ஒப்புமைப்பகுதி

இன்ன அடியின் கருத்தை இன்ன இன்ன நூலில் காணலாம் எனக் காட்டப்பட்டுள்ளது. எ.கா. “இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க”. இத்தொடரை அப்பர்,

“நெஞ்சே உமக்கே இடமாக வைத்தேன் நினையாது
ஒருபோதும்இருந்தறியேன்” (4-1-2)

எனக்கூறியுள்ளமை ஒப்புக்காட்டப்படுகிறது. இதுபோன்ற செய்திகள் 63 பக்கங்களில் அமைகின்றன. அடுத்த இரண்டு பக்கங்களில் ஒப்புமைப் பகுதியில் எடுத்தாண்ட நூல்களும் உரிய தேவாரப் பதிக எண்ணும் என ஓர் அட்டவணை அமைகிறது.

எ.கா.

| ஆளும்நூல் | ஆளும் நூலின்விவரம் | திருவாசகத்தில் ஆளப்படும் இடம் (விவரம் II (1) பார்க்க |
|---|---|---|
| சிந்தாமணி | 1513 உரையில் | பதிக எண் - பாடியஉரை |
| | | 5 - 4 |

இங்கு 1 சீவகசிந்தாமணி, 2. சிவஞானபாடியம், 3. சிவஞான போதம் உரை, 4. தாயுமானவர் அறிஞர் உரை, 5. திருக்களிற்றுப் பாடியார், 6.திருக்கோவையார், 7. திருமுருகாற்றுப்படை, 8. நன்னூல் எனும் எட்டு நூல்களிலிருந்து 41 இடங்களுக்கு ஒப்புமை காட்டப் படுகின்றன.

## திருவாசக ஒளிநெறி நூல் செய்திகள்

முதலாவதாகச் சிவபிரான் பகுதி 107 தலைப்புகளில் 207 பக்கங்களில் இடம் பெறுகின்றன.

எ.கா.

தலைப்பு. 5 சிவபிரான் காதில் அணிவன

. காதாடு குண்டலங்கள் 16-6

. குழை 10-8

ஒரு தலைப்பின் கீழ்க் குறைந்தது ஒரு செய்தியும் (24. ஆசை - பேராசை வாரியனை 8-2) அதிகப்படியாக 70க்கு மேற்பட்ட செய்திகளும் அமைகின்றன.

இவ்வாறு மேற்குறித்த 107 தலைப்புகளில் குறிப்பிடத்தக்கனவாகச் சிவனின் அட்டவீரச் செயல், சிவன் அணிவன, சிவனின் அபிடேகப் பொருள், அர்த்தநாரீசுவரம், சிவனின் உறைவிடம், சிவன் எடுத்த வேடமும் லீலைகளும், சிவனின் கொடி, சிவன் சுடர் - ஒளி - சோதி, சிவனின் தன்மை, சிவனின் திருவுருவம், சிவனின் திருநாமங்கள், சிவனின் திருவடி, சிவன் நஞ்சுண்டது, சிவநடம், ஆடல், சிவன் பாம்பாட்டியது, சிவனின் வாகனம், சிவனால் தண்டிக்கப்பட்டவர்கள், சிவ அடியார், சிவனும் அன்பும், உயிரும் ஊனும், சிவனும் காலமும், சிவனும் தவமும் தவத்தினரும், சிவனும் திருமாலும், சிவனும் தேவர்களும், சிவனும் பஞ்ச பூதமும், சிவனும் பலியும், சிவனும் முனிவரும், சிவனும் மெய்ம்மையும், சிவனும் வானும், சிவனும் வேள்வியும் என்பன அமைகின்றன. அடுத்து அமைவது மணிவாசகர் பகுதி.

## மணிவாசகர் பகுதி

இப்பகுதியில் 33 தலைப்புகளில் 109 பக்கங்களில் செய்திகள் அமைகின்றன. குறிப்பிடத்தக்க தலைப்புகளாக மணிவாசகரும் அடியாரும் சிவனும், மணிவாசகர் தம்குறை கூறல், மணிவாசகர் தம்மைப் பற்றியவை, தம்மை வைதல், மணிவாசகரும் பொய்யும், மணிவாசகரும் மாதரும், மணிவாசகர் பிரிவாற்றாமை, மணிவாசகர்

குறிக்கும் கொள்கைகள், மணிவாசகர் பக்தி நிலை, மணிவாசகர் விரும்புவன, ஆசைப்பட்டன, வேண்டுகோள்களும் முறையீடுகளும், சிவபிரானைப் பாராட்டுவது, கண்ட அதிசய நிகழ்ச்சிகள், மணிவாசகர் பெற்ற பேறு பெறும் பேறு, நன்றி பாராட்டல், கருணையை வியத்தல், மணிவாசகரின் உறுதி, அதி ஆடல்.

மணிவாசகர் 'அழுகேன் நின்பால் அன்பாம் மனமாய்' (9-88) என இருந்தவர் சிவனை வைதல் ஏசுதல் என்ற நிகழ்வுக்கு ஆட்படுவதும் பித்தன் (12-9), பிச்சன் (6-49), தேய் மதியன் (6-46), மதிமயங்கி (10-2) என ஏசும் சொற்கள் அமைவதும் ஒப்பு நோக்க முடிகிறது. இவ்வாறு உடனுக்குடன் ஒருங்கிணைந்த பொருள் கண்டு மேலாய்வு செய்வதற்கு எளிதாகக் கருத்தடைவு உள்ளது.

மணிவாசகர் வரலாறு 24 பக்கங்களில் 25 உட்தலைப்புகளில் இடம் பெறுகின்றது. அடுத்து விசேடச் செய்தியும், அருமை கருத்துகளும் இறுதியாக மணிவாசகரின் உபதேசங்களும் அமைகின்றன.

## மணிவாசகர் வரலாறு

இப்பகுதியில் அமையும் தலைப்புகளாக 25 செய்திகள் அமைகின்றன. 1. தம்மிடமிருந்து நீக்கிப் பூமியில் சிவபிரான் தன்னை வாழச்செய்தது, 2. ஆட்கொள்ளும் முன் மணிவாசகர்நிலை, 3. சிவபிரான் (தமக்காகவும் பிறருக்காகவும்) ஆட்கொண்டு அருள இப்பூமிக்கு வந்தது, 4. திருப்பெருந்துறையில் இறைவனைத் தரிசித்ததும் இறைவனுடைய திரு உருத் தோற்றமும், தரிசித்ததனால் தன்நிலையும், 5. திரு உருவத் தரிசனம், 6. திருவடித் தரிசனமும் சிலம்பொலி கேட்டலும், 7. ஆட்கொண்டதும், ஆட்கொண்ட வகையும், 8. அந்தணனாய் ஆட்கொண்டது, 9. குருமணியாக வந்தது. குருமணியாய் உபதேசித்தது, 10. கண்ணோக்க தீட்சை, 11. மணிவாசகரும் திருநீறும், 12. திருவடி தீட்சையும், அதனால் பெற்ற பயனும், 13. அருள்பாலித்தது, அருளித் தன்னை மேம்படுத்தியது, அருளியவகை, 14. குடிமுழுதாண்டது, 15. தேவியும் பிரானுமாக ஆட்கொண்டு அருளியது, 16. நரிபரியாக்கிப் பாண்டியன் முன் பிரான் வந்தது, 17. சிவபிரான் குதிரைமேல் வந்தது, 18. சிவபிரான் பிட்டுக்கு மண் சுமந்தது, 19. இறைவன் சோதியைக் காட்டி ஏனைய அடியார்களினின்றும் தன்னைப் பிரித்து அவ்வடியார்களுடன் சோதியில் மறைந்ததும், தனது ஆற்றாமையும், 20. மணிவாசகர் தமது யாக்கையை வெறுத்தல், 21. மணிவாசகரும் உலக மக்களும், 22. தம்மைத் தில்லைக்கு வா எனப்பிரான் அழைத்தது, 23. மணிவாசகரும் திருக்கழுக்குன்றமும், 24. மணிவாசகரும் தில்லையும்,

25. மணிவாசகர் மறைவு - தில்லை அம்பலத்தில் பெருமானுடைய திருவடியைச் சேர விரும்பிய எம்பெருமான் தன்னை வா என அழைத்தது என்பன அமைகின்றன.

### மணிவாசகரின் உபதேசங்கள்

மணிவாசகரின் உபதேசங்கள் 4 பக்கங்களில் இடம் பெறுகின்றன. சிறப்பாக அடியார்க்கும், பொதுவாக உலகுக்கும் இப்பகுதி அமைகின்றது. எ.கா.

அடியார் ஆனீர் எல்லீரும் அகல விடுமின்
விளையாட்டை 45-4
புகவே வேண்டாம் புலன்களில் நீர் 45 - 2
காமுண்டாகவே காதல் செய்துய்மின் 36 - 5
எச்சத்தார் சிறு தெய்வம் ஏத்தாதே 38 - 4
மிக்க வெல்லாம் வேண்டாம் போக விருமின்கள் 45-2
இகழ்மின் எல்லா அல்லலையும் இனியோர்
இடையூறடையாமே 45-6
காயத்துள் அமுது ஊற ஊற நீ கண்டுகொள் 42-5

### திருவாசகப் பதிக ஆய்வு

இப்பகுதியில் பதினைந்து பதிகங்கள் ஆய்வுக்கு உட்படுத்தப் படுகின்றன. மீதம் உள்ளவை முன்பு ஆங்காங்கு ஆய்வு செய்யப்பட்டதாகக் குறிப்பு உள்ளது. 7. திருவெம்பாவை, 8. திருவம்மானை, 9. திருப்பொற்சுண்ணம், 10. திருக்கோத்தும்பி, 11. திருத்தெள்ளேணம், 12. திருச்சாழல், 13. திருப்பூவல்லி, 14. திருவுந்தியார், 15. திருத்தோணோக்கம், 16. திருப்பொன்னூசல் 17. அன்னைப் பத்து, 18. குயிற் பத்து, 19. திருத்தசாங்கம், 35. அச்சப் பத்து, 49. திருப்படையாட்சி என்பன விரித்து நோக்கப்பட்டனவாக உள்ளன.

பதிகப் பாடல்களின் கருத்துகள் சுருக்கமாகவும் தெளிவாகவும் இடம்பெறும் செய்திகளின் அடிப்படையில் எடுத்தியம்பப்படுகின்றன. ஒன்பதாம் பதிகம் திருப்பொற் சுண்ணத்தில் 1. பொற்சுண்ணத்திற்கு வேண்டிய பொருள்களும் பொருள்களின் விளக்கமும், 2 பொற்சுண்ணம் இடிக்கும் முன் செய்யவேண்டிய அலங்காரங்களைப் பற்றி மாணிக்கவாசகர் இடும் கட்டளை, 3. யார் யாரை அழைத்து வேலையிடுகிறார், 4. பொற்சுண்ணம் எப்படி இடிக்க வேண்டும், 5. பொற் சுண்ணம் இடிக்கும்போது யார் மீது எதைப் பற்றி, யாரை வாழ்த்தி, என்ன சொல்லி என்ன நிலையில் பாடல் பாடி இடிக்க வேண்டும், 6. பொற்

சுண்ணம் யார் பொருட்டு யார் முழுக்காட்டுக்காக இடிப்பது, 7. இடித்தலின் பயன் (பிறவி பிறரொடும் ஆட ஆடப் பொற் சுண்ணம் இடித்து நாமே 9 - 10), என அமைவதைச் சான்றாக்கலாம்.

திருச்சாழல் பகுதியில் வினாவிடை பாங்கில் கருத்துகள் எளிய நடையில் அமைகின்றன. திருப்பூவல்லிப் பதிகத்தில் மணிவாசகர் தம்மைத் தலைவியாகக் கொண்டு தோழியருடன் பூக்கொய்யும் போது என்ன பாடி, எதைப் பற்றிப் பாடிப் பூக் கொய்ய வேண்டும் என விளக்குகிறார். பூவல்லி கொய்வதால் மாயப்பிறப்பு நீங்கும் (13-3) எனப்படுகிறது. திருப்படையாட்சிப் பதிக ஆய்வில் சிவபிரானுடைய படைத் தொண்டர்கள் என்போர் பக்தர்கள், யோகிகள், சித்தர்கள் ஆகிய இவர்களே. திருப்படை எழுச்சி 46 பார்க்க எனச் சுட்டப்பட்டுள்ளது. இதன் கீழ் ஐந்து பக்கங்களில் செய்திகள் தொகுத்தளிக்கப்படுகின்றன. திருப்படையாட்சியில் 'ஆகாதே' எனும் சொல்லுக்குப் பல இடங்களில் 'ஆகும்' என்ற பொருளும், இரண்டொரு இடங்களில் 'ஆகாதே' எனும் பொருளும் சாதாரண அறிவுக்குப் பொருத்தமாய் இருக்கின்றன. அகப்பொருள் அடிகளும் கலந்துள்ளன என்கிறார் ஆய்வறிஞர். இவ்வாறு தேவைப்படும் இடத்தில் தெளிவு, உரிய இடத்தில் மேற்கோள் எனப் பதிக ஆய்வுப் பகுதி செம்மையாய்த் திகழ்கிறது.

## பிறபொருட் பகுதி

இப்பகுதி 248 பக்கங்களில் 231 தலைப்புகளைக் கொண்டுள்ளது. இவற்றுள் குறிப்பிடத்தக்கனவாக 2. அகப்பொருள், 4. அடியார், 6. அடுக்கு, 12. அரசர், 19. ஆகமம், 28. இசை - பண், 32. இருள் - அஞ்ஞானம், 38. உடல் ஊன், 42. உலகங்கள், 45. உவமைச் சொற்கள், 49. எண்கள், 50. எதிர்மொழி, 52. ஐம்புலன் - ஐம்புலன் சேட்டை - ஐம்பொறி, 53. ஒரு சொல் சொற்றொடர், இருபொருளில் 55. ஒலி; ஒலிக்குறிப்பு, ஓசை, 56. ஒன்று, ஒன்றும் என்னும் சொற்களின் ஆட்சி, 62. கடல், திரை 59. ஓம் ஓங்காரம், 82. குணம், 87, சமயம் சமயவாதிகள், 98. சொல்லழகு - பொருளழகு, 99. சொல்விளக்கம், பொருள் விளக்கம், 103. தலங்கள் (12 பக்கங்களில்), 110. திருநீறு, 111. திருமால், 112. திருவிளையாடல், 118. தேவர், 123. தோத்திரம், போற்றி, 126. நகைகள் 130. நாடு தீவு தேசம், 135. நீதிவாக்கியம், பழமொழிகள் முதலியன, 139. நெஞ்சம், மனம், சித்தம் முதலியன, 141. நெறி, 144. பஞ்சபூதங்கள், 148. பத்திநிலை மெய்ப்பாடு, 150. பதிகத்தொடக்கம், 152. பதிகப் பாகுபாடு, 153. பதிக முடிவு, 154. பதிகமும் தலமும், 155. பழக்கவழக்கங்கள், 161. பாடல் சுவைவகை, 162. பாடல்

விசேடங்கள், 163. பார்வதி, 171. பிறப்பு, இறப்பு, 176. பொய் பொய்ம்மை, 179. பொருள் 189. மலர், 193. மனப்பாடத்துக்குரிய பாடல், 194. மாதர், 195. முனிவர், தவத்தினர், பெரியோர், 204. யோகம் - யோகியர் என்பன அமைகின்றன.

யோகத்தை - ஒழிவற நிறைந்த யோகமே (37-1), என்றும், பழமொழி - கடலினுள் நாய் நக்கியாங்கு (6:13) என்றும், தோத்திரத்தில் போற்றி என அகராதி வரிசையில் அமலா போற்றி (4.104), அரசே போற்றி (4-149), அப்பா போற்றி (45-161), அறிவே போற்றி (4-107), அழகே போற்றி (4-126), ஐயா போற்றி (4-112) எனப் பல செய்திகள் ஒருங்கிணைந்து இடம்பெறுகின்றன. சமூகச் செய்திகளைப் பழமொழிகளிலும், நீதி வாக்கியங்களிலும் காண முடிகிறது. உளவியல் செய்திகள் சித்தம், உள்ளம் எனும் தலைப்புகளில் அமைகின்றன. இது போலப் பிறதுறை நோக்கில் ஆய்பவருக்கு நல்ல ஆய்வுக் களனாகச் செய்திகள் தொகுத்தளிக்கப் பட்டுள்ளன.

### இலக்கணப் பகுதி

இப்பகுதி 33 தலைப்புகளில் 29 பக்கங்களில் அமைந்துள்ளது. அணிகள், ஆகுபெயர், இடைநிலை, தீபம், ஏகாரம்,குறை, சாதிஒருமை, மரூஉ, போலி, விகாரம், வினைத் தொகை, வேற்றுமையுருபு என்பன குறிப்பிடத்தக்கன.

எ.கா.

அயனொடுமால் 39-1 - மூன்றாம் வேற்றுமை உருபு
அந்தமிலா ஆனந்தம் - ஆகுபெயர் - இறைவனைக் குறிக்கும்
வேட்கை வெந்நீர் (6-41) - உருவக அணி

### அநுபந்தம்

நூலின் இறுதியாக 3 அநுபந்தங்கள் உள்ளன.

அநுபந்தம் 1 : மாணிக்கவாசகர் பற்றிய குறிப்புகளாகப் பிறப்பு, காலம், பாடல் தொகை, பெயர்கள், வயது, பெருமை, உபதேச பொன்மொழிகள், முத்தியடைந்த திரு நட்சத்திரம் எனும் தலைப்புகளின் கீழ் செய்திகள் உள்ளன.

அநுபந்தம் 2: இப்பகுதியில் திருவாசகம் ஒரு முத்தமிழ் நூல் எனும் பொருண்மையில் செய்திகள் அமைகின்றன. 1. இயற்றமிழ், 2. இசைத் தமிழாக அமையும் 51 பதிகத்திற்கும் இசைக் குறிப்புகள் குறிக்கப்படுகின்றன.

எ.கா. 1. சிவபுராணம் - சங்கராபரணம் ராகத்தில் பழம் பஞ்சரப் பண்ணில் பாடவேண்டும்.

2. அன்னைப் பத்து - நாலுசீர்; இது சம்பந்தர் தேவாரத்தில் எட்டுத்திசைக்கும் III-95 என்னும் பதிகத்தை, ஒருவாறு ஒக்கும். ஆதலால் இதைப் பண் சாதாரியில் (இராகம் - பந்து வராளியில்) பாடலாம்.

3. நாடகத் தமிழ் என்பதற்குச் சான்றாகப் பல அங்கங்களும், காட்சிகளும் அமைகின்றன. 1) திருவெம்பாவையில் - தலைவி சில பெண்களுடன் இறைவனுடைய புகழைப் பாடிச்சென்று கூடித் தமதுதோழியாம் ஒரு பெண்ணைத் துயில் எழுப்பும் காட்சி. 2) திருத்தசாங்கத்தில் - தலைவி கிளியை விளித்து இறைவனுடைய திருநாமம், நாடு முதலிய தசாங்கங்கள் எவை எனக்கேட்டு விடை அளிக்கும் காட்சி அமைகிறது.

அநுபந்தம் 3 : இதில் அருமைச் சொற்களும், சொற்றொடர்கள் சிலவும் உள்ளன. இறுதியில் பிழை திருத்தம் அமைகிறது.

திருவாசக ஒளிநெறி, அறிஞருக்குத் தெரிந்த அனைத்து வகையிலும் பகுத்தாய்ந்தமையைப் புலப்படுத்துகிறது.

**சுந்தரர் தேவார ஒளிநெறி**

இந்நூலின் முதல் 13 பக்கங்களில் ஆராய்ச்சித் தலைப்புகளும் தலைப்புகளின் எண்ணும் உள்ளன. அடுத்து 4 முற்சேர்க்கை உள்ளன.

முற்சேர்க்கை 1: இப்பகுதியில் தேவார ஒளிநெறியில் காட்டிய பதிக எண்களின் விளக்கம் அமைகிறது. எ.கா.

| பதிகஎண் | தலம் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|
| 1 | திருவெண்ணெய்நல்லூர் | பித்தா பிறை |
| 2 | திருப்பரங்குன்றம் | கோத்திட்டை |

இதுபோல 100 பதிகங்களுக்கு அட்டவணை உள்ளது.

முற்சேர்க்கை 2: இப்பகுதியில் சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப்பெற்ற தலங்களும், சொல்லப்பட்ட தலங்களும், அவைக்குரிய பதிக எண்களும் உள்ளன.

1. தடித்த அச்சில் உள்ள எண்கள் முழுப்பதிகங்களைக் குறிக்கும்.

2. வேறு தலத்துக்கு உரிய பதிகங்களில் சொல்லப்பட்ட தலங்கள் பதிக எண் இரண்டுடனும் குறிக்கப்பட்டுள்ளன. எ.கா.

| பதிகம் | பதிகஎண் | மொத்தப் பதிகம் |
|---|---|---|
| 1. அஞ்சைக் களம் | 4,(44), 100-10 | 1 |
| 2. அண்ணாமலை | 2-6; 31-3; 47-7 | |
| 3. ஆரூர் | 1-10; 41-10; 46-2; 8; 47-4; 51; 53-7; 59; 60-4; 70-6; 73, 83; 86-10; 89-11; 90-10; 95 | 8 |

இவ்வட்டவணைச் செய்திகள் 5 பக்கங்களில் அமைகின்றன. சுந்தரரது பாடல் பெற்ற தலங்கள் 84, சுந்தரரது தனிப்பதிகம் இல்லாதனவாய் அவருடைய பதிகங்களில் சொல்லப்பட்ட தேவாரம் பெற்ற தலங்கள் 59 ஆக மொத்தம் 143 (வைப்புத்தலம் அல்லாதன).

**முற்சேர்க்கை 3 :** இப்பகுதியில் 3½ பக்கங்களில் வைப்புத் தலங்கள் எனும் தலைப்புகளில் செய்திகள் 71 தலங்களுக்கு இடம் பெறுகின்றன.

எ.கா. 1. அளப்பூர் - 47-4 இது தரங்கம்பாடி எனப்படுகிறது.
2. ஆழியூர் - 12-7 சிக்கலுக்கும் கீழ்வேளூருக்கும் நடுவில் உள்ளது.
3. ஈசனூர் - 31-8 திருவாரூருக்குத் தென்கிழக்கில் 15 மைலில் உள்ள திருவாய்மூருக்குச் சமீபம்

**முற்சேர்க்கை 4:** ஒப்புமைப்பகுதி 49 பக்கங்களில் அமைகிறது. முதலில் 100 தொடர்கள் 43 பக்கங்களில் இடம்பெறுகின்றன. பகுதி IIஇல் ஒப்புமைப் பகுதியில் எடுத்தாளப்பட்ட நூல்களும் பதிக எண்களும் உள்ளன. எ.கா.

அகநானூறு 64, 99, ஆத்திசூடி -44, இவ்வாறு எடுத்தாளப்பட்ட 72 நூல்களின் வரிசை 1½ பக்கங்களில் அமைகிறது. பகுதி IIIஇல் ஒப்புமைப் பகுதியில் காட்டிய முக்கியச் செய்தி அகராதி, பதிக எண்ணுடன் அமைகிறது. எ.கா.

அடியார் கூசுதல் -77, ஐம்புல ஆட்சி - 60 என அகர வரிசையில் ஐந்து பக்கங்களில் அமைகின்றது. இறுதியாகப் பிற நூல்களில் எடுத்தாளப்பட்ட தேவாரப்பகுதி எடுத்தாளப்பட்டஇடம் என்பனவும் அரைப் பக்கத்தில் நிறைவுறுகின்றன.

## தேவார ஒளிநெறி நூல் செய்திகள்

261 தலைப்புகளில் 720 பக்கங்களில் செய்திகள் அமைகின்றன. இவற்றுள் குறிப்பிடத்தக்க தலைப்புகளாகப் பல அமைகின்றன. அவை 2. அகப்பொருள், 4. அடியார், அடியார் இலக்கணம், 5. அடியாரும் சிவனும், 6. அடியார் அல்லாதாரும் சிவனும், 7. அடுக்குச் சொற்கள், 9. அரசர் ஆட்சி, 13. ஆறுகள், 14. ஆற்று நீரில் வரும் பொருள்கள், 18. இலக்கணப்பகுதி, 21. இறத்தல் - இறக்கும்போது நிலை - இறந்த பின் நிகழ்வது, 23. உபதேசம், 25. உலகங்கள், 33. ஐந்தெழுத்து, 34. ஒரு பொருள் இரட்டைச் சொல், 44. கடல், 54. கொடை, 61. சிவன் அட்ட வீரச் செயல், 62. சிவன் உறைவிடம், 82. சிவன் தன்மை பெருமை, 83. சிவன் திருவுருவம், 84. நஞ்சுண்டது, 85. நடம், 86. திருநாமங்கள், 90. சிவபராக்ரமம், சிவசரிதம், 118. சிவனும் தேவர்களும், 119. சிவனும் தேவியும், 138. சுந்தரர் பாடலைக் குறிக்கும் சொற்கள் சொற்றொடர்கள், 141. வேண்டுகோளும் முறையீடும், 146. சுந்தரர் வரலாறு, 147. சுந்தரரின் பத்தி நிலை, 151. சுந்தரரும் பரவையாரும் சங்கிலியாரும், 156. சுந்தரரைக் குறிக்கும் பெயர்கள், 160. தமிழ், தமிழ்ப் புலவர், 161. தலங்கள், 164. தலம், சுவாமி பெயர், தேவி பெயர், தீர்த்தம், முதலிய, 169. தானியங்கள் - பயிர்கள் முதலிய, 172. தியானம், 182. தேவாரம் ஓதும் முறை, கற்கும் முறை, இவை தொடர்பான உபதேசம், 183. தேவாரம் ஓதுவதால் வரும் பயன், 184. தேவாரம் மனப்பாடத்துக்குரிய பதிகங்கள் பாடல்கள் சில, 186. தொகை, 190. நகைச்சுவை, 194. நாயன்மார்கள், 201. நெறி, 206. பதிகப் பாகுபாடு, 212. பழம், காய், பூவகைகள், 245. வழிபட்டோர் பேறுபெற்றோர் 246 வழிபாடு பூஜை துதி 254. வினாக்கள், 259. வேள்வி, 261. ஜீவ ராசிகள். இவற்றுள் சிலவற்றின் செய்திகள் எத்தகையனவாக உள்ளன என்பதைக் கீழ்நோக்குவோம்.

### 1. ஆறுகள்

பல ஆறுகள் குறிப்பிடப்படுகின்றன. அவை அரிசில், கங்கை, காஞ்சி, காவிரி, கெடிலம், கொள்ளிடம், கோதாவரி, சிற்றாறு, நிவா, பாலாவி, பாலாறு, பெண்ணை, மண்ணிநதி, முத்தாறு என 13 சுட்டப்படுகின்றன.

ஆற்றில் வரும் பொருள்களாக அகில், அரும்பு, அருமலையாரம், இஞ்சி, இலவங்கம், ஏலம், ஏனல், ஐவனம், கதலி, கதலிக்கனி, கமுகின் பழுக்காய், கயலினங்கள், கரும்பு கலைக்கொம்பு, கவரி (கவரிமாமயிர்), கழைநீர் முத்து, கறிமா மிளகு, கனி,

குங்குமங்கள், கோங்கு, செண்பகம், சந்து, நித்திலம், பவளக்கொடிகள், மணி, மயிர்ப்பீலி, மல்லிகை, மாலை, முத்தம், முத்து, வயிரம், வேங்கையின் மலர் முதலியன உள்ளன.

## 2. உபதேசம்

உபதேசம் தலைப்பினுள் பல உள. இறங்கிச் சென்று தொழுமின் கழுக்குன்றமே (81-2) வருந்தாமல் திருந்தச் சென்றுபாடுமின் பத்தருள்ளீர் பழமண்ணிப் படிக்கரையே (22-3) என உலகுக்கு உபதேசம் பல அமைகின்றன. அடுத்து நெஞ்சுக்கு அமையும் உபதேசமாக 'நெஞ்சமே . . . புறம்பயம் தொழப்போதுமே, பதியும் சுற்றமும் பெற்ற மக்களும் பண்டையரல்லர்; பெண்டிரும், நிதியில் அம்மனை வாழும் வாழ்க்கையும் நினைப் பொழிமட நெஞ்சமே, (35-2) என அமைகிறது. அடுத்துப் புலவருக்குக் கூறிய உபதேசமாக நலமிலாதானை நல்லனே என்றும் நரைத்த மாந்தரை இளையனே என்றும் குல மிலாதனைக் குலவனே என்றும் கூறினும் கொடுப்பாரிலை புகலூர் பாடுமின் புலவீர்கள்! அலமராது அமருலகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே (34-6) என்பன போன்ற பல அமைகின்றன.

## 3. சுந்தரரைக் குறிக்கும் பெயர்கள்

அடுத்துச் சுந்தரரைக் குறிக்கும் பெயர்களாக ஆரூரன் 478 இடங்களிலும், ஊரன் 39இடங்களிலும், வன்டொண்டர் 20 இடங்களிலும், அமைகின்றன. ஊரனேன், சடையன், சிங்கடிதந்தை, சிங்கடி தம்மான், சிங்கடியப்பன், சிங்கி தந்தை, திருநாவலவூரன், திருநாவலாரூரன், திருவாரூரன், நம்பி, நாவலர் கோமான், நாவலர்கோன், நாவலர் வேந்தன், நாவலவூரன், நாவலூராளி, பகை (ஞான)யப்பன், வனப்பகையப்பன் என்பன அமைகின்றன.

## 4. தமிழ், தமிழ்ப்புலவர்

அருந்தமிழ், ஆரூரன் தமிழ், இன்தமிழ், இன்னிசைத் தமிழ், இன்னிசையால் தமிழ் பரப்பும், உறுதமிழ், ஏழிசை இன்தமிழ், சந்தமிகு தண்டமிழ், சீரூர் செந்தமிழ்கள், செஞ்சொற் தமிழ் மாலைகள், செந்தமிழ், செந்தமிழ்த்திறம், தமிழ்ச்சீர், தமிழ் நூல் மாலை, தமிழ் மலர், தமிழிசைப் பாடல், திணைகொள் செந்தமிழ், நலத்தமிழ், நற்றமிழ், பண்ணாரின் தமிழ், பண்ணிடைத்தமிழ், பாவணத்தமிழ், பாவின் தமிழ், பண்ணின் தமிழிசை, பலங்கிளர் தமிழ், பன்னலந்தமிழ், பொய்யாத் தமிழ், வண்டமிழ் என்றெல்லாம் தமிழின் தன்மைகளை மிக அழகாகப் பட்டியலிட்டுள்ளார்.

தமிழ்ப்புலவர்கள் தண்டமிழ் நூற் புலவாணர், கலைமலிந்த தென்புலவர், கற்றோர், வண்டமிழ் வல்லவர்கள் எனக் குறிப்பிடப்படுகின்றனர்.

### 5. பதிகப்பாகுபாடு

இப்பகுதி இயற்றமிழ்ப்படி, நாடுகளின் படி, பண்வகையில், பிற, பதிக விசேடங்கள் எனும் பல பிரிவுகளில் அமைகிறது.

1. இயற்றமிழ்ப்படி - 1. 4 சீர் 3 கனி, 1 மா - 1,71,78, 79,80,82
   2. 5 சீர் 1 மா, 4 விளம் - 1250

2. நாடுகளின்படி 1) ஈழம்

| தலம் | பதிக எண் | மொத்தப் பதிகம் |
|---|---|---|
| கேதீச்சுரம் | 80 | 1 |

2) கொங்குநாடு

| தலம் | பதிக எண் | மொத்தப் பதிகம் |
|---|---|---|
| 1 அவிநாசி | 92 | 1 |
| 2 பாண்டிக் கொடுமுடி | 48 | 1 |
| 3 முருகன் பூண்டி | 49 | 1 |
| 4 வெஞ்சமாக்கூடல் | 42 | 4 |

இதில் பொதுப் பதிகங்கள் தனியாக உள்ளன. ஊர்த்தொகை -47

தலப்பதிகங்கள் - 96,
பொதுப்பதிகங்கள் - 4
----
100

3. பண்வகையில்

| பண் | பதிகஎண் | மொத்தம் | பண்ணுக்கு உரியராகம் |
|---|---|---|---|
| 1 இந்தளம் | 1-12 | 12 | நாத நாமக்கிரியை |
| 2. காந்தாரபஞ்சமம் | 77 | 1 | கேதார கௌளம் |
| 3 காந்தாரம் | 71-75 | 5 | நவரோசு |
| 4 குறிஞ்சி | 90-93 | 4 | குறிஞ்சி, சுருட்டி-ஆரபி |
| 5 கெய்லி | 31, 37 | 7 | கேதாரம், நவரோசு |

இச் செய்திகள் வழித் தமிழறிஞருக்கு இசையறிவும் மிகுந்து இருந்தமை புலனாகிறது.

### 3. அப்பர் தேவார ஒளிநெறிக் கட்டுரை

திருநாவுக்கரச நாயனார் கைத் தொண்டும் வாய்த் தொண்டும் ஒருங்கு புரிந்த பெருந்திருவினராயுள்ளார். இவரின்

ஒளிநெறிக் கட்டுரையில் தலைப்புகள் கணபதி முதல் ஜீவராசிகள் வரை 194 தலைப்புகள் 261 பக்கங்களில் இடம்பெறுகின்றன. இதனுள் நாயனார் வரலாற்றுக்கு வேண்டிய அகச் சான்றுகள், அகப்பொருள் பகுதிகள், இலக்கண இலக்கியங்கள், அடியார்க்கு ஆண்டவன் செய்யும் அருளிப்பாடுகள், அல்லாதாருக்குச் செய்யும் ஒறுத்தல்கள் ஆண்டவனிடம் வேண்டும் வேண்டுகோள்கள், அறிவியல் துறைகள், உலகியல் முறைகள், பழமொழிகள், திருவுருவச் சிறப்புகள், திருவிழாச் சீர்மைகள், வழிபாட்டு முறைகள், மெய்ப்பொருள் நூல் கருத்துகள், அடியாரடையும் இன்பப்பேறுகள், திருவூர்ச் சிறப்புகள், மன்னர் முறைமைகள், யாப்பு அணி முதலிய வனப்புகள், வழிபாட்டின் இன்றியமையாமை, பிறவிப் பெரும்பயன் முதலாகப் பல உள்ளன.

தமிழாய்வறிஞர் அரிதின் முயன்று தேவாரத்தில் காணப்படும் செய்திகளை முறைப்படுத்தி எளிமையும் இனிமையும் சிறக்க அளித்துள்ளமை தெரிகிறது. ஒளிநெறிக் கட்டுரைத் தலைப்புகளில் அப்பரும் இறைவனும், சிவன் விரும்புவன, பயனற்ற சொல், போற்றி எனவரும் துதிகள், மக்களைக் குறிப்பன, தியானம்-அதன் பயன் எனுமிவை கீழ் விரிவாக நோக்கப்படுகின்றன.

## அப்பரும் இறைவனும்

இத்தலைப்பினுள் அப்பரது பத்திநிலை, அவர் பெற்றபேறு, அவரது ஒழுக்க நெறி என்பன அமைகின்றன. இறைவனை நோக்கிக் கூறிய வகையில் பின் வருவன உள்ளன. இறைவா எனது ஆர்வத்தை உனக்கே தந்தேன். எனது ஆருயிரை உனது திருவடி நிழலில் வைத்தேன்; உன்னை நினைக்கும் போதெல்லாம் என் நாவில் இனிப்பு ஊறுகிறது; உன்னை, அரவா, பரமா என அழைக்கும் ஆசை, பற்று தவிர வேறு ஆசை பற்று எனக்கு இல்லை; உன் அன்பர்களோடு கலந்து நான் உன்னை அனுபவிப்பேன்; என்நெஞ்சை நீ ஆலயமாகக் கொண்டுள்ளாய்; அறநெறியில் நின்று, ஆர்வம், செற்றம், குரோதம் இவற்றை நீக்கி உன்னையே சார்பாகக் கொண்டேன்; உன்னை விட்டுப் போகேன்; உன்னை நினைக்க நினைக்கப் பக்தி வெள்ளம் பரவுகின்றது; இடர்க்கடலில் பட்டு அவத்தைப்படும் நான் அக்கரையில் சேர்க்கும் தோணியாகிய உன்னை அடைந்து உய்ந்தேன், நான் என்ன வேதனைப்படினும் உன்னைத் தவிர வேறு ஒருவரைப் 'பிரான்' எனக் கொள்ளேன்; எழு பிறப்பும் உனக்கு நான்அடிமை, உன் திருவடித் தரிசனத்தைத் தந்தருளுக; உன் திருவடிக்கு அடிமைப்பட்டால் எத்தகைய தீங்கும் வராது; நினைப்பவர் நினைப்பை எல்லாம் உடனிருந்தே நீ அறிகின்றாய் என்பதை நான் உணரும்போது வெட்கமும், அச்சமும்

பெருஞ்சிரிப்பும் கொள்கிறேன்; என் உள்ளத்தில் நிற்கின்றாய், மூச்சில் வருகின்றாய், ஆனால் கள்ளமாய் நிற்கின்றாய், உன்னை நான் காண்பது எங்ஙனம்? எனது அகத்தில் இருக்கின்றாயே; என்னைக் குறிக்கொண்டருளுதி; உன்னையல்லால் தெய்வம் ஒன்றுஇல்லை. கருவாய்க்கிடந்து உன் கழலையே நினைக்கும் கருத்துடையேன் நான்; உன்னைக் காணும் கருத்தையே கொண்டுள்ளேன்; நினையாத எனக்கு நீ நினைப்பை ஊட்டுகின்றாய்; உன்னைப் பேசாத நாள் எல்லாம் நான் பிறவாத நாளே, எனக்கு மீண்டும் பிறப்பு உண்டேல் உன்னை மறவாமை வேண்டும், என் தந்தை நீ, என் தாய் நீ, என் உறவு நீ, என் ஊன் நீ, என் உயிர் நீ, என் பிரான், பெம்மான், பெருமான் நீ, என் உறுதுணை நீ, என் வைப்பு நீ, என் கற்பகம் நீ, என் மணி நீ, என் துணைவன் நீ, என் மனக் கருத்து நீ, காணாதவைகளைக் காட்டும் க்ண் நீ; என் ஆனைக் கன்று நீ; நீயே என் அடைக்கலம்! என அமையும் இச் செய்திகளை நோக்குகையில் கருத்து முறைமை, தெளிவு, எளிமை, இனிமை, செறிவு என்பன தெளிவாகத் தெரிகின்றன.

### சில குறிப்பிடத்தக்க தலைப்புகள்

மேற்சுட்டிய முறையில் மேலும் குறிப்பிடத்தக்கனவாகச் சில தலைப்புகளைப் பட்டியலிடமுடிகிறது. அவை: அப்பரைப்பற்றிய விவரங்கள், 25 அரக்கர் அசுரர், 27 ஆறுகள் நீர்நிலைகள், 32. இலிங்கம், 36. உபதேசம், 43. ஐந்தெழுத்து, 45. ஐம்பூதம், 57. காலமும் ஊழிக் காலமும், 58. காலன், 61. புத்தர், 65. சிவன் அட்ட வீரச்செயல் 66. சிவன்அணிவன சூடுவன, 74. சிவன் அறம் உரைத்தது. 78. சிவன் உறைவிடம், 79. சிவன்கொடி, 81. சிவன் தன்மை, 83. சிவன் திருவுருவம், 85. சிவன் திருநாமமும், நாம விசேடமும், 88. சிவன் நடம், 91. சிவன் பலிஏற்றது. 95. சிவன் விரும்புவன, 99. சிவனும் எண்ணும், 105. சிவனும் ஞாயிறும், 110. சிவனும் தேவர்களும், 114. சிவனும் பிரமனும், 121.ஞானம், சிவனும் ஞானமும், 122. தலங்களைப் பற்றிய குறிப்புகள், 126. தலப்பெயர்ப்படி பாகுபாடு, 130. தலப்பெயரே கடவுள் பெயர், 134. தியானம் - அதன் பயன், 137. திருவிளையாடற் சரிதங்கள், 143. நடையழகு, கவி சாதுர்யம், நகைச்சுவை, 147. நீதி வாக்கியங்கள், பழமொழிகள், 149. நோய், நோய்தீர்க்கும் வழி, 152. பதிகங்களின் பாகுபாடு, 154. பழக்க வழக்கங்கள், 164. போற்றி எனவரும் துதிகள், 165. மக்களைக் குறிப்பன, 171. மாதர்கள், 173. முனிவர்கள், 175. யாக்கை, வாழ்க்கை, பிறப்பு, இறப்பு, 181. வரலாறுகள், சரித்திரங்கள், 183. வழிபாடு பூசை முதலியன, 185. வழிபாட்டினால் வரும்பயன், 187. விழாக்கள், 189. வினை, வினை போம் வழி 192. வேதமும் மறையும், 194. சீவராசிகள் என்பனவாகும்.

இவற்றுள் சிவன் விரும்புவன, போற்றி என வரும் துதிகள், மக்களைக் குறிப்பன, தியானம் அதன் பயன் என்பனவற்றை விரிவாய்க் காணலாம்.

### 1. சிவன் விரும்புவன

சிவனால் விரும்பப்பட்டவர்கள் அகத்தியர், இராவணன், அப்பர், திருமால், உமை, கங்கை (தேவி), குபேரன், நண்பன் ஆகியோராவர். விரும்புவனவாக அடியார் அடிமை, ஆதிரைநாள், ஆலநீழல், ஆனைந்து (பசு தரும்பால், தயிர், நெய், கோமயம், கோவலம்), எரியாடல், ஏழிசை, ஓடு (உண்கலன்) கொன்றைமலர், (பலவித) கோலங்கள், தக்கோர் சிந்தை, தமிழ் மாலை, தலை மாலை, திருநீற்றாடல், தோலாடை (மான்தோலாடை), பாட்டு, பாம்பு, பிச்சை ஊன், பிறைக்கண்ணி, மலர்கள், யாழ்ப்பாட்டு, விடை (இடபம்), வேதம், (சாமவேதம்) எனுமிவை அமைகின்றன.

தலங்களுள் - ஆரூர், கச்சி ஏகம்பம், கயிலை, (நாகைக்) காரோணம், கானப்பேர்,கோடி, திருப்புத்தூர், தில்லை (பெரும்பற்றப் புலியூர்) நல்லூர், பருப்பதம், பாம்புரம், பெரும்புலியூர், பெருவேளூர், மயிலாடுதுறை, மறைக்காடு (வேதாரண்யம்), மாற்பேறு, (அதிகை) - வீரட்டம் என்பன சிவன் விரும்புவனவாகும்.

### 2. பயனற்ற சொல்

ஈதல் என்னும் அறத்தைக் கைப்பிடித்தவராயினும், ஊன் உண்ணுதலை ஒழித்து வான் பெற விரும்பியவராயினும், எட்டெழுத்து - பிரணவம் - பதி - பசு இலக்கணம் உணர்ந்தவராயினும், கங்கை, கடல், காவிரி, குமரி தீர்த்தம், கோடி தீர்த்தம் முதலியவற்றால் நீராடியவராயினும் காடு நாடு திரிந்தவராயினும், சாத்திரங்கள் நீதிநூல்கள் கற்றவராயினும், பட்டினிக் கிடந்து விரதங்கள் அநுட்டித்து ஊனை வருத்தியவராயினும் **ஈசன் எண்ணும் பக்திச் சிந்தனை யில்லாதவர்கள்** யாதொரு நற்பனையும் அடையமாட்டார்கள் என உண்மையான பக்திப் பயனைத் தொகுத்துரைக்கிறார் அறிஞர்.

### 3. போற்றி என வரும் துதிகள்

இவை எவற்றைக் குறிக்கின்றன எனும் அடிப்படையில் பகுத்தளித்துள்ளார். சிவன் அணிவன பற்றி 31, சிவன் அரியர் என -11, சிவன் கருணை அருள் என - 26, சிவனின் ஆடல் பாடல் இசை என-18, சிவனின் தோற்றம் உருவம் என-47, சிவனின் உறைவிடம் பற்றி-17, சிவனின் தன்மை பெருமை என-52, சிவனின் திருநாமம்

பற்றி-10, சிவபரத்தைப் பற்றி,-54, கொடி வாகனம் என6, உகந்தவை என4, வீரச் செயல்கள் என 31, பிற செய்திகள் என-17, அப்பரைப் பற்றி-26, ஆக மொத்தம் 354 அமைகின்றன.

### 4. மக்களைக் குறிப்பன

மக்களுள் அருள் பெற்று நின்றவர், ஆளானவர்கள், இட்டு உண்பவர், உண்மை தங்கும் பெருநிலையினர், உத்தமர், உரிமையுடன் தொழுபவர் எண்ணும் எழுத்தும் குறியும் அறிபவர், கூரிய குணத்தினர், தக்கோர், தகவுடையோர், நல்லார், நலஞ்சிறந்தார், தற்பதத்தார், புலன்கள் ஐந்தும் வென்றவர், மருவினியார், மருளாதார், மனிதரில் தலையாய மனிதர், மிக்கோர்கள் என நற்பண்புடைய மக்கள் குறிப்பிடப் பட்டுள்ளமை ஒருங்கமைகின்றது.

### 5. தியானமும் அதன் பயனும்

உள்ளத்தை வெளிச்செய்திகளில் எடுபடாதபடி உள்முகமாக ஒடுக்கி, இறைவனைத் தியானித்து உணர்ந்தால் நமது கள்ள வினைகளை அவர் ஒழித்து உதவுவார். உள்ளத்தை ஒடுக்கி 'சிவாயநம' என்னும் ஐந்தெழுத்தைத் தியானிப்பதைத் தவிர வேறுவழியில் இறைவன் திருவருள் கிட்டாது. பெருமான் என் உள்ளத்தில் விளங்க வீற்றிருந்தும் அந்தோ! என் உள்ளே அவரை நினையமாட்டேன் - ஈதென்ன பாவம்; ஏனோநான் பிறந்தேன்! எனப் பக்தியாய்த் தியானிப்பது சொல்லப்படுகிறது.

இங்ஙனம் தொகுத்தமைக்கப்பட்ட அப்பர் தேவாரச் செய்திகள் எத்தடையும் இன்றிக் கற்போர்க்குச் சென்றடைவது உறுதி.

## நிறைவுரை

இவ் அரும் தெய்வத்தமிழ்ப் பணியை இத்தமிழறிஞர் தணிகைமணி எவர் துணையுமின்றித் தாம் ஒருவரே மேற்கொண்டு முடித்திருப்பது திருவருட்செயலாகும். இவர்தம் ஒளிநெறி ஆய்வு நூல்களைக் காணுகையில் இத்தகைய நூல்கள் எழுதுவதற்குரிய இலக்கண நூல்கள், இலக்கிய நூல்கள், சமய நூல்கள், புராணங்கள் ஆகியவற்றில் இவருக்கிருந்த ஆழ்ந்த தெளிந்த நினைவாற்றலையும் ஈடுபாட்டையும் காணமுடிகிறது.

இத்தமிழாய்வறிஞரின் ஒளிநெறி ஆராய்ச்சி நூல்கள் வழித் திருமுறைக்கு ஒரு சிவத்துவ களஞ்சியம் கிடைத்துள்ளது எனலாம்.

ஒளிநெறி நூல்களைப் பலரும் எளிதில் விருப்பமுடன் படிக்கத் தூண்டும் வகையில் நூல்கள் அமைகின்றன. இவை தமிழாய்வுலகுக்குச் சிறந்த ஆய்வுக் களங்களாகத் திகழ்கின்றன. இவர் தம் ஆய்வத் திறன் மிகச் சிறப்பாக அமைகின்றது. இந்நூலுள் நுணுகிச் செய்யப்பட்ட பகுப்பாய்வுத் திறனும், பல நூல்களின் ஈடுபாடும், நுண்ணாய்வு முறையும், அகரவரிசைப் பாங்கும் அறிஞரின் ஆய்வுத் திறனுக்குச் சான்றுகளாக அமைகின்றன. மேலும் விடுபட்ட திருமுறைகளை இவ்வழி உருவாக்கி வெளியிட்டால் திருமுறை ஆய்வு முழுமை அடைவதுடன் எதிர்காலத் தமிழ்மக்கள் பயன் துய்ப்பார்கள் என்பது திண்ணம்.

### மூலநூல்கள்


தேவார ஒளிநெறி - சம்பந்தர், பகுதி ஒன்று (ஆராய்ச்சிப் பகுதி, தலைப்பு 1-100), செங்கல்வராயபிள்ளை, வ.சு. கழக வெளியீடு, சென்னை, 1946 மு.ப 1963, ம.ப.

தேவார ஒளிநெறி - சம்பந்தர், பகுதி இரண்டு (ஆராய்ச்சிப் பகுதி, தலைப்பு 101-265) செங்கல்வராயபிள்ளை, வ.சு. கழக வெளியீடு, 1950, முப., 1963, ம.ப.

தேவார ஒளிநெறி - சம்பந்தர், பகுதி மூன்று (ஆராய்ச்சிப் பகுதி, தலைப்பு 266-466), செங்கல்வராயபிள்ளை, வ.சு., கழகவெளியீடு, 11960, சென்னை.

தேவார ஒளிநெறி -அப்பர், பகுதி ஒன்று (ஆராய்ச்சிப்பகுதி, தலைப்பு. 1-75), செங்கல்வராயபிள்ளை, வ.சு. கழகவெளியீடு, சென்னை, 1960.

தேவார ஒளிநெறி - அப்பர், பகுதி இரண்டு (ஆராய்ச்சிப்பகுதி, தலைப்பு. 76-190), செங்கல்வராயபிள்ளை, வ.சு. கழகவெளியீடு, சென்னை, 1962.

தேவார ஒளிநெறி - சுந்தரர், (ஆராய்ச்சிப் பகுதி, தலைப்பு. 1-261), செங்கல்வராயபிள்ளை, வ.சு. கழகவெளியீடு, சென்னை, 1963.

திருவாசக ஒளிநெறி, செங்கல்வராயபிள்ளை, வ.சு. கழகவெளியீடு, சென்னை, 1972.

திருக்கோவையார் ஒளிநெறி, செங்கல்வராயபிள்ளை, வ.சு. கழகவெளியீடு, சென்னை, 1970.

திருவிசைப்பா ஒளிநெறி, செங்கல்வராயபிள்ளை, வ.சு. கழகவெளியீடு, சென்னை, 1972.

## பார்வை நூல்கள்

அ. முதலாம் திருமுறை, தண்டபாணி தேசிகர், ச. (குறிப்புரை), தருமை ஆதீன வெளியீடு, 1953.

இரண்டாம் திருமுறை, மாணிக்கவாசக முதலியார், அ. (குறிப்புரை), தருமை ஆதீன வெளியீடு, 1954.

மூன்றாம் திருமுறை, கந்தசாமிப்பிள்ளை, அ.(குறிப்புரை) தருமை ஆதீன வெளியீடு, 1955.

நான்காம் திருமுறை, மாணிக்கவாசக முதலியார், சு., (குறிப்புரை), தருமை ஆதீன வெளியீடு, 1957.

ஐந்தாம் திருமுறை, குருசாமி தேசிகர், வி.சா., சிங்காரவேலன், சொ., சபேசன், வி. (உரை), தருமை ஆதீன வெளியீடு, 1963.

ஆறாம் திருமுறை, அருணைவடிவேல் முதலியார், சி., (குறிப்புரை), தருமை ஆதீன வெளியீடு, 1963.

ஏழாம் திருமுறை, அருணைவடிவேல் முதலியார், சி., (குறிப்புரை), தருமை ஆதீன வெளியீடு, 1964.

எட்டாம் திருமுறை, அருணைவடிவேல் முதலியார், சி., (குறிப்புரை), தருமை ஆதீனவெளியீடு, 1966.

ஆ. தமிழ்ப் புலவர் அகரவரிசை, தொகுதி -2, பகுதி-2, இராமசாமிப் புலவர், சு.அ., கழக வெளியீடு, 1962.

தமிழியல் நோக்கு நூல் அடைவு, மாதையன், பெ., சகுந்தலை வெளியீடு, மேட்டூர், 1978.

திருஞானசம்பந்தர் தேவார சைவசித்தாந்தக் கருத்துக்கள், கோமதிசூரியமூர்த்தி, ஈஸ்வரகம், மதுரை, 1994.

திருவாசகநெறி, சுப்பிரமணிய பிள்ளை, ஜி., மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1986.

திருவாசகம், இராமநாதன்பிள்ளை, ப., (உரை), கழகவெளியீடு, சென்னை, 1969.

தேவாரக் கருத்தடைவு, திருவாவடுதுறை ஆதீனம் வெளியீடு, 1970.

மெய்கண்ட சாத்திரம் பதினான்கு (மூலமும் உரையும்), I, II, கழக வெளியீடு, சென்னை, 1975.

******

# திருப்புகழ் உரைநெறி

கு. கதிரேசன்

"முத்தைத்தரு பத்தித் திருநகை" என முருகப் பெருமான் அடியெடுத்துக் கொடுக்க அருள்ஞானம் பெற்று அருணகிரியார் அருளிய இலக்கிய அமுதமே திருப்புகழ் ஆகும். முத்தமிழில் ஒன்றான இசைத்தமிழ் இலக்கிய வரிசையில் மிகச் சிறப்புப் பெற்றது திருப்புகழ் ஆகும். அருணகிரியார் முருகப் பெருமான் ஆலயங்கள் தோறும் சென்று வழிபட்டுத் திருப்புகழ் இசைப்பாடல்களைப் பாடிச் சிறப்புப் பெற்றுள்ளார். மிகச்சிறந்த சொல்லாட்சி, இசை நுட்பங்கள், கவித்துவம், இலக்கிய நயம், தாளநுட்பம், சந்தபேதம், இனிய ஓசை முதலிய கூறுகளைப் பெற்று அமைந்திருக்கும் திருப்புகழ் அனைவரும் படித்து இன்புறத்தக்கது. திருப்புகழ் பெற்ற திருமுருகனின் தலப்பெருமைகள், மூர்த்தி தலம் தீர்த்தம் முதலியவற்றின் சிறப்புகள், முருகப் பெருமானின் அருட்திறம், அழகு, வெற்றிச் சிறப்பு முதலிய கூறுகள் திருப்புகழில் பரந்து காணப்படுகின்றன. முருகன் அருளைப் பெறுவதற்கு, முருகன் மனம் மகிழ்ந்து அருள் தருவதற்கு உகந்த இசை இலக்கியம் திருப்புகழ் ஆகும். இத்திருப்புகழ் அமுதத்தைச் சாதாரண மக்களும் அருந்தி மகிழும் வாய்ப்பை ஏற்படுத்தும் முயற்சியில் ராவ்பகதூர் தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை குடும்பத்தினர் ஈடுபட்டனர். திருப்புகழை முதன் முதலில் பதிப்பித்தவரும் உரை கண்டவரும் அவர்களே. அவரைத் தொடர்ந்தே பலரும் பதிப்பித்தும் உரை எழுதியும் வெளியிட்டனர். உரையின் இயல்பு, இனிமை, சிறப்பு, நுட்பம் முதலிய கூறுகளை இனம் காண்பது இன்றியமையாத பணியாகும். இச்சீரிய பணியைச் செயற்படுத்தும் நோக்கிலும் செங்கல்வராய பிள்ளையின் உரைநெறியை அறியும் நோக்கிலும் திருப்புகழ் அமுதம் பற்றிய விழிப்புணர்வினை ஏற்படுத்தும் நோக்கிலும் அதனை அனைவரும் படித்துப் பயனடைய வேண்டும் என்னும் உந்துதலின் நோக்கிலும் பதிப்பித்து உரை வகுத்து வெளியிடும் பணியில் ஏற்பட்ட சிக்கல்களை விளங்கிக் கொள்ளும் நோக்கிலும் இக்கட்டுரை அமைகிறது.

## திருப்புகழ்ப் பதிப்புப்பணி

அருணகிரிநாத சுவாமிகள் அருளிய பாடல்களில் தணிகைமணியின் பதிப்பின் படி திருப்புகழ் 1325 பாடல்கள் ஆகும். 1935ஆம் ஆண்டில் அச்சிடப்பட்ட சைவ சித்தாந்த மகாசமாஜ

பதிப்புப்படி மொத்தம் 1361 பாடல்கள் இருந்தன. அவற்றில் 1008 சந்தங்கள் கிடைத்துள்ளன.

தணிகைமணியார் சைவ இலக்கியங்களான பன்னிரு திருமுறைகளுக்கு ஒளிநெறியும் ஒளிநெறிக் கட்டுரைகளும் எழுதத் தொடங்கிய பின்பு அதாவது அப்பணி நடந்து கொண்டிருக்கும் சூழலில், சம்பந்தர் தேவார ஒளிநெறி முடித்து, அப்பர் தேவார ஒளிநெறி எழுதும் காலத்தில் அப்பணிகளை நிறுத்தி வைத்து விட்டு, முருகப் பெருமானைப் பற்றிய திருப்புகழ் பதிப்புப் பணியில் ஈடுபட்டார். 1950-க்குப் பின்பு 1958 வரை இடைப்பட்ட ஏழு ஆண்டுக் காலத்தில் தணிகைமணியார் முழுமையாகத் தம்மைத் திருப்புகழ் உரை மற்றும் பதிப்புப் பணியில் ஈடுபடுத்திக் கொண்டிருக்கவேண்டும் என்பது தெளிவாகிறது.

தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் முதன் முதலில் 1951ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் திருப்புகழ் பொழிப்புரையுடன் முதல் தொகுதியின் முதல் பகுதியை வெளியிட்டுள்ளார். இதில் முதல் 25 திருப்புகழ்ப் பாடல்களும் அவற்றிற்கான பொழிப்புரையும் இடம் பெற்றிருந்தன. பல மாதங்கள் கழித்து 15-08-1952இல் முதல் தொகுதியின் இரண்டாம் பகுதியினை வெளியிட்டார். இவ்வெளியீட்டில் மீதமுள்ள பகுதிகள் தொடர்ந்து மாதம் தோறும் வெளிவரும் எனக் குறிப்பிட்டுள்ளார். அந்த வகையில் பல உட்பகுதிகளைக் கொண்ட பல தொகுதிகளாக்கி வெளியிட்டார். 'வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளின் முக்கிய சீடர்களில் ஒருவராகிய பிரமஸ்ரீ கல்யாணசுந்தரம் ஐயர் அவர்களின் மனைவியார் திருநிறை மீனாட்சி அம்மையாரின் அன்பார்ந்த முயற்சியினால் இரண்டாம் பகுதி முதல் விளம்பரத்திற் கண்டுள்ளபடி ஏனைய பகுதிகளும் தொடர்ந்து மாதம் தோறும் வெளிவரும்' என்றும் குறிப்பிட்டுள்ளார். மேலும் நூலின் வெளியீட்டுக்கு ஆதார பூதமாயுள்ள அன்பர் பிரமஸ்ரீ கலியாண சுந்தரர் ஐயர் அவர்கள் என்பதும் அச்சேறுவதற்கு உரிய உதவிகளைச் செய்தவர் பிரமஸ்ரீ பி.எஸ். கிருஷ்ணய்யர் அவர்கள் என்பதும் பதிப்பித்து வெளியிட்ட அச்சகம் Republic Press என்பதும் தணிகைமணியாரின் முகவுரை வழி அறியலாகும் செய்திகளாகும். முகவுரையில் தமது பெயருடன் தமது சகோதரர் வ.சு. மயிலேறும் பெருமாள் பெயரையும் சேர்த்துக் கொண்டிருப்பதையும் காணமுடிகிறது. இதன் மூலம் அவரது குடும்பமே திருப்புகழ்ப் பதிப்புப் பணியில் ஈடுபட்டிருந்தமை புலனாகிறது. முதன் முதலில் மாதம் தோறும் மாத. இதழ் போன்ற அமைப்புடன் வெளியிடும் பாங்கிலேயே தணிகைமணியார் திருப்புகழ் உரை மற்றும்

பதிப்புப்பணியில் ஈடுபட்டுள்ளார். ஒவ்வொரு வெளியீட்டிலும் அட்டையின் மேல் இடது பக்கம் திருமுருகப் பெருமானின் படத்தையும் வலது பக்கம் "முருகவேள் பன்னிரு திருமுறை என்னும் தலைப்பு, தொகுதி, பகுதி எண்ணையும் அச்சிட்டுள்ளார். மத்தியில் பதிப்பு, உரைஆசிரியர் என்னும் தலைப்பில் ராவ்பகதூர் தணிகைமணி திரு. வ.சு. செங்கல்வராய பிள்ளை எம்.ஏ., எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பின்பு தலைப்புடன் அருணகிரிநாதர் அருளிய திருப்புகழும் ஏனைய நூல்களும் (பதவுரை, பொழிப்புரை குறிப்புகளுடன்) என்னும் தொடரையும் சேர்த்துக் கொண்டமை அறியலாகிறது. பெயருக்குக்கீழ் (Retired P.A. to The Inspector General of Regn.) எனும் ஆங்கிலத் தொடர் சேர்க்கப்பட்டுள்ளது. சில இதழ்களில் 292, லிங்கி செட்டித்தெரு சென்னை-1 என்னும் முகவரியும் இடம் பெற்றுள்ளது.

முதலில் வந்த இதழ்களின் முன் அட்டையில்,

**"உனது காவிய நூலாராய்வேன்**
**இடர்படா தருள் வாழ்வே நீயே தரவேணும்**
**மயுர வாகன தேவா! வானோர் பெருமாளே!**

**(திருப்புகழ் : 150)**

என்னும் திருப்புகழ்ப் பாடல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பின்பு அது விடுக்கப்பட்டுள்ளது. அதோடு வெளியிடுபவர் எனக் குறிப்பிட்டு, ஸ்ரீமதி மீனாக்ஷி கலியாண சுந்தரம், இரண்டாம் தெரு, வடக்கு கோபாலபுரம், சென்னை-6 என்னும் வெளியீட்டாளர் முகவரி அச்சிடப்பட்டுள்ளது. தொடர்ந்து முதல் இதழ்களில் கிடைக்கும் இடம் இதுவே எனும் குறிப்பும் விலையும் குறிப்பிடப்பட்டுள்ளது. பின் வந்த இதழ்களில் "பதிப்புரிமை உரையாசிரியருடையது" என்னும் தொடர் சேர்க்கப்பட்டுக் கிடைக்குமிடம் அடியில் வரிசையாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அந்த வகையில் முருகவேள் பன்னிரு திருமுறை திருப்புகழ்த் தொகுதிகள்,

1. உரையாசிரியரிடமும் பதிப்பாளரிடமும்.
2. பி.எஸ். கிருஷ்ணன், Indo Staraits Ltd., எர்ரபாலு செட்டித் தெரு, சென்னை.
3. பி.டி. பாணி & கோ, திருவல்லிக்கேணி.
4. பி.ஜி. பால் & கோ, & Francis Joseph St., Madras-1
5. ஸ்ரீ குஹாலய ஸத் சங்கம், மைலாப்பூர், சென்னை.

ஆகிய முகவரிகளில் கிடைக்கும் செய்தியை இதழின் அட்டை வழியே அறிய முடிகிறது. இவ்வாறு வெளிவரும் ஒரு இதழின்

விலை 1 ரூபாய் ஆகும். இது முன் அட்டையிலும் பின் அட்டையிலும் விலை ரூபா ஒன்று எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சில இதழ்களில் பின் அட்டையில் விளம்பரமும் இடம் பெற்றுள்ளது. இதழின் முன், பின் அட்டைகளின் உட்பகுதியிலும் விளம்பரம் இடம் பெற்றுள்ளமையைக் காண முடிகிறது.

முதல் பகுதியில் 25 பாடல்களுடன் பதிப்பித்து வெளியிட்ட தணிகைமணியார் தொடர்ந்து வந்த இதழ்களில் அதிகமாகவும் இடம் பெறச் செய்துள்ளார். ஒவ்வொரு பகுதிக்கும் இத்தனைப் பாடல்கள் மட்டுமே இருக்க வேண்டும் என்ற வரையறை இல்லை. ஒவ்வொரு தொகுதிக்கும் ஐந்து பகுதிகள் அமைத்துள்ளார். ஐந்து பகுதிகளையும் ஐந்து இதழ்களாக வெளியிட்டுள்ளார். இவ்வாறு ஆறு தொகுதிகள் ஒவ்வொன்றிலும் ஐந்து பகுதிகள்; மொத்தம் 30 பகுதிகளாக - 30 இதழ்களாக வெளிவந்துள்ளன. ஆறு தொகுதிகளுக்குள்ளும் திருமுருகன் பாடல்களைப் பன்னிரு திருமுறையாகப் பகுத்தும் தொகுத்தும் வெளியிட்டுள்ளார்.

இத்தகைய வெளியீட்டு முறைகளைப் பார்க்கும்பொழுது தணிகைமணியார் அருணகிரிநாதரின் திருப்புகழைத் தொகுத்து உரை வகுத்து ஒருவகை மாத இதழ் போன்று வெளியிட்டு வந்திருக்கிறார் என்னும் உண்மையை அறிய முடிகிறது.

இந்த முதல் வெளியீட்டுப் பணியை விளம்பரப்படுத்தி, விலையைக் கூறிப் பன்னிரு திருமுறை வெளியீடு பற்றிய விளம்பரம் வெளியிட்டிருக்கும் செய்தியும் பல நிறுவனங்களிலிருந்து விளம்பரங்களைப் பெற்று அட்டைகளில் வெளியிட்டிருக்கும் பாங்கும் ஒவ்வொரு வெளியீட்டையும் படித்து மதிப்புரை எழுதியவர்கள், கடிதம் எழுதியவர்களின் கருத்துரைகளை மறு இதழில் வெளியிட்டிருக்கும் தன்மையும் தணிகை மணியாரின் திருப்புகழ் பதிப்புப்பணி முதலில் முழுமையான இதழ்ப் பணியாகவே தொடங்கியிருக்கும் உண்மையை அறியத் தருகின்றன.

தணிகைமணி, முருகவேள் பன்னிரு திருமுறை தொகுப்பு இதழ்கள் வெளியிட்ட தொடக்கக் காலத்தில் (1951) தாமே தம் கைப்பட பல நூலகங்களுக்கும் கல்வி நிறுவனங்களுக்கும் ஐக்கிய வேளாளர் சங்கங்களுக்கும் நூல் - இதழ் வெளிவரும் செய்தியைத் தெரிவித்து, அதனை வாங்கிப் பயனடைவதுடன் ஆதரவளிக்கு மாறும் வேண்டிக் கடிதம் வரைந்திருக்கும் செய்தியை அறிய முடிகிறது. அவர் நூல்களை விற்பனை செய்யும் பொருட்டுத் திருச்செந்தூர் சைவ வேளாளர் சங்கத்திற்கு 1951ஆம் ஆண்டு எழுதிய கடிதம் இன்றும் உள்ளது.

பின்பு 16.03.1957 அன்று ஆறு தொகுதிகளையும் ஆறு நூல்களாக அச்சிட்டு அழகிய அட்டையுடன் பாதுகாப்பான கட்டமைப்புடன் வெளியிட்டனர். இப்பதிப்பு 'முருகவேள் பன்னிரு திருமுறை'' என்னும் தலைப்பில் "அருணகிரி நாதர் அருளிய திருப்புகழாகிய நூல்கள் மூலமும் உரையும் விசேஷ ஆராய்ச்சிக் குறிப்புகளுடன்" என்னும் குறிப்பினை அட்டையில் தாங்கி அழகிய பைன்டிங் பதிப்பாக வெளிவந்தது. இவ்வாறு தணிகைமணி 1952ஆம் ஆண்டு தொடங்கிய திருப்புகழ் உரை பதிப்புப்பணி 1957ஆம் ஆண்டுவரை தொடர்ந்து ஐந்து ஆண்டுகள் நடைபெற்றது. "முருகவேள் பன்னிரு திருமுறை என்ற தலைப்புடன் உரை எழுதத் தொடங்கி 1952ஆம் ஆண்டு வைகாசி விசாகத்தில் அச்சுக்குக் கொடுக்கப்பட்ட இந்நூல், முருகவேளின் திருவருளாலே 1957ஆம் ஆண்டு பங்குனி உத்திரத்தில் நிறைவேற்றப் பெற்றது'' (1957: முருகவேள் பன்னிரு திருமுறை: தொகுதி 6: 976) என்னும் தணிகைமணியின் முடிவுரையிலிருந்து திருப்புகழ் உரை - பதிப்புப் பணி தொடக்கமும் முடிவும் அதற்கான கால அளவும் புலனாகிறது. இவ்வாறு வெளியான தொகுப்பு நூல்களைப் பற்றிய விபரங்களை அறிவது அவசியமாகும். முதல் தொகுதி முருகப் பெருமானின் முதல் மூன்று படை வீடுகளைப் பற்றிய 200 பாடல்கள் 456 பக்கங்களில் அமைந்துள்ளது. இதன்விலை ரூ.5.8.0 எனக் குறிக்கப்பட்டுள்ளது. இரண்டாம் தொகுதி ஏனைய மூன்று படை வீடுகளைப் பற்றிய 250 பாடல்கள் 636 பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ளது. இதன் விலை ரூ.7.8.0 என்பதாகும். முருகப் பெருமானின் அறுபடை வீடுகளை இவ்விரு தொகுதிகளும் அடக்கியுள்ளமை அறியத்தக்கது. மூன்றாம் தொகுதி பஞ்ச பூதத்தலங்கள் பற்றிய 210 பாடல்கள் 555 பக்கங்களில் வெளியாகியுள்ளன. அதன்விலை ரூ.6.0.0 என்பதாகும். தொகுதி நான்கில் ஏனைய தலங்கள் பற்றிய 340 பாடல்களைக் கொண்ட 900 பக்கங்களின் விலை ரூ.9.8.0 என்பதாகும். ஐந்தாம் தொகுதி பொதுப்பாடல்கள் மற்றும் திருஎழுக்கூற்றிருக்கை ரதபந்தத்துடன் என 315 பாடல்கள் 770 பக்கங்களில் வெளியிடப்பட்டு ரூ.8.8.0-க்கு விற்பனை செய்யப்பட்டுள்ளது. ஆறாம் தொகுதி கந்தரலங்காரம், அந்தாதி, அநுபூதி, மயில் விருத்தம், வேல் விருத்தம், சேவல் விருத்தம் மற்றும் 11,12 ஆம் திருமுறைகள் என 986 பக்கங்களில் அமைந்துள்ளது. இதன் விலை ரூ.10.8.0 என்பதாகும். இத்தகைய தொகுதிகளின் விவரம் பற்றிய பட்டியல் ஒவ்வொரு தொகுதியின் அட்டையின் உட்பகுதியிலும் இடம் பெற்றுள்ளமையைக் காணமுடிகிறது. தணிகைமணியின் இத்தகைய பதிப்புப் பணியும் உரைப் பணியும் அவரைத் தமிழ் உலகிலும் சமய உலகிலும் தலைசிறந்த அறிஞராக அடையாளம் காட்டின.

நெடுநாள் கிடைக்கப் பெறாதிருந்த திருப்புகழ் நூற்சுவடிகளை மிகப் பாடுபட்டுத் தேடி அச்சிட்டு வெளியிட்ட பெரியார்கள் வடக்குப்பட்டு திரு. சுப்பிரமணியபிள்ளையவர்களும் அவர் மைந்தர் திரு. வ.சு. செங்கல்வராய பிள்ளை எம்.ஏ., அவர்களும் ஆவர் என்னும் கழகத்தாரின் பதிப்புரை (1974:3) திருப்புகழைப் பதிப்பித்த தணிகை மணியாரின் அருட்செயலை அறியத்தருகிறது. அவர் உரை வகுத்திருக்கும் பாங்கும் திருப்புகழ்ப் பாடல்களைத் தொகுத்திருக்கும் தன்மையும் அவரது சீர்மிகு பணியின் சிறப்பை எடுத்துக்காட்ட வல்லதாக அமைகின்றன.

பதவுரை, பொழிப்புரை, விரிவுரை, கருத்துரை எனப் பல உரைகளும் கூறும் நிலையில் தணிகைமணியார் பொழிப்புரையை மட்டும் மிகச் சுருக்கமாக அனைவருக்கும் எளிதில் புரியும் வகையில் எளிமைப்படுத்தி உரை வகுத்துள்ளார். நூலின் இடது பக்கம் திருப்புகழ் பாடலும் வலது பக்கத்தில் அதற்கான பொழிப்புரையும் அமையுமாறு உரைவகுத்திருப்பது தனிச்சிறப்பாகும். மு.வரதராசனாரின் திருக்குறள் உரை போன்று இடது பக்கம் மூல நூலின் பாடல் அடிகளும் அதற்கு நேராக வலது பக்கத்தில் அதற்கான பொழிப்புரையும் அமைத்துப் படிப்பவர்கள் குழப்பம் அடையாதவாறும் அந்தந்த அடிகளைப் படிக்கும்பொழுது அவ்வப்பொழுதே அதற்கான பொருளைத் தெரிந்து கொள்ளும் நோக்கிலும் உரை வகுத்துள்ள பாங்கு தனித்தன்மையும் சிறப்பும் உடையது. மேலும் ஒவ்வொரு பாடலுக்கும் அந்தந்தப் பாடலின் பொருளை மையப்படுத்தி அதில் இடம் பெறும் ஒரு முக்கிய அடியையோ சொற்றொடரையோ பாடல் தலைப்பாகக் குறிப்பிட்டு உரை கூறும் பாங்கும் தணிகைமணி உரை நெறியின் தனித்தன்மையைக் காட்டுகிறது. உரை வகுக்கும்பொழுது எளிய தொடர், எளிய சொல்லாக்கம், எளிமையான நடை முதலியவற்றை அமைத்துப் படிப்பவர் எளிதில் புரிந்து கொள்ளும் நிலையில் உரை வகுத்துள்ளார். அதோடு பாடல் அடிகளுக்கோ சொல்லுக்கோ தொடர்புடைய வேறு பொருளோ தொடர்புடைய விளக்கமோ மேற்கோள் சான்றுகளோ குறியிட்டு அந்தந்தப் பக்கத்தின் அடியில் குறிப்பிட்டுள்ளார். இதனால் அவற்றை அவ்வப்போது அறிந்து தெளிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது.

பாடலுக்குத் தலைப்பு உணர்த்தும் சொற்றொடரையே பயன்படுத்துவதுடன் பாடலில் அச் சொற்றொடரை வேறுபடுத்திக் காட்டும் நோக்கில் பெரிய எழுத்தில் அச்சிட்டிருப்பதைக் காண முடிகிறது. அதோடு பாடல் தொடக்கத்திலும் உரைத் தொடக்கத்திலும் தொடக்க நிலை வேறுபட்டுத் தெரிவதற்காக

முதல் எழுத்தை மட்டும் பெரிய எழுத்தில் அமைத்திருக்கும் தன்மையைக் காண முடிகிறது. பாடலின் ஒவ்வொரு அடியையும் தனித்தனியாக, தெளிவாக நன்கு இடம் விட்டு வலது பக்கமுள்ள உரையின் அளவுக்கு ஏற்பப் பொருந்துமாறு குழப்பமின்றிப் படிக்க வசதியாக அச்சிடப்பட்டுள்ளது. உரை கூறும்பொழுது மிகச் சுருக்கமாகவும் தெளிவாகவும் கூறுவதற்காகச் சில சொற்களைப் படிப்போருக்குப் புரியும் வகையில் அடைப்புக்குறிக்குள் சேர்த்து எழுதியிருக்கிறார். இவ்வாறு அடைப்புக்குள் இடம்பெறும் சொற்றொடரைச் சேர்த்துப் படிக்கும்பொழுது படிப்போருக்கு எளிதில் புரியும் படியான நிலை ஏற்படுகிறது. இந்நெறி மிகப் பரவலாகவே இடம் பெற்றிருப்பதைக் காண முடிகிறது.

"மயில் மீது வந்தருள" என்னும் தலைப்புடைய 41ஆம் பாடலின் இரண்டாம் அடியான,

**"முந்தைவினை யேவ ராமற் போக**
**மங்கையர்கள் காதல் தூரத் தேக**
**முத்தடிமை யேனை யாளத் தானு முனை மீதே"**
**(திருப்புகழ் 41:2)**

என்னும் பகுதிக்கு உரை கூறுமிடத்துத் தணிகைமணியார், "பழவினை என்பதே என்னைத் தொடராது (ஓடிப்) போகவும் (அடிமைத் திறத்தில்) முந்த வேண்டும் (என்னும் ஆசை கொண்ட) அடிமையாகிய என்னை ஆண்டருளும் பொருட்டு (நீ என்) முன்னிலையில்" (தொகுதி 1:113) என உரை கூறுகிறார். இத்தொடரில் அடைப்புக்குள் அமைந்திருக்கும் சொற்றொடர்கள் இல்லாமல் இருந்தால் கூடப் பொருள் கொள்ள முடியும். ஆனால் குழப்பமின்றி எளிதில் புரிதலுக்காக அவர் தொடர் அமைப்பின் இணைப்புச் சொற்றொடர்களை அடைப்புக்குள் அமைத்து எளிமையும் தெளிவும் பெறச் செய்கிறார். இது அவரது முதிர்ந்த அறிவுத் திறனையும் மொழிப்புலமையையும் சிறப்பையும் தனித் தன்மையையும் காட்டுகிறது.

திருப்புகழின் ஒவ்வொரு பாடலும் அந்தந்தப் பாடலுடன் முடிந்து விடாதவாறு தொடர் நிலைச் செய்யுள் போன்ற நடையில் அமைந்துள்ளது. ஆயினும் தனித்தனியாகப் பொருள் அமையுமாறு உரைவகுத்துப் பதிப்பித்துள்ளார். இதற்கு வசதியாக முடிவு பெறாமல் தொடரும் திருப்புகழ் பாடல் ஒவ்வொன்றுக்கும் முடிவு கூறும் வகையில் உரையின் இறுதியில் பொருத்தமான தமது கருத்தை அடைப்புக் குறிக்குள் அமைத்துள்ளார். இச்சொற்றொடர் முடிவுறாமல் தொடர்ந்து நீண்டு செல்லும் பாடலின் வேகத்தைப்

பொருள் நிறைவு பெறச் செய்த மனநிறைவையும் ஏற்படுத்துகிறது. இத்தகைய அமைப்பு நிறைவுச் சொற்றொடர் மூலம் படிப்போர் மனத்தில் இனம்புரியாத பக்திச் செறிவையும் முழுமையையும் ஏற்படுத்திவிடுவதை உணர முடிகிறது. சான்றாக ஒன்றைக் கூறலாம்.

'பாதுகை தீக்ஷை பெற' எனும் தலைப்பில் அமைந்த பாடலின்,

சிறகுந் தாமரை யோடையில் மேடையில்
நிறக்குஞ் சூர்வளை பால்மணி வீசிய
திருச்செந்தூர் வரு சேவக னேசுரர் பெருமாளே
(திருப்புகழ் 26:8)

என்னும் இறுதி அடிக்கு உரை கூறுமிடத்து, "சிறந்த தாமரை ஓடையிலும் மேடையிலும் நிறைசூல் (நிறைந்த கர்ப்பம்) கொண்ட சங்குகள், பால் போலும் வெண்மணிகளை (முத்துக்களை) வீசுகின்ற திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள பராக்கிரமசாலியே! தேவர் பெருமாளே! (தொகுதி 1:77) எனக் கூறிவிட்டு அடைப்புக்குறிக்குள் (பாதுகை நீ தர நான் அருள் பெறுவேனோ!) என வருவதாக உரையமைத்துப் பாடல் பொருளை முற்றுப்பெறச் செய்கிறார். இவ்வாறு ஒவ்வொரு பாடலுக்கும் முடிவுரையாக அமைத்திருக்கும் சொற்றொடர், பாடல் தலைப்பை நேரடியாகவோ மறைமுகமாகவோ உணர்த்துவதாக அமைந்துள்ளது. அதாவது பாடல் தலைப்பை ஒட்டியே இந்த முடிவுரையும் அமைத்திருப்பது அவரது உரை நெறியையும் தொடங்கி முடித்துக் கூறும் பாங்கினையும் எடுத்துக் காட்டுகிறது.

மேலும் பாடல்களில் இடம் பெறும் கடினமான சொற்களுக்கு அந்தந்தப் பக்கத்தின் அடியில் அருஞ்சொற் பொருளும் விளக்கப் பொருளும் எழுதுகிறார். இதற்காகக் குறியீடுகளைக் கையாள்கிறார். அந்தந்தச் சொற்களின் அருகில் குறியிட்டு அல்லது எண்ணிட்டு அதற்கு அடிக்குறிப்பில் விளக்கம் தந்திருக்கும் பாங்கு தணிகைமணியாரின் ஆய்வு நுட்பத்தையும் செறிவையும் திறத்தையும் காட்டுகிறது. அடிக்குறிப்பில் குறியீடுகளையும் எண்களையும் மாறி மாறிப் பயன்படுத்தும் தன்மையைக் காணமுடிகிறது. இவ் அடிக்குறிப்பில் சில சொற்களுக்குரிய தொடர்புடைய தெளிவான விளக்கங்களும் தொடர்புடைய கதைகளும் பிற இலக்கியச் சான்றுகளும் பாடல் அடிகளும் அது இடம் பெறும் கருத்தும், வரலாற்றுக் குறிப்புகளும், பழமொழிகளும், சொல் விளக்கங்களும் எனப் பலதரப்பட்ட தொடர்புடைய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு

அடிக்குறிப்பு அமைக்கும்பொழுது பாடலுக்கு மட்டுமின்றி அவர் கூறிய உரைக்கும் அடிக்குறிப்பு அமைத்திருக்கும் இயல்பைப் பரவலாகக் காண முடிகிறது.

தணிகைமணி, முதல் பதிப்பில் ஒவ்வொரு பகுதியையும் தனித்தனி நூலாக இதழ் போன்று வெளியிட்டு வந்த காலத்தில் ஐந்து பகுதிகளைக் கொண்ட ஒவ்வொரு தொகுதிக்கும் பக்க எண் வரிசையாக அமையுமாறு பதிப்பித்துள்ளார். சான்றாக முதல் தொகுதியில் முதல் பகுதி 72ஆம் பக்கத்தில் முடிய இரண்டாம் பகுதி நூல் 73ஆம் பக்கத்தில் தொடங்கி 168ஆம் பக்கத்தில் முடிந்துள்ளது. மூன்றாம் பகுதி 169ஆம் பக்கத்தில் தொடங்கி 264ஆம் பக்கத்தில் முடிகிறது. நான்காம் பகுதி 265ஆம் பக்கம் தொடங்கி 360ஆம் பக்கத்தில் முடிகிறது. ஐந்தாம் பகுதி 361ஆம் பக்கத்தில் தொடங்கி 453ஆம் பக்கத்தில் முடிவடைகிறது. இவ் ஐந்து பகுதிகளும் சேர்ந்து முதல் தொகுதியாக வெளிவந்துள்ளன. ஒவ்வொரு தொகுதியின் இறுதியும் பாடல் முதல் குறிப்பு அகராதி பாடல் எண், பக்க எண் ஆகிய விபரங்களுடன் அமைந்துள்ளது. பிழைதிருத்தப் பட்டியலும் பிற இதழ்கள், அறிஞர்கள் எழுதிய மதிப்புரைகளும் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளன.

தணிகைமணி உரை வகுக்கும்பொழுது 'உ' என்னும் கணபதி நாமத்துடன் திருத்தணிகேசன் துணை என்றோ வேலும் மயிலும் துணை என்றோ காப்புக் கூறியே உரை கூறுவதைக் காணமுடிகிறது. நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் இடது பக்கம் 'முருகவேள் திருமுறை' என்றும், இடதுபுறம் 'திருப்புகழ் உரை' என்றும் குறிப்பிட்டு மத்தியில் திருமுறையின் எண்ணையும் பாடப்பட்ட தலத்தின் பெயரையும் அடைப்புக் குறிக்குள் இடம் பெறச் செய்துள்ளார். திருப்புகழ்ப் பாடல் பிற இலக்கியங்களில் இடம் பெறுமானால் அதனை விடுத்துச் செல்லும் தன்மையைக் காண முடிகிறது. முதல் தொகுதியின் 54ஆம் பாடலுக்கு இன்பமும் துன்பமும் எனத் தலைப்பிட்டு, இது திருச்செந்தூர்க் கலம்பகத்துப் பாடல்; ஆதலால் விடப்பட்டது (தொகுதி : 1:138) எனக் குறிப்பிட்டு அடுத்த பாடலுக்குச் செல்லும் மரபையும் காண முடிகிறது. இது "கூறியது கூறல்" குற்றத்தைத் தவிர்க்கும் நோக்கில் வந்தது ஆகும். இத்தகைய நூல் கட்டமைப்பு முறைகளையும் உரை கூறும் பாங்கினையும் ஆராயும்பொழுது தணிகைமணியார் மிகச் சிறந்த ஆய்வாளராகவும் காரண காரியத்துடன் எதையும் நன்கு ஆராய்ந்து செய்யும் ஆற்றல் உடையவராகவும் நுண்மாண் நுழைபுலம் மிக்கவராகவும் திகழ்ந்ததை அறிய முடிகிறது.

1952 திசம்பர் - நந்தன -மார்கழி மாதம் வெளியான கலைமகள் இதழ் வெளியிட்ட முருகவேள் பன்னிரு திருமுறை பற்றிய மதிப்புரையில் சில செய்திகள் அறியக் கிடைக்கின்றன. "கிடைத்தற்கரிதாக இருந்த திருப்புகழ் பாடல்களை ஊர் ஊராகச் சென்று தொகுத்து வெளியிட்டவர் வ.த. சுப்பிரமணிய பிள்ளை ஆவார். இவர் தணிகைமணியாரின் தந்தையார். இவர் வேறு சில திருப்புகழ்களையும் தேடிச் சேர்த்து அரிய உரைக் குறிப்புகள், விரிவான ஆராய்ச்சிக் குறிப்புகள் ஆகியவற்றோடு மூன்று பாகங்களை வெளியிட்டுள்ளார். ஸ்ரீ செங்கல்வராய பிள்ளையவர்கள் தமிழ் ஆராய்ச்சி மிக்கவர். அவர் இப்போது திருப்புகழுக்கு உரை எழுத முற்பட்டிருக்கிறார். பல காலமாகத் திருப்புகழில் ஆழ்ந்து ஆழ்ந்து இன்புற்றவராதலின் பல நுணுக்கமான குறிப்புகளை அவருடைய உரையிலே காணலாம். திருப்புகழ் பாக்கள் எல்லாவற்றிற்கும் உரை எழுதிய பிறகு அவற்றை வெளியிடுவதானால் அன்பர்கள் நெடுங்காலம் காத்திருக்க வேண்டும். ஆகையால் இந்த உரையை ஒவ்வொரு பகுதியாக வெளியிடும் முயற்சியைச் சில அன்பர்கள் மேற்கொண்டிருக் கிறார்கள். இது மிகவும் பாராட்டுதற்குரிய செயல்" (கலைமகள் டிசம்பர் 1952:762) என்னும் செய்தி மூலம் தணிகைமணியார் திருப்புகழ் பாடல்களைத் தொகுத்தும் உரைவகுத்தும் வெளியிட்ட பாங்கினையும் சிறப்பினையும் ஏற்பட்ட சிக்கல்களையும் அறியலாம்.

''எவர்க்கும் எய்ப்பினில் வைப்பாம்'' இவ்வெளியீடு, தமிழ்நாட்டின் தவப்பயன் ஆகும். "முன்னே வந்து எதிர்தோன்றும் முருகன் அருளை இவ்வழி எளிதிற் பெறலாம்" என்று குமரகுருபரன் என்னும் இதழ் (மலர் - 3 இதழ் 12 நந்தன மார்கழித் திங்கள்) சிறப்பிக்கிறது. "முருகவேள் பன்னிரு திருமுறை முழுமையும் தெளிவாகவும் திருத்தமாகவும் வரையப்பெற்றுப் பதவுரை, பொழிப்புரை, குறிப்புரைகளோடு ஒவ்வொரு தொகுதியாக மாதந்தோறும் வெளிவருமென்று தெரிகிறது. இதன் உரையாசிரியர் வழிவழியாகத் திருமுருகனுக்கு ஆட்பட்ட குலத்திலுதித்தவர்; பொருட்செல்வத்தோடு அருட்செல்வமும் மிகப் படைத்தவர்; அருந்தமிழோடு ஆங்கிலம் கற்ற புலமையாளரில் தலைமை சான்றவர். ஆகலின் இந்நற்பணியை ஆற்றவல்லவர் இவரையன்றி இக்காலத்து எவருமிலர்" என மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடான செந்தமிழ் (தொகுதி 48, பகுதி 9-10 பக்கம் 239) வரையறை செய்கிறது. இச்செய்தி திருப்புகழ் உரையின் அமைப்பினை அடையாளப் படுத்துகிறது. இதுகாறும் கூறப்பட்ட கருத்துகள் மூலம் தணிகைமணி உரையின் தனித்தன்மையும் கட்டமைப்பும் பற்றிய தெளிவினைப் பெற முடியும்.

## தணிகைமணி திருப்புகழ் உரையின் இயல்பு

பொதுவாகப் பாடலுக்கு உரை கூறும்பொழுது உரையாசிரியர்கள் பதவுரை, பொழிப்புரை, குறிப்புரை, தெளிவுரை, விரிவுரை, விருத்தியுரை, விளக்கவுரை, கருத்துரை எனப் பலவகை உரைமுறைகளைக் கையாண்டு உரை கூறும் மரபைக் காணலாம். இவற்றில் ஒன்றையோ இரண்டையோ அல்லது அனைத்தையுமோ எடுத்தாண்டு உரை கூறும் மரபு உள்ளது. தொடக்கத்தில் ஒரு செய்யுள் இலக்கியத்திற்கு உரை கூறுமிடத்துப் பதவுரையே முதலில் இடம் பெறும். பதவுரை கூறினால்தான் பொழிப்புரை, விரிவுரை முதலிய உரைகளைக் கூற முடியும். சிலப்பதிகாரத்திற்கு முதலில் உரை கூறியவர் அரும்பத உரைகாரர் என்று குறிப்பிடப்படுவதை அறியலாம். அரிய சொற்களுக்குப் பொருள் கூறும் பணியே முதலில் உரையாசிரியர்களின் தலையாய பணியாக அமைந்தது. அரும்பதத்திற்குப் பொருள் கூறி விளங்கவைப்பதைப் பதவுரை அல்லது அரும்பதவுரை என்று குறிப்பிடுகின்றனர். இப்பதவுரையில் தெளிவு ஏற்பட்டால் தான் பொழிப்புரை கூற முடியும். அந்த வகையில் திருப்புகழுக்கு உரை வகுக்கப் புகுந்த தணிகைமணியார் தம் உரையில் பதவுரை, பொழிப்புரை, குறிப்புரை என்னும் மூன்று வகை உரைகளின் இயல்பையும் இணைத்துக் கையாள்வதைக் காண முடிகிறது. மூன்றிலும் பொழிப்புரைக்கே முக்கியத்துவம் கொடுப்பதைக் காண முடிகிறது.

பொழிப்புரை என்பது, பாடலின் பொருளை அடிமாறாமல், முறை மாறாமல், விடுத்தோ சேர்த்தோ கூறாமல் பொருள் உணர்த்தும் வகையில் சுருக்கமாக விளங்க வைக்கும் தன்மையுடன் எழுதப்படுவதாகும். இது ஒரு தொடரை மற்றொரு மொழியில் மொழியாக்கம் செய்யும் பணி போன்றது. கடினமான செய்யுள் நடையில் பொருள் விளங்கக் கடினமாக இருக்கும் பாடலின் அடிப்படைப் பொருளை அப்படியே உணர்த்தும் உரையே பொழிப்புரையாகும். இத்தகைய பொழிப்புக் கூறும் தன்மையே தணிகைமணியாரின் உரையில் பிரதானமாக எடுத்தாளப்படுகின்றது. செய்யுள் அடிக்கு நேர் வலது பக்கத்தில் பொழிப்புரை இடம் பெற்றிருப்பது இதன் சிறப்பு. மேலும் விளக்க வேண்டிய தொடர்புடைய கருத்துகளையும் மேற்கோள்களையும் சான்றுகளையும் பிற அடைமொழிகளையும் அப்படியே விளக்க உரையாகவோ கருத்துரையாகவோ எடுத்தாளாமல் அடிக் குறிப்பாகக் குறிப்புரையாகக் கூறியிருக்கும் தன்மையினைக் காண முடிகிறது. மேலும் பதவுரை மிகச் சுருக்கமாகவே இடம் பெற்றுள்ளது. அது பதவுரை எனக் குறிப்பிடப்படாமல் மிகக்

கடினமான சொல்லுக்கோ பொருள் மயக்கத்தை ஊட்டும் சொல்லுக்கோ அருஞ்சொற்பொருள் உணர்த்தும் தன்மை அடிக்குறிப்பில் இடம் பெறுகிறது. பொதுவாக உரையாசிரியர்கள் அரும்பதவுரையில் ஒவ்வொரு தொடரையும் முழுமையாகக் கொடுத்து அதற்குப் பொருள் கூறி இறுதியில் முழுமையாகத் தொடர் அமைத்து விளக்கும் நெறியைக் காணலாம். ஆனால் தணிகைமணியார் நூலின் இடது பக்கம் பாடலின் ஒவ்வோர் அடியையும் அமைத்து அதற்குரிய பொருளை வலது பக்கம் அதற்கு நேராகக் குறிப்பிட்டுச் செல்லும் தன்மையைப் பின்பற்றியிருப்பதால் மேற்குறித்த உரைமரபு தேவையற்றதாகி விடுகிறது. எனவே திருப்புகழ் உரையில் தணிகைமணியார் பதவுரை கூறாமல் நேராகப் பொழிப்புரைக்குச் சென்று விடுகிறார். இதர விரிவுரையோ, கருத்துரையோ இடம் பெறவில்லை. எனினும் அடிக்குறிப்பில் அருஞ்சொற்களுக்குப் பொருள் உணர்த்தும் தன்மையைப் பதவுரையாகவும் தொடர்புடைய மேற்கோள், இலக்கியம் மற்றும் பிற துறைச் செய்திகளை விரிவுரையாகவும் உரையின் இறுதியில் அடைப்புக்குள் குறிப்பிடும் சொற்றொடர் ஆசிரியரின் கருத்தினை உட்பொதிந்து நிற்பதால் அதனைக் கருத்துரையாகவும் கொள்ளலாம். ஆகவே தணிகைமணியார் பதவுரை, பொழிப்புரை, குறிப்புரை, கருத்துரை எனும் பெயர்கள் எதுவும் குறிப்பிடாமல் இயல்பாக அவற்றைக் கையாண்டிருப்பது அறியத்தக்கது.

'மைந்தா குமரா என' என்னும் திருப்புகழ் 330ஆம் பாடலுக்கு உரை கூறவந்த தணிகையார், பாடல் அடிகளுக்கு நேராகப் பொழிப்புரையைக் கூறி, அடிக்குறிப்பில் இயல்-உழுவல் (எழுமையும் தொடர்ந்த அன்பு), ஆக்கையை ஒழியாமல் - ஆக்கையை வீணாக்காமல், மதம் - மகிழ்ச்சி எனச் சில சொற்களைக் குறிப்பிட்டு அரும்பதவுரை கூறுகின்றார். அதோடு "ஆக்கையைப் போக்கப் பெற்று மெலிகின்ற என்னை" (பிறவியை வீணாக்கி வருந்துகின்ற என்னை) என்றார் மாணிக்க வாசகரும் - திருவாசகம் - நீத்தல் - 10. 147 ஆம் பாடலில் "உரைக்கப்படிக்குடிலை ஒழியாதே" என்ற இடத்தும் "உரைக்கும் தன்மையை உடைய இந்த உடலை ஒழித்து வீணாக்காமல்" எனப் பொருள் காணலாம். "காதலி சொல்லிற் பிறக்கும் உயர் மதம்" (நான்மணிக் கடிகை 5) சமயக் கொள்கை என்றுமாம் எனக் குறிப்புரை தருகிறார். மேலும், அப்பாடலில் "செண்டாடுதல் - நிலை குலைதல்" எனக் கூறி "அமண் கையரை வாதினில் செண்டடித்து" (சம்பந்தர் III 47-7) இதழ் - இதழி - கொன்றை - இதழ் மலர் கொக்கிற்கு (திருப்புகழ் 180) கமழ்மா இதழ் சடையார் (திருப்புகழ் 468), மகாக்கடல் - பெருங்கடல் போலப் பெருகி வந்த கங்கை. சதாசிவன் கோத்திரத்தின் அருள்பாலா -

இறைவன் ஒன்பது வர்க்கத்தில் நின்று தொழில் புரிவான். அவைதாம், சிவம், சக்தி, நாதம், விந்து ஆகிய அருவத்திருமேனி நான்கு, மகேசன், உருத்திரன், மால், அயன் என உருவத்திருமேனி நான்கு, சதாசிவமாகிய அருவுருவத் திருமேனி ஒன்று எனச் சிவஞான சித்தி 2-164, கந்தபுராணப்பாடல் 1-11-92, திருச்சிராப்பள்ளியின் சிறப்பு முதலிய பல்வேறு குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. இக்குறிப்புகள் அனைத்தும் குறிப்புரை எனப்பட்டாலும் அவை விரிவுரை விளக்கவுரை போன்று எளிதாகவும், தெளிவாகவும் விரிவாகவும் விளங்கிக் கொள்ளத்தக்க வகையில் அமைந்துள்ளன. பாடல் உரையின் இறுதியில் அடைப்புக்குள் குறிப்பிடும் "மனமே மைந்தா குமாரா எனும் ஆர்ப்பு உய மறவாதே" எனக் குறிப்பிடும் வேண்டுகோள் உரையாசிரியரின் கருத்துரையாக அமையும் இயல்பினை அறியலாம். இத்தன்மைகளை ஆராயும்பொழுது தணிகைமணியார், பதவுரை, பொழிப்புரை, விரிவுரை, விளக்கவுரை, கருத்துரை, குறிப்புரை ஆகிய அனைத்தையும் ஒருங்கே அமைத்துத் திருப்புகழ் உரையைச் சிறந்த உரை நூலாக்கியுள்ளார் எனலாம்.

## புலப்பாட்டு நெறி

புலப்பாட்டு நெறி என்பது, கருத்துகளை எளிமையாக, தெளிவாக உணர்த்துவதும் அதனைப் படிப்போரும் கேட்போரும் விரும்பி ஏற்றுச் சுவைப்பதுமான சரியான நெறியைத் தேர்ந்து, பயன்படுத்துவது ஆகும். மேலும் மேலும் படிக்கவோ கேட்கவோ தூண்டும் வகையில் ஈர்ப்பு உணர்வுடன் கருத்துப் புலப்பாட்டு நெறி அமைதல் வேண்டும். கருத்துப்புலப்பாட்டில் குழப்பமோ தெளிவின்மையோ, கடினமோ இருத்தல் கூடாது. சிறிய, எளிய தொடரமைப்பில் நேரடியாகப் பொருளுணர்த்தும் வகையில் நல்ல சுவையான சொற்றொடர்களை அமைத்துக் குழப்பமில்லாமல் ஆற்றொழுக்காகக் கூற வந்த கருத்தைத் தெளிவுபட இனிமையாகக் கூறுவது ஆகும். இந்நிலையில் பொருள் புலப்பாடு என்பது மிக முக்கியமான ஒன்று. பொருள் புலப்பாட்டில் குழப்பமான தன்மை கூடாது. சுற்றி வளைத்துப் பொருள் கூறாது நேரடியாகப் பொருள் உணர்த்தும் வகையில் அமைதல் வேண்டும். நல்ல நடையமைப்பும் சிறு சிறு தொடரமைப்பும் தேவையானதை மட்டுமே கூறும் தன்மையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் தன்மையும் புலப்பாட்டு நெறியின் மிக முக்கிய பண்புகளாக அமைகின்றன. இத்தன்மையினைத் தணிகைமணி வ.சு. செங்கல்வராயபிள்ளையிடம் பரவலாகக் காணமுடிகிறது. பல இலக்கியவாதிகள் கடினமான நடையில் - புரிவதற்குக் கடினப்படும் நடையில் கூறுவதே சிறப்பு

எனக் கருதும் சூழலில், தணிகைமணியார் மிக எளிதான நடையில் நல்ல சொற்களைப் பெய்து சிறுசிறு தொடர்களில் தேவையான பிற செய்திகளை வேகம் தடைபடாமல் அடிக்குறிப்பில் இடம் பெறச் செய்து, படிப்பவரை மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டும் வகையில் அழகுபட இலக்கிய நயங்களைக் கையாண்டு உரை வகுத்துள்ளார். தணிகைமணியாரின் புலப்பாட்டு நெறி படிப்பவரைச் சுண்டி இழுத்து முருகப்பெருமான் அருள்பெறத் திருப்புகழை நாளும் படிக்கச் செய்யும் ஈர்ப்பு நெறியாகும். சான்றாக ஒரு பாடல் உரையைக் கூறலாம். திருப்புகழ் 285ஆம் பாடலின் உரையில் மிகச்சிறிய தொடரை அடுக்கி அடுக்கி அமைத்துப் படிப்பவரை ஈர்க்கச் செய்கிறார் தணிகைமணியார்.

"குருவியெனப் பல கழுகு நரித்திரள்
அரிய வனத்திடை திருகமெனப்புழு
குறவை யெனக்கரி மரமு மெனத்திரி யுறவா
(திருப்புகழ் 285:1)

எனும் பாடல் அடிக்கு, "குருவி போலவும் பல கழுகு நரிக்கூட்டம் போலவும் அரிய காட்டிடையே உள்ள மிருகங்கள் போலவும் புழு, குறவை மீன், வரால்மீன் வகை போலவும் யானை போலவும் மரம் போலவும், திரிபவர்களுடைய உறவு (சம்பந்தம்) கூடாது" (தொகுதி 2:205) என உரை தருகிறார். இத்தொடரில் யாருடைய உறவு கூடாது என்பதைப் பேச்சு வழக்கு போன்று உம்மைத் தொகையில் அமைத்து, இடையே புரிதலுக்காகப் பேச்சு வழக்கு வடமொழிச் சொல்லையும் குறிப்பிட்டுச் செல்வதைக் காண முடிகிறது. அதோடு திரிபுரமெரித்த கதைக்குறிப்பு இடம் பெறும் இடத்தைச் சுட்டிக்காட்டி அந்தக் கதை முழுமையாக அடிக்குறிப்பில் இடம் பெறுமாறு உரை வகுத்துள்ளார். அதுமட்டுமன்றி, திருத்தணி மலையைச்சுட்டி அது தொடர்பான திருப்புகழ் குறிப்புகளை அடிக்குறிப்பில் தருகிறார். இத்தன்மை படிப்பவரின் வேகத்தையும் ஈடுபாட்டையும் தடைசெய்யாதவாறு அதே நேரம் தேவைப்படின் அறியத்தகும் வகையில், குறிப்புரையாக இடம் பெறுகின்றது. இதனால் மிக அழகிய, எளிய, தெளிவான, ஈடுபாட்டை ஏற்படுத்தும் தரமான புலப்பாட்டு நெறியைப் பெற்றவராகத் தணிகைமணியார் திகழ்ந்தமையைக் காணலாம்.

## தொடர் அமைப்பு

தணிகைமணியின் திருப்புகழ் உரை மிகவும் எளிமையும் தெளிவும் உடையது. சிறு சிறு தொடர் அமைப்புடன் உரை வகுத்திருக்கிறார். பாடலின் ஒவ்வொரு அடிக்கும் தனித்தனியாக

உரை கூறிச் செல்வதால் தனித்தனியாகப் படித்தறியும் வகையில் தொடர் அமைத்துள்ளார். செய்யுள் அடிகளுக்கு அப்படியே பொழிப்புரை கூறும் பணியையே பிரதானமாகக் கொண்டிருந்தமையால் செய்யுளுக்கு ஏற்ற தொடர் அமைப்பினைக் கொண்டு உரை வகுத்துள்ளார். திருப்புகழில் பொதுவாகப் பாடல்கள் ஒவ்வோர் அடியிலும் முற்றுப் பெறாமல் சில பாடல்கள் வரை கூட நீண்ட தொடர் அமைப்பினை உடையதாக அமைந்துள்ளன. இந்நிலையில் உரை கூறும் தணிகைமணியார் ஒவ்வோர் அடிக்கும் உம்மை விகுதியை அதிகமாகப் பயன்படுத்திச் சிறுசிறு தொடர் போன்ற உணர்வை ஏற்படுத்தி விடுகிறார். சில பாடல்கள் வரை முற்றுப்புள்ளி நீண்டு கொண்டே செல்லும் சூழலில் பாடல்களை இணைக்கும் விதத்திலும் பொருள் இலகுவாகப் புரியும் விதத்திலும் பலரும் திருப்புகழைப் பாராயணம் செய்து படிக்கும் நோக்கிலும் நீண்ட தொடர்களுக்கிடையில் எளிய இணைப்புச் சொற்றொடர்களைப் பயன்படுத்தி, நீண்ட தொடர் அமைப்பைப் பிரித்துச் சிறு தொடர் போன்ற உணர்வை ஏற்படுத்தி எளிதாக்குகிறார். எனவே, தணிகைமணியாரின் உரை அமைப்பினை ஆராய்ந்து பார்க்கும்பொழுது, அவர் பாடலுக்கு ஏற்ப மிக நீண்ட தொடர்களை ஏற்படுத்தினாலும் அவற்றை உம்மை விகுதிகளைச் சேர்த்துச் சிறு சிறு தொடர்கள் போன்று ஆக்கி, எளிதில் புரிய வைத்து விடும் நெறியை அறிய முடிகிறது. தொடர் அமைப்பில் இது அவரது தனித்தன்மையைக் காட்டுகிறது.

"பொன்னாலாய (தம்பம்) தூண் போன்றதும், வெட்சிமாலை அணிந்ததும், மெச்சும்படியான வீரவாளை அணிந்ததுமான அழகிய புலமலையோன், கடலிலே வஞ்சனை எண்ணத்துடன் புகுந்து நின்ற ஒப்பற்ற மாமரம் (சூரன்) பொடியாக (அழிய) கோபித்த சிவந்த சக்திவேலை ஏந்திய தாமரையன்ன திருக்கரத்தன், குமரன் என்று சொல்லி அருச்சித்து அத்தகைய தோத்திரங்களைச் சொல்லும் பாடலை மொழிந்து (பாடி) அத்தை (அதை) கற்று (படித்து) அற - நன்றாக - உற்றும் - அப்பாடலில் (ஈடுபட்டு) இருந்தும், உலகோர் (அறியாமையாற்) போய் (செல்வரிடம் போய்)- குனகியும் (கொஞ்சிப் பேசியும்), கைக்கு (உங்கள் கைக்கு) கற்பகம் ஒப்பென்று (கொடைத்திறத்திற் கற்பகவிருஷம் தான் நிகராகும் என்றும்) (நீங்கள்) அனகன்-யாதொரு பாவமுமில்லாதவர் என்றும் (மகாபுனிதர் என்றும்) யாசகர்கள் எதை இசைப்பட்டு வேண்டுகின்றார்களோ அதை அளிக்கும் (கொடுக்கும்) குமண வள்ளலே நீங்கள் என்றும் ஒப்பிட்டுக் (உம்மை) கூறி" (திருப்புகழ் 452ம் பாடல் உரை: தொகுதி 3:5) என்னும் நீண்ட தொடர் அமைப்பினை மேற்குறித்த கருத்திற்குச் சான்றாகக்

கொள்ளலாம். இத்தொடரில் மிக நீண்ட தொடரை உம்மை விகுதிகளை இணைத்துச் சிறுசிறு தொடர்கள் போன்று அமைத்துச் சென்றிருக்கும் தன்மையைக் காண முடிகிறது. மேலும், திருப்புகழ்ப் பாடலின் தன்மைக்கேற்பப் பொழிப்புரை கூறும் நோக்கில் இத்தகைய நீண்ட தொடர் அமைப்புகளைக் கையாளும் நெறியைத் தணிகைமணியார் பெற்றிருப்பதை இனம் காண முடிகிறது.

அதே பாடலில் குமணனுக்கு அடிக்குறிப்பில் குறிப்புரை கூறும் இடத்தில், "குமணன்-சிறந்த கொடையாளி; தன் தம்பி தனது நாட்டினைக் கொள்ளத் தான் காட்டகத்தே இருந்தபொழுது பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் இரப்ப, இவன் தனது தலையை வெட்டிக் கொண்டு போய்த் தம்பியிடம் கொடுத்துப் பரிசு பெறும்படி தனது வாளைப் புலவர்க்குக் கொடுத்தான்" (தொகுதி 3:4) எனக் குறிப்பிடுகிறார் தணிகைமணியார். இத்தொடரும் நீண்ட தொடரே. ஒரு கதை நிகழ்வையே ஒரு தொடரில் குறிப்பிட்டு விடும் தன்மையைக் காண முடிகிறது. இச்சான்று மூலம் உரையாசிரியர் பொதுவாகவே நீண்ட தொடர் அமைப்பில் கருத்துரைக்கும் இயல்பைப் பெற்றவர் என்பதை அறிய முடிகிறது. ஆயினும், அத்தொடரில் கால் புள்ளி, அரைப்புள்ளி, உம்மைவிகுதி ஆகியவற்றைப் பயன்படுத்திச் சிறு சிறு தொடர்கள் போன்ற உணர்வை ஏற்படுத்தி விடுவதைக் காண முடிகிறது. மேலும், மேற்குறிப்பிட்ட தொடரில் குமணன் என்ற எழுவாயை இடையிடையே "தன் தம்பி, தனது நாடு,தான் காட்டகத்தை, தனது தலையை, தனது வாளை" என்னும் நிலையில் ஐந்து இடங்களில் தன்மை ஒருமைப் பெயராகப் பயன்படுத்தியிருக்கும் தன்மையைக் காண முடிகிறது. இத்தன்மையே நீண்ட தொடராயினும் பொருள் மயக்கமோ புரிதலில் கடினமோ ஏற்படாத எளிமை மற்றும் தெளிவு நிலையை ஏற்படுத்துகிறது எனலாம். மேற்குறித்த சான்றுகள் வழி ஆராயும் பொழுது தணிகைமணியார் மிக நீண்ட தொடர் அமைப்பில் உரை கூறும் நெறி உடையவர்; ஆயினும் அதனை எளிமையாகவும், தெளிவாகவும் உணரத்தக்க வகையில் பயன்படுத்தும் திறனைப் பெற்றிருந்தார். அதற்காக அவர் கால்புள்ளி, அரைப்புள்ளிகளையும் உம்மை விகுதியையும் தன்மை, படர்க்கைப் பெயர்களையும் பயன்படுத்தினார் என அறிய முடிகிறது.

## பொருள் தெளிவு

பாடல் உரை பாடலின் முழுப் பொருளையும் எளிதாகவும், தெளிவாகவும் படிப்பவர் உணரும் வகையிலும் அமைதல்

வேண்டும். பொதுவாக, பழைய உரையாசிரியர்களான பரிமேலழகர் முதலியோர் வகுத்த உரைகளுக்கே உரை இயற்றும் நிலை இருந்தது. காரணம், அந்த உரைகளைப் படித்துப் பொருள் தெளிவடைவதில் கடினம் இருந்தது. இந்நிலை இன்றி எளிதாகப் பொருள் தெளிவாகும் வகையில் உரை வகுப்பதே சிறந்த உரை மரபாக இருக்க முடியும். இந் நெறியைத் தணிகை மணியார் பின்பற்றியமை அறியத்தக்கது.

ஒவ்வொரு பாடலுக்கும் பாடலின் மையப் பொருளை உணர்த்தும் ஒரு தலைப்பைக் கொடுத்து, உரை முடிவில் அதனை விளக்கும் முடிப்புரையாக அடைப்புக்குள் கருத்துரைத்திருப்பது உரையாசிரியர் பொருள் தெளிவு நோக்கத்தில் எழுந்த நெறியே ஆகும்.

*அரி கரி யுரித்திட்டங்க சன்புர*
*மெரிதர நகைத்துப் பங்கயன்சிர*
*மளவொடு மறுத்துப் பண்டணிந்தவ ரருள் கோனே*
**(திருப்புகழ் : 603 :7)**

என்னும் பகுதிக்கு உரை கூறுமிடத்து, "(நர) சிங்கத்தையும் யானையையும் (தோல்) உரித்து மன்மதனும் திரிபுரமும் எரிபட்டு அழியச் சிரித்து (அல்லது - மன்மதனுடைய - (புரம்) உடல் எரிபட்டு அழியச் சிரித்து) பிரமனுடைய தலையை ஒரு கணக்காக அறுத்தும், முன்பு பிரம கபாலத்தை அணிந்தவருமான சிவபிரான் தந்தருளிய தலைவனே!" (தொகுதி : 3:393) எனப் பொழிப்புரை கூறுகிறார். இப்பகுதியை ஆராயும்பொழுது, அடைப்புக்குள் பயன்படுத்தி யிருக்கும் சொற்களும் கருத்தாக்கங்களும் முழுமையாகப் பொருள் தெளிவு தரும் நெறியின்பாற்பட்டதே என்பது புலனாகும். அடைப்புக்குள் தந்திருக்கும் சொற்றொடர்கள் இல்லாமலே பொருள் விளங்கும். ஆயினும் குழப்பமின்றித் தெளிவுபடுவதற்காக இத்தகைய உத்தியை அவர் கையாண்டிருப்பதைக் காணலாம். அதோடு அரி, புரம், பிரமன் சிரம் அறுத்தது, அயன் சிரம் பண்டு அணிந்தது, எனும் சொற்றொடர்களுக்குத் தொடர்புடைய விளக்கங்களையும் தொடர்புடைய கதைகளையும், அவை இடம் பெற்றுள்ள திருப்புகழ் பாடல் அடி பற்றிய குறிப்புகளையும் பிற இலக்கியக் குறிப்புகளையும் அடிக்குறிப்பில் குறிப்புரையாக அமைத்திருக்கும் தன்மையைக் காண முடிகிறது.

அரி - நரமடங்கல் (சிங்க உரி - பாடல் 566, பக்கம் 292)

அயன்புரம் பொடித்தனை - கந்தபுராணம் I-5-11
கடமை யாதி விலங்கு தத்தம் . . . கண்டுயம் போவது கருதி

அன்னான் புரத்திடை உரைத்துப் போமால்" - கந்தபுராணம்: 2-5-4 பிரமன் சிரம் அறுத்தது - பாட்டு 286, பக்கம் 209 அயன் சிரம் பணிந்து அணிந்தது - பிரமனும் . . . இறக்கும் - இறந்தான் களேபரமும் - கொண்டு கங்காளராய் - அப்பர் : 4-112-7

என்னும் குறிப்புரை (தொகுதி : 3:392) பகுதியில் மேற்குறித்த உரை நெறியின் இயல்பை இனம் காண முடிகிறது. இதுபோன்று தணிகைமணியார், தொடர்புடைய புராணக் கதைகளையும் தத்துவார்த்த விளக்கத்தையும் பொருள் விளக்கத்தையும் திருப்புகழ் குறிப்புகளையும் பிற இலக்கியக் குறிப்புகளையும் பரவலாக உரை முழுமையும் இடம் பெறச் செய்திருக்கும் தன்மையைக் காணலாம். இக்கருத்துகளையே வாரியார் சுவாமிகள் விரிவுரை என்னும் தலைப்பில் தனித்தனியாக உரை கூறி விளக்கியிருப்பதைக் (1977:62) காண முடிகிறது. இதன் நோக்கம் உரையாசிரியரின் பொருள் தெளிவு ஏற்படுத்தும் உரைநெறியே அன்றி வேறில்லை. இத்தன்மை உரையாசிரியரின் பல்துறை அறிவையும் இலக்கியப் புலமையையும் பொருள் புலப்பாட்டுத் திறனையும் பரந்த நூலறிவையும் நுண்மாண் நுழைபுலத்துடன் ஆய்வுக் கண்கொண்டு பார்க்கும் ஆராய்ச்சித் திறனையும் அறியத் தருகின்றது.

## முருகப் பெருமான் சிறப்புகளை வெளிப்படுத்தும் நெறி

தணிகைமணியார் தமது திருப்புகழ் உரையில் முழுமையும் முருகப் பெருமானின் சிறப்புகளை வெளிப்படுத்துவதில் தனிக்கவனம் செலுத்தியிருப்பதைக் காண முடிகிறது. அருணகிரி நாதசுவாமிகளின் பக்தி நெறியை முழுமையாக உள்வாங்கிக் கொண்டு, அந்த உணர்வு சிறிதும் குன்றிவிடாமல் மென்மேலும் முருக பக்தியில் ஈர்ப்பு ஏற்படும் வகையில் உரையமைத்திருக்கிறார். "பொருள் உணர்ந்து ஓதுதல் பெரும் பயனாமாதலின், முருகன் அடியவர்கள் இந்த நல்ல சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுகிறோம்'' என அமிர்தவசனி (மார்ச்-ஏப்ரல் 1953) குறிப்பிடுகிறது. "தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமான் மீது எத்தனையோ தமிழ்ப் புலவர்கள் தீந்தமிழ்ப் பாமாலை புனைந்து மனம் உருகித் துதித்திருக்கின்றனர். அவர்களுள் தலை சிறந்த பக்தமணியான அருணகிரி நாதர் அகங் குழைந்து இயற்றிய திருப்புகழ்ப் பாடல்கள் அருமையான சந்தங்களில் அமைந்திருப்பதால் தனிச்சிறப்பு வாய்ந்தவை. திருப்புகழ்ப் பாடல்கள் ஓசை நயமும் பொருள் நயமும் கொண்டு முருகனடியார்களின் உள்ளங்களை எத்தனையோ காலமாகக் கனிய வைத்து வருகின்றன. உரையெழுதும் ஒப்பற்ற நற்பணியை

மேற்கொண்டு தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை எம்.ஏ. அவர்கள் தொண்டாற்றி வருகிறார்கள். பிள்ளையவர்கள் முருகனிடம் மாறாத நேயம் பூண்டவர்; தொன்மையான தமிழ் நூல்களும் பயின்றவர்; ஆராய்ச்சிப் புலமை மிக்கவர். அவரெழுதிய உரை சிறப்பியல்போடு விளங்குவதில் வியப்பில்லையல்லவா?" எனக்கல்கி (11.07.1954) குறிப்பிடுகிறது. முதல் மூன்று தொகுதிகளில் ஆறு படைவீடுகள், பஞ்சபூத ஸ்தலங்கள் ஆகியவற்றில் முருகவேளைக் குறித்த பாடல்களும் அற்புதமான விரிவுரையும் கொடுக்கப் பெற்றிருந்தன. நாலாம் தொகுதியில் காசி முதல் இராமேஸ்வரம் ஈறாக 157 ஸ்தலங்களைக் குறித்த 340 முருகன் பாடல்கள் உள்ளன. ஆராய்ச்சிக் குறிப்புகள் தெளிவும் எளிமையும் கொண்டு, முருக பக்தர்களுக்கு மிகுந்த பயன் அளிக்கும் வகையில் அமைந்துள்ளன" என ஆனந்தவிகடன் (15.5.1955) குறிப்பிடுகிறது. இத்தகைய இதழ் மதிப்பீட்டுக் கருத்துகள் தணிகைமணியின் உரையின் இயல்பையும் நெறியையும் முருகப் பெருமான் மீது அவர் கொண்டிருக்கும் ஈடுபாட்டையும் திருப்புகழ்த் தோய்வையும் பறைசாற்றும் வகையில் அமைந்துள்ளன.

> கூரா வன்பிற் சேரா நின்றக் கோயாநின்றுட்
> கோடார் செம்பொற் றோளா நின்சொற் கோடா
> தென்கைக் கருள்தாராய்
> (திருப்புகழ் : 57:2)

என்னும் பாடல் அடிக்கு உரை கூறுமிடத்து, "விருப்பமில்லாத (வெளி) அன்பிற் சோர்வுற்று நின்று எலும்போடு கூடிய (இச்) சரீரம் ஒய்ந்து நின்று உள்ளங்குலைந்து போகாதபடி மலை போன்ற செவ்விய அழகிய தோளனே! (அல்லது செம்பொன் மலை போன்ற தோளனே!) நினது சொல் (நினது திருப்புகழ்) (தொகுதி 1: பகுதி 2: 143) எனக் குறிப்பிடுகிறார். இப்பகுதியில் முருகப் பெருமானின் தோள், சொல், அருள்திறம் ஆகியவை சிறப்பிக்கப்படுகின்றன. மலை போன்ற தோளை - செம்பொன் மலை போன்ற தோளாகக் கொள்ளும் தன்மையும் சொல்லைத் திருப்புகழாகவே கொள்ளும் தன்மையும் சுட்டிக் காட்டத்தக்கன. அதோடு 'நின்சொல்' என்பதற்குத் தணிகைமணி கூறும் அடிக்குறிப்புரை முருகப் பெருமானின் சிறப்பினைத் தெளிவுபடுத்தும் நெறிக்குச் சான்றாக அமைகிறது. "நின்சொல் - என்பது முருகவேள், சம்பந்தராய் அருளிய தேவாரத்தைக் குறிக்கலாம்" பல்லூர்ப் பெருமணப் பாட்டு மெய்யாத்தில சொல்லூர்ப் பெருமணம் குடலரே தொண்டர்" என்னும் (சம்பந்தர்) திருவாக்கை நினைவூட்டுகிறது. சொல் - புகழ் எனவும் கொள்ளலாம்" (தொகுதி 1: பகுதி 2: 142) என்னும்

குறிப்புரைப் பகுதி முருகப் பெருமானை 'வேள்' எனக் குறிப்பிட்டுச் சம்பந்தர் பெருமானுடன் தொடர்புபடுத்தி அவரது சொல்லே திருப்புகழ் என அதனை உயர்வு படுத்திக் கூறும் தன்மை மூலம் முருகப் பெருமான் சிறப்புகளைத் தணிகைமணி உணர்த்தும் பாங்கினை இனம் காணலாம்.

**சினங்கள் கொண்டிலங்கை மன்சிரங்கள் சிந்த**
**வெஞ்சரந்தெரிந்த வன்ப ரிந்த இன்ப மருகோனே**

**சிவந்த செஞ்ச தங்கையுஞ்சி லம்பு தண்டையும் புனைந்து**
**செந்தில் வந்த கந்த எங்கள் பெருமானே**
**(திருப்புகழ்: 61)**

எனும் அடிக்கு உரை கூறுமிடத்து, திருச்செந்தூரில் பாலசுப்பிரமண்யராய் எழுந்தருளினாராதலின் - சதங்கை, சிலம்பு, தண்டை, கிண்கிணி அணிந்தவை கூறப்பட்டது. செய்யுள் 16, 47, 52ம் பார்க்க (தொகுதி 1: பகுதி 2: 150) எனக் குறிப்பிட்டு முருகப் பெருமானின் தோற்றம் பற்றி மிகத் தெளிவான நுணுக்கமான உண்மையை அறியத்தருகிறார். இச்சான்றுகள் தணிகைமணியின் முருகப் பெருமான் சிறப்புகளை வெளிப்படுத்தும் நெறியினைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

## அடைப்புக்குறி ஆளுமை

பொதுவாக ஒரு பொருள் பற்றிக் கருத்துரைக்கும் பொழுது அடைப்புக்குறி எடுத்தாளும் தன்மை வழக்கில் இல்லை. பொருள் புரியாத பிறமொழிச் சொற்கள் எடுத்தாளும் போது அல்லது பொருள் உணர்த்துதலுக்காகப் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தும்போது மட்டுமே அடைப்புக்குறியைப் பயன்படுத்தும் போக்கினைக் காண முடிகிறது. ஆனால் தணிகைமணியார் இந்நிலையிலிருந்து மாறித் தேவைப்படும் இடத்திலெல்லாம் சர்வ சாதாரணமாக ஒரு மொழிச் சொற்களுக்கே விளக்கம் கூறும் நோக்கிலோ இணைப்புச் சொற்களைப் பயன்படுத்தும் நோக்கிலோ பொருள் ஐயமோ குழப்பமோ ஏற்படா வகையிலோ அடைப்புக் குறியைப் பயன்படுத்தி உரை வகுத்திருக்கும் தன்மை பரவலாகக் காணப்படுகிறது. இதனால் அடைப்புக் குறியை எடுத்தாளும் நெறியைத் தணிகைமணியாருக்கே உரித்தான தனித்தன்மையாகக் கொள்ளலாம்.அதோடு இவ்வுத்தியை இவ்வுரையாசிரியர் மட்டுமே மிக ஆழமாகக் கையாண்டிருக்கும் தன்மையைக் காண முடிகிறது. சான்றாக ஒன்று கூறலாம்.

*ஆதி சத்திசா மாதேவி பார்வதி நீலி துத்தியார் நீணாக பூஷணி*
*ஆயிநித்தியே கோடீரமாதவி யென்று தாழும்*
*(திருப்புகழ் : 997:6)*

என்னும் பாடல் அடிக்கு "ஆதி சக்தியே! (சாமாதேவி) சாம வேதம் போற்றும் தேவியே (அல்லது சாம நிறம் -பசுமை (பச்சை) நிறம் கொண்ட தேவியே)! பார்வதீ! நீலியே! (நீல நிறத்தவளே) புள்ளிகள் நிறைந்த பெரிய பாம்புகளை அலங்காரமாக அணிந்தவளே! (ஆயி) தாயே! (நித்தியே) (என்றும் இருப்பவளே) அழிவிலாதவளே! (கோடீரம்) சடையுள்ள துர்க்காதேவி - என்று தோத்திரம் செய்து வணங்குகிற" (தொகுதி 5:11) என உரை வகுத்திருக்கும் தன்மையைக் கூறலாம். இப்பகுதியில் ஓரடியில் இவ்வுரைப் பகுதியில் ஒவ்வொரு சொல்லுக்கும் தொடர்புடைய விளக்கத்தையும் இணைப்புச் சொல்லையும் அடைப்புக்குள் குறிப்பிட்டுப் பொருள் தெளிவுற விளக்கியிருக்கும் இந்நெறி தணிகைமணியின் உரை கூறும் பண்பின் சிறப்பு இயல்பாகவும் நெறியாகவும் அமைந்திருப்பதற்குச் சான்றாகிறது. இந்நெறியைப் பின்பற்றிப் பின்னால் உரை வகுத்த வாரியார் சுவாமிகளும் சிற்சில இடங்களில் பதவுரை, பொழிப்புரை கூறுமிடத்து மிக அரிதாக இது போன்று அடைப்புக்குறி பயன்படுத்துவதைக் காண முடிகிறது. இது தணிகைமணியாரின் தாக்கத்தினால் எழுந்த நெறியே ஆகும்.

## அடிக்குறிப்பு மரபு

அடிக்குறிப்பு என்பது ஆய்வு நெறிமுறைகளில் ஒருவகைப் பண்பு ஆகும். இது கூறவந்த பொருளை முழுமையாக ஐயமறத் தெளிவுடன் அறியும் நோக்கில், தொடர்புடைய பிற செய்திகளைக் குறித்து நிற்பதாகும். இதனை ஆய்வேட்டின் மிக முக்கியமான பகுதியாகக் கொள்வர். அடிக்குறிப்பே ஆய்வின் முழுமையை அறியத்தரும். கருத்துகளின் ஓட்டத்தைத் தடை செய்யாமல் ஆற்றொழுக்காகச் செல்ல வேண்டும் என்னும் நோக்கில் அடிக்குறிப்புகள் நூலின் உட்பகுதியில் கூறப்படாமல் பின்னால் வரிசைப்படுத்திக் கூறப்படுகிறது. இந்நிலையில் விளக்கம் தேவைப்படும் இடத்தில் சிறு சிறு குறியீடுகளையோ எண்ணையோ இட்டுக் காட்டி, அந்தப் பக்கத்தின் அடியிலோ, அல்லது அந்த இயல் முடிவிலோ குறிப்பிடும் தன்மையைக் காணலாம். இவ் அடிக்குறிப்பில் பொதுவாக ஒரு கருத்து எடுத்தாண்ட நூல் மற்றும் கருத்தாளர் பற்றிய தெளிவான குறிப்புகளும் தொடர்புடைய கதைகள், கருத்துகள் முதலியவையும் இடம் பெறுவதுண்டு. இக்காலத்தில் இக்குறிப்பு அந்தந்த இடத்திலேயே அடைப்புக்குள்

உரைப் போக்கிலேயே குறிப்பிடப்பட்டுவிடுகிறது. இத்தன்மைகளை அணுகும்பொழுது, இவ்விரு முறைகளையும் தணிகைமணியார் தம் உரை நூலில் இடம் பெறச் செய்யும் பாங்கினை அறிய முடிகிறது. தணிகைமணியாரின் இத்தகைய அடிக்குறிப்பு நெறி ஒன்றை வைத்தே அவர் சிறந்த ஆய்வாளர் என்றும் அவரது உரை சிறந்த ஆய்வு நூல் என்றும் கொள்ளலாம். காரணம் இக்குறிப்புரையில் உரையாசிரியர் பலவிதமான கருத்துக் குவியல்களையும் பயனுள்ள செய்திகளையும்' புராணச் செய்திகளையும் தத்துவ விளக்கங்களையும் பிற இலக்கியச் சான்றுகளையும் எடுத்தாண்டிருக்கும் தன்மையைக் குறிப்பிடலாம். தணிகைமணியின் இக்குறிப்புரை மட்டுமே அவரது உரைநெறியின் முழுமையையும் உணர்த்துவதுடன் பல்துறை அறிவு நுண்மாண் நுழைபுலத் திறனையும் அறியத் தருவதைக் காணலாம். உரையாசிரியரின் இக்குறிப்புரையைப் பின்பற்றி இச்செய்திகளையே விரித்து, வாரியார் சுவாமிகள் விரிவுரை எனும் தலைப்பில் தெளிவாக்குகின்றார். தணிகைமணியின் இக்குறிப்புரைப் பகுதி படித்தும் குறித்தும் பாதுகாக்கப்பட வேண்டிய ஒரு கருத்துக் கருவூலம். இத்தகைய கருத்துக் கருவூலத்தை உரை படிக்கும் வேகத்திற்குத் தடையாக இருத்தல் கூடாது என்பதற்காகவே அடிக்குறிப்பு போன்று அமைத்திருக்கிறார் உரையாசிரியர்.

'அங்கை கொண்டு' எனத் தொடங்கும் திருப்புகழ் 46ஆம் பாடலுக்கு உரை வகுக்குமிடத்து, அப்பாடலில் இடம்பெறும் சொற்றொடர்களுக்குக் கூறியிருக்கும் அடிக்குறிப்பு குறிப்பிட்டுக் கூறத்தக்கது.

ஏழுபார் - பூலோகம், புவனலோகம், சுவர்க்கலோகம், மகலோகம், தவலோகம், சாலோகம், சத்தியலோகம்

ஏழு மண்டலம் - வாயு மண்டலம், வருண மண்டலம், சந்திர மண்டலம், சூரிய மண்டலம், நக்ஷத்திரமண்டலம், அக்கினி மண்டலம், திரிசங்கு மண்டலம்.

மலை நில ஊரும் - திருச்செந்தூரில் - மலை நிலம் உண்டு. "செந்தின் மாமலை யுறும் செங்கல்வராயா - கந்தர் சஷ்டிக் கவசம் (தொகுதி : 5: 23)

என்னும் அடிக்குறிப்புப் பகுதியில் புதிய, பலருக்கும் தெரியாத உண்மைகளையும் பொது அறிவுச் செய்திகளையும் இலக்கிய மேற்கோள் ஆதாரங்களையும் எடுத்தாண்டிருப்பதைக் காணலாம். மேலும் வரலாற்றுக் கதைகள் (தொகுதி 5:79) புராணக் கதைச்

சுருக்கங்கள், திருவிளையாடல்கள், தத்துவார்த்தச் செய்திகளையும் எடுத்தாள்வதைக் காண முடிகிறது. உரையாசிரியரின் தெளிந்த பல்துறை அறிவுக்கு இது சான்று.

## மொழி நடை

தணிகைமணியாரின் உரைநெறியில் மொழிநடை எடுத்தாளும் திறம் மிக முக்கியமானது. உரைநடையில் இவருக்கு ஒப்பான செறிவு, இனிமை, தெளிவு, நயம் ஆகியவற்றின் இணையை வேறு எவரிடத்தும் காண இயலாத அளவுக்குச் சிறந்த மொழிநடையைப் பெற்றவர். செய்யுளில் திருப்புகழுக்கு உள்ள சிறப்பியல்புகள் அனைத்தையும் உரைநடையில் பெற முயன்றிருக்கிறார் தணிகைமணியார். அதில் வெற்றியும் பெற்றுள்ளார். மூல நூலாசிரியருடன் போட்டியிட்டுச் சொற்செறிவையும் இனிமையையும் கருத்து ஆழத்தையும் வெளிப்படுத்துகிறார். பாடல் அடிக்கு நேராகப் பொழிப்புரை கூறுமிடத்துச் சுருங்கக் கூறி விளங்க வைக்கும் நெறியைக் கையாள்கிறார். உரைநடையில் பாடல் கருத்திற்கேற்ப நீண்ட தொடர் தலைப்பை எடுத்தாள்வதைக் காண முடிகிறது. ஆயினும் கால்புள்ளி, அரைப்புள்ளி, உம்மை விகுதி, ஆச்சரியக்குறி முதலியவற்றைப் பயன்படுத்திச் சிறு சிறு தொடர் போன்ற உணர்வையும் தெளிவையும் ஏற்படுத்துகிறார். படிப்போருக்கு எளிதில் புரியும் சொற்களைக் கையாண்டிருப்பதும் பொருள் புலப்பாட்டுக்காக அடைப்புக்குள் இணைப்புச் சொற்களைக் கையாள்வதும் இவரது தனிச் சிறப்பாக அமைகிறது. வடமொழிச் சொற்களை இடையிடையே கலந்து உரை எழுதும் நெறியையும் வடமொழிக் கருத்துகளைக் கலந்து கொடுக்கும் பாங்கினையும் காண முடிகிறது. உரையில் செறிவை ஊட்டுவதற்காகப் பல்துறைச் செய்திகளையும் புராணக் கருத்துகளையும் மேற்கோள்களையும் உவமைகளையும் எடுத்தாண்டுள்ளார்.

"இன்ப ஓசையின் சிறப்பை எப்படிக் கூறுவது? கம்பீரமான புரவியின் மீதமர்ந்து செல்லும் இன்பமும் யானை நடப்பது போன்ற அசைவையும் மானின் துள்ளலையும் மின்னலின் வெட்டையும் திருப்புகழ்ப் பாடல்களில் காணலாம். எளிதான பதங்கள், ஆனால் சேர்ந்திருக்கும் தோற்றமோ நம்மைப் பயங்காட்டும். பாடினாலே சப்த ஜாலங்கள் எழும். பொருளோ வேதத்தின் சாரம். ஞானோபதேசம் நிறைந்த திருப்புகழ் கருப்பொருள் கூறுபவர் யாரும் இல்லையே எனப் பலரும் ஏங்கியதுண்டு" (அமுதசுரபி : மே:1954); "திருப்புகழின்

பாசுரங்களுக்குத் தெளிவான உரை வகுக்கப்பட்டுள்ள அரிய நூல்" (சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு மலர் 25:இதழ்-12, நந்தன மார்கழி டிசம்பர் 25) எனும் இக்கருத்துகள் தணிகைமணியின் மொழி நடையை அறியத் துணைசெய்கின்றன. தணிகைமணியார்தம் உரையின் வடமொழிச்சொற்கள் ஆளுமைக்கு, சூரியன் (தொகுதி 3:209), நக்ஷத்திரங்கள் (தொகுதி 1:301) பரிசுத்தம் (தொகுதி 1: 279) சூரன் (தொகுதி 1: 281) சரசலீலை (தொகுதி 1: 295) பதிவ்ரதை (தொகுதி 1:323) மோக்ஷவீடு (தொகுதி 1:325) வாசனை (தொகுதி 1:331) ஜலத்தோற்றம் (தொகுதி 1:345) விஷம் (1:353) முதலியவற்றைச் சான்றாகக் கூறலாம். டம்பப் பேச்சு, (தொகுதி 1:281) சும்மா இரு (தொகுதி 1:325) அலைச்சல் இல்லாதபடி (தொகுதி 1:351) மனக் கொதிப்புடன் (தொகுதி 1:353) என்பவை போன்ற சொற்களின் ஆளுமையிலிருந்து பேச்சுவழக்குச் சொற்றொடர் களைப் பயன்படுத்தும் பாங்கினையும் இனம் காண முடிகிறது. மேலும் 'வளி-சீவனாகிய 'ய', மகார முதல்வன்- நாதத்துக்குத் தலைவனான சிவன், நகாரத்தை முதலாக வைத்துக் கூறுவது வேதமுறை, சிகாரத்தை முதலாவதாக வைத்துக் கூறுவது ஆகம முறை (பஞ்சாக்ஷர விளக்கம்- பக்கம் 73,74) என்னும் குறிப்புரை போன்று (தொகுதி 3:295) பல இடங்களில் வடமொழியோடு தொடர்புடைய வைதிக நெறி கருத்துகளை எடுத்துக் காட்டி விளக்குவதைக் காண முடிகிறது. மேலும் வரலாற்றுக் குறிப்புகள் புராணச் செய்திகளையும் இலக்கியச் சான்றுகளையும் பரவலாக எடுத்தாளும் நடையைக் காண முடிகிறது. கஜமுகன் கதை (3:254), திருவானைக்கா கோயில் பற்றிய குறிப்பு (3:125), சிதம்பரத்தில் பேறு பெற்றவர்கள் பற்றிய செய்தி (3:414), வள்ளியின் வரலாறு (3:450), தில்லைவாழ் அந்தணரின் மேன்மை (3:453), சூரிய குமாரர்கள் பற்றிய கதை (3:455) முதலியவையும் திருமந்திரம், தேவாரம், திருப்புகழ், சிவஞான சித்தி உள்ளிட்ட சாத்திர நூல்கள் முதலியவற்றிலிருந்து பல குறிப்புகளையும் எடுத்தாண்டிருப்பதைக் காணலாம்.

மேற்குறிப்பிட்ட கருத்துகளின் அடிப்படையில் ஆராயும் பொழுது தணிகைமணியார் தாம் கூற வந்த செய்தியினை முழுமையாகவும் தெளிவாகவும் சுவைபடவும் கூறும் பாங்கில் எளிமையான மொழி நடையை அமைத்திருக்கும் தன்மையைக் காண முடிகிறது.

## சொல்லாட்சி

ஒரு இலக்கியப் படைப்பை இனிமையாக்குவதில் பெரும்பங்கு வகிப்பது சிறந்த சொல்லாட்சியே ஆகும்.

சொல்லாட்சியே படைப்பாளனின் படைப்புத் திறனையும் புலமைத்திறனையும் நுணுகிய அறிவுத் திறனையும் எடுத்துக் காட்டுகிறது. அருணகிரிநாத சுவாமிகள் தம் திருப்புகழில் தமிழும் வடமொழியும் கலந்த நல்ல ஆழமான சொல்லாட்சியைக் கையாள்கிறார். உரை வகுத்த தணிகைமணியாரும் மூல நூலாசிரியருக்கு இணையாக ஈடு கொடுத்துப் பாராட்டத்தக்க வகையில் நல்ல சொற்களை எடுத்தாள்வதைக் காண முடிகிறது. நல்ல தரமான இலக்கியச் சொற்கள், சாதாரண தமிழ் மொழிச் சொற்கள், பேச்சு வழக்குச் சொற்கள் எனக்கலந்து படிப்போருக்கு இனிமைதரும் வகையில், எளிதில் புரியும் நோக்கில் சொற்களை எடுத்தாண்டுள்ளமையை இனம் காண முடிகிறது. சான்றாகச் சிலவற்றைக் கூறலாம். தருக்கம் (1:83), பிரமஹத்தி (1:85), கூடல், ஊடல் (1:87), க்ருபைச்சித்தம் (1:101), ப்ரபஞ்ச மயக்கம் (4:331), இலச்சினை (4:459), துஷ்டர் (1:73), புருஷர் (1:75), ஸ்தலம் (4:557), ஜெனனி (4:561) போன்ற வடமொழிச் சொற்களும் தினைப்புனத்திருந்த செவ்விய (1:77), தனம் - கொங்கை (1:81), கலக்கம் (4:549), பாசறை (4:557), கை உகிர் (4:647), தடக்கை (4:669), ஆனையின் கோடுகள் (3:225), இளம்பிறை (3:313), மதவேழம் (3:465) போன்ற இலக்கிய நயமுடைய சொற்களும் பயன்படுத்தும் பாங்கினை அறிய முடிகிறது. தினந்தோறும் (1:75), சமுத்திரம் (4:473), தெருவின் வழியே (4:549), கோயில் (4:557), குளிருக்கு அடக்கமான (4:659), சோறு, படுக்கை, (4:659) போன்ற சாதாரண மொழி வழக்குச் சொற்களையும் காசு பறிக்கும் (1:77), வாசனை பலவும் தடவி (1:81), செட்டி (1:83), நீலிவேஷம் (1:85), பிரயாசையுடனே (4:443), படுக்க உத்தரவு (1:85), நல்ல கதி (4:539), பாவம் (4:547), ரவிக்கை அணிந்த (4:549), ரேகைகள் உள்ள (4:557), ஜெயித்து அடக்கி (4:561), கொஞ்சிக் குலவி, பாக்கியம் (4:601), சஞ்சாரம் (4:659) போன்ற பேச்சு வழக்குச் சொற்களையும் சுட்டிக் காட்டலாம்.

சில சமயங்களில் ஒரு சொல்லைப் பயன்படுத்தி அதற்குரிய நுட்பமான விளக்கத்தை அடிக்குறிப்பில் கொடுப்பதையும் காணமுடிகிறது. அக்குறிப்பே அச்சொல்லின் பயன்பாட்டை முழுமையாக அறியத் தருகிறது. முதல் தொகுதியில் இடம்பெறும் 34ஆம் பாடல் உரையின் இறுதியில், 'தமிழ் தந்து இப்படியாள்வாய்' என்பதற்குக் கருத்துரை கூறுமிடத்து 'இப்படி' எனும் சொல்லைக் கையாள்வதைக் காண முடிகிறது. இச்சொல்லின் பொருள் புரியாத நிலையில் அடிக்குறிப்பில் அதற்கு விளக்கம் தருகிறார் தணிகைமணியார். “இப்படி அப்படி எனும் சொற்கள், இக்கணமே, அக்கணமே, இந்த ஒப்பற்ற வகையில், அந்த ஒப்பற்ற வகையில் எனும் பொருள்களில் வருகின்றன. ஒப்புடை ஒருவகை உருவழிய

அப்படி அழலெழ விழித்தவனே - தேவாரம், சம்பந்தர் III-4-7. இனிதுகவி அப்படி ப்ரசாதித்த பாவலனும் - வேடிச்சி காவலன் வகுப்பு மங்கா நற்பொருள் இந்தா அற்புதம் என்றே இப்படி அருள்வாயே - திருப்புகழ் 861, ஒரு பொருள் அப்பர்க்கப்படி ஒப்பித் தர்ச்சனை கொண்ட நாதா - திருப்புகழ் 866 (தொகுதி 1:97) என்னும் உரை பகுதி மூலம் 'இப்படி' எனும் சொல் எடுத்தாளப்படும் பாங்கினை விளக்குவதைக் காணலாம். இதுபோன்ற சொற்களைத் தம் உரையில் பரவலாக இடம் பெறச் செய்து, விளக்கும் நெறியைக் காண முடிகிறது. இத்தன்மை சுருங்கக் கூறி விளங்க வைக்கும் நெறியால் வந்ததே எனலாம். எனவே தணிகைமணியாரின் திருப்புகழ் உரையில் பலதரப்பட்ட சொற்களும் பரவலாக எடுத்தாளப்படுவதை அறிய முடிகிறது. பொருள் உணர்வு குன்றாமல் புலப்படுத்துவதே சொல்லாட்சியின் நோக்கமாக இருந்துள்ளமை புலனாகிறது.

## உவமை நயமும் உரை நயமும்

உரையாசிரியர் தம் கருத்தை விளக்க, ஏற்ற இனிய உவமை களையும் பிற இலக்கிய நயங்களையும் எடுத்தாண்டிருப்பதைக் காண முடிகிறது. உவமை என்பது நூலுக்கு இனிமை சேர்ப்பது. படிப்பவர் மனத்தில் இலக்கிய இன்பத்தை ஊட்ட வல்லது. விளக்க விரும்பும் ஒரு பொருளை அனைவருக்கும் தெரிந்த ஒரு பொருளைக் கொண்டு உவமை கூறி விளக்கும் பொழுது எளிதாகவும் இனிமையாகவும் புரிந்து கொள்ள முடிகிறது. மேலும் கற்போருக்கு ஆர்வத்தைத் தூண்டும் வகையிலும் உவமை மற்றும் பிற இலக்கிய நயக் கூறுகள் முக்கிய பங்கு வகிக்கின்றன. திருப்புகழ் மூல நூலாசிரியரான அருணகிரிநாதரே தம் நூலில் உவமைகளைப் பரவலாக இடம் பெறச் செய்வதைக் காண முடிகிறது. அந்த உவமை களைத் தெளிவுபட விளக்கும் பணியிலேயே தணிகைமணியார் தம் உரைநெறியை அமைத்துக் கொண்டிருப்பதை அறிய முடிகிறது.

நீலியர் என்பவரை விளக்க வந்த விடத்து, நீலி போன்றவர்; உருக்கம் உள்ளவர் போல நடிப்பவர் என உவமை மூலம் விளக்கி (1:77), அவரை அடையாளப்படுத்துகிறார் தணிகைமணி. மேலும், நீலியைப்பற்றி கதை கூறுமிடத்து,."நீலி வேஷம் ஏன் போடுகிறாய்? திருவாலங்காட்டு நீலி அழுகை ஏன் அழுகிறாய்?'' என்னும் பழமொழியை (1:87) எடுத்தாண்டிருப்பதைக் காணலாம். கண்டாகும்பால் என்பதற்குக் கற்கண்டு போலும் இனிமையுள்ள பால் (1:114) எனக் குறிப்பிட்டுப் பாலின் சுவைக்குக் கற்கண்டை உவமைப்படுத்துகிறார். 'உத தரிசமாம்" என்பதை "ஜலத்தோற்றம் போல ஊருகின்ற'' (1:344) எனஉவமை கூறி விளக்குகிறார்.

மகாக்கடல் என்பதற்குப் பெருங்கடல் போலப் பெருகி வந்த கங்கை (2:326) என உவமை கொள்கிறார். சுறாவாகிய பெருமீன் சிறுமீன்களை அடக்கி உண்ணுவது போல நற்பெரிய கல்வி-நல்ல அருள் ஞானக்கல்வி முன் பிற கலை ஞானங்கள் அடங்கி ஒடுங்கும்' (5:552). இச்சான்றுகள் தணிகைமணியார், தமது உரை விளக்கத்தின் தெளிவிற்காக உவமைகளைக் கையாண்ட நெறியைப் புலப்படுத்து கின்றன. அதோடு மூல நூலாசிரியர் எடுத்தாண்டிருக்கும் உவமைகளையும் எளிதில் புரியும்படியும் இனிமை விளங்கும்படியும் உரை வகுத்துத் தரும் நெறியையும் காணலாம்.

மேலும் இலக்கண விளக்கம் கூறி உரைவிளக்கம் தரும் மரபையும் காண முடிகிறது. சான்றாக,

குவட்டி - இது கோட்டி என்பதன் மரூஉ (தொகுதி 1:266)
நெறி - நேதி, இது நியதி என்பதன் மரூஉ (தொகுதி 1:268)
மகரம் - மகர மீனுக்கிடமாகிய கடல் - இஃது ஆகுபெயர் (1:268)
பற்பலரை - பற்பலர் - ஐ - சாரியை (1:358)
நஞ்சு - நஞ்சுடைய பாம்பு- இஃது ஆகுபெயர் (1:152)

முதலியவற்றைக் கூறலாம். இத்தரவுகள் வழித் தணிகைமணியார் உவமை நயமும் பிற உரைநயமும் கொண்டு உரை வகுத்திருக்கும் நெறியினை விளங்கிக் கொள்ள முடியும். "திருப்புகழ்ப் பாடல்கள் ஓசை நயமும், பொருள் நயமும் கொண்டு முருகனடியார்களின் உள்ளங்களை எத்தனையோ காலமாகக் கனிய வைத்து வருகின்றன" எனும் கல்கியின் (11:07:1954) மதிப்புரைக் கருத்து திருப்புகழின் சிறப்பினையும் நயம்பட உரைக்கும் தன்மையினையும் அறியத் தருகிறது. இக்கருத்துகள் தணிகைமணியின் திருப்புகழ் உரை நயத்தையும் உவமைத் திறத்தையும் அறிய உதவும் சான்றுகளாக அமைகின்றன.

## மேற்கோள் ஆளுமையும் சான்று காட்டும் நெறியும்

நூலின் மேற்கோள் ஆளுமையும் சான்று காட்டும் நெறியும் அந்நூலின் செறிவையும் தரத்தையும் நூலாசிரியரின் நுண்மாண் நுழைபுல அறிவுத் தெளிவையும் அறியத்தரும் கண்ணாடிகளாகும். பொதுவாக உரையாசிரியர்கள் தாம் கூறக் கருதிய பொருளை விளக்குவதற்காக அதனோடு தொடர்புடைய பிற இலக்கியச் சான்றுகளையும் உவமைகளையும் பழமொழி மற்றும் பலதுறைக் கருத்துகளையும் பிறர் கூறிய செய்திகளையும் நூற்கருத்துகளையும் மேற்கோளாக எடுத்தாளும் மரபைக் காண முடிகிறது. அந்த வகையில் தணிகைமணியும் தமது திருப்புகழ் உரையில் தேவைப்படும் இடங்களில் பொருளை உணர்த்தும் நோக்கில்

பல்வேறு வகையான மேற்கோள்களை எடுத்தாண்டிருப்பதைக் காண முடிகிறது. ஆனால் இம்மேற்கோள்களைச் சான்று காட்டி விளக்குமிடத்து அவற்றை உரையுடன் சேர்த்துக் குறிப்பிடாமல் அடிக்குறிப்பாக அந்தப் பக்கத்தின் அடியில் குறிப்பிட்டுச் செல்கிறார். இந்நெறி, கூறவந்த பொருள் தெளிவிற்கு மிகவும் பயனுள்ள வகையில் அமைந்துள்ளது. அவ்வாறு எடுத்தாளும் மேற்கோள்கள் பொருள் புலப்பாட்டிற்குச் சான்றுகளாக அமைவதையும் நயமாக விளங்குவதையும் விரிவான விளக்கமாகத் திகழ்வதையும் காணலாம். அந்த வகையில் தணிகைமணியார் இலக்கியச் சான்றுகள், நூல் கருத்துகள், மூலநூல் குறிப்புகள், வரலாற்றுக் குறிப்புகள், புராணச் செய்திகள், பல்துறை அறிவுக் கருத்துகள் முதலியவற்றை மேற்கோள் சான்றாகக் கூறும் நெறியை இனம் காண முடிகிறது. இக்கருத்தாக்கப் பின்னணியில், பொய்யாமொழிப்புலவர் வரலாறு (2:562 திருப்புகழ் 422), மாணிக்கவாசகர் வரலாறு (2:601 திருப்புகழ் 439), சங்கப் பலகையின் வரலாறு (5:136:1055), அருணகிரியார் வரலாறு (5:138:1056) முதலிய வரலாற்றுக் குறிப்புகளை மேற்கோள் சான்றுகளாக எடுத்தாண்டுள்ளார். தாடகை வதை (2:582 திருப்புகழ் : 431), கதிர்காமத்தில் வேடன் வேலவரை வணங்கிப் பேறுபெற்றதன்மை (2:588 திருப்புகழ் : 433), அமுதவல்லி சுந்தரவல்லி முருகனை மணக்க விரும்பிய கதை (2:590 திருப்புகழ் 435), முருகவேள் ஆடிய கூத்து வகைகள் (5:348, 349 திருப்புகழ் 1150), மன்மதனை எரித்த கதை (5:352 திருப்புகழ் : 151), வள்ளியின் கதை (5: 358:1152), இந்திரன் ஆயிரம் கண் பெற்றது (5: 208: திருப்புகழ் 1095), சிவபிரான் அரி அயற்கு அரியனாய் நின்றது (5:14:1000) முதலிய புராணக் கதைச் செய்திகளைச் சான்று காட்டும் திறத்தை அறிய முடிகிறது.

“பாரியான கொடை கொண்டலே” (திருப்புகழ் 123) என்னும் அடிக்குப் பாரி கடை எழுவள்ளல்களில் ஒருவன்; முல்லைக் கொடி தன் தேரைத் தடுக்க அது வேண்டிற்றாகக் கருதித் தனது பெரிய தேரை அதற்குக் கொடுத்தவன் (சிறுபாணாற்றுப்படை 89, 91) “கொடுக்கிலாதானைப்பாரியே யென்று கூறினும் கொடுப்பாரில்லை” (சுந்தரர் தேவாரம் - திருப்புகலூர்) சீவகன் சீவக சிந்தாமணிக் கதாநாயகன் (தொகுதி 1:290) ‘சம புரியின் முருக’ என்னும் பாடல். செரு மிடுசேஎய், பகைவர் ஓடு கழற் கம்பலை கண்ட செருவெஞ் சேஎய் (புறநானூறு 14, 120) கொடுபகடு - மதயானை (1:304) ஒரு பிடி நுசுப்பினாளை - சிந்தாமணி 613 ஒரு பிடி நுசுப்பினர் - பெருங்கதை 2.3.216 (தொகுதி 1:350)) மதம் - மகிழ்ச்சி “காதலி சொல்லிற் பிறக்கும் உயர் மதம் (நான்மணிக்கடிகை 5) சமயக்

கொள்கை என்னுமாம் (2:324) 'திருவை ஒரு பங்கர் -திருமாலைக் குறிப்பதாகக் கொள்ளலாம். (இலக்குமியை) மார்பிலே அல்லாமல் ஒரு பங்கில் (ஒரு பக்கத்தில் உடையவர் என்றும் நூல்கள் கூறும். "திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ" - பெரிய திருமொழி: 3-10-1) திருபார்வதியாகவும் கொள்ளலாம். பேழை வார் சடைப் பெருந்திருமகள் தனைப் பொருந்தவைத் தொருபாகம் - சம்பந்தர் 11-107-6 (2:340) சிவபிரான் பிறப்பு இறப்பு இல்லாதவர் - பிறவா யாக்கைப் பெரியோன் - சிலப்பதிகாரம் 5-16 (2:132) முதலிய பல்வேறு இலக்கியச் சான்றுகள் மேற்கோளாக எடுத்தாளப்படும் நெறியை உரை முழுமையும் காணமுடிகிறது. அதோடு தமிழ் இலக்கியங்கள் பலவற்றிலுமிருந்து பரவலாக இலக்கியச் சான்றுகளையும் பல்துறை உண்மைகளையும் எடுத்தாண்டிருப்பது உரையாசிரியரின் அறிவுத் திறத்தையும் பல்கலைப் புலமையையுமே அறியத் தருகிறது. எனவே மேற்கோள் சான்று காட்டும் நெறியைத் தணிகை மணியார் தம் உரையில் முழுமையாகப் பயன்படுத்தும் பாங்கினை அறிய முடிகிறது.

இதனை,

'பாடப் பாட இன்பம் பயக்கும் திருப்புகழ்த் தேனை மூலமும் உரையுமாக வெளியிட்டுப் பக்தருலகுக்குப் பெரும் சேவை செய்திருக்கிறார்கள், பதிப்பாளர்கள். இப்பதிப்புகளின் தனிப்பட்ட விசேஷங்கள் உரையும் ஆராய்ச்சிக் குறிப்புகளும். உரையாசிரியர் வாசக அன்பர்களின் நலம் பொருட்டு மிகுந்த சிரத்தை கொண்டு, தத்துவ விளக்கங்கள், அரிய சரித்திர வரலாறுகளைச் சேகரித்துத் தந்திருக்கிறார். பழந்தமிழ்ச் சங்க நூல்களிலிருந்தும் இலக்கியங்களி லிருந்தும் பிரபந்த நூல்களிலிருந்தும் மேற்கோள் காட்டியும் பொருளைத் தெளிவாக விளக்கிப் பக்திச் சுவையுடன் கூறியும் இந்த நூலை அனைவருக்கும் இன்றியமையாத ஒரு அருள் களஞ்சியமாக்கி இருக்கிறார். எளிதிலே பொருள் விளங்குகிறது. எந்தப் பக்கத்தைத் திருப்பினாலும் நாதபிந்து, கலாநிதியும், தீபமங்கள ஜோதியுமான ஞானகுரு முருகவேளின் பெருமை, அருணகிரியின் அருள்வாக்கு, பதிப்பித்தோரின் தமிழ்த்தொண்டு இவைகளையே காண்கிறோம்" என்று ஆனந்தவிகடன் (30.10.1954) சிறப்பித்துக் கூறுகிறது. இக்கருத்தாக்கங்கள் வழித் திருப்புகழ் உரையில் தணிகைமணியின் மேற்கோள் ஆளுமை, சான்று காட்டும் நெறியினை விளங்கிக் கொள்ள முடியும்.

## பல்துறை அறிவும் செறிவும் நிறைந்த பயன்பாட்டு நெறி

பொதுவாக உரையாசிரியரின் அறிவுத்திறனை அவரின் உரைவழி உணர முடியும். ஆய்வு செய்யும் ஆய்வாளனின் அறிவுக் கூர்மையை அவனது ஆய்வுக் கருத்துகள் வழி அறிய முடியும். அந்த வகையில் உரையாசிரியர் சிறந்த அறிவுக் கருவூலம் என்பது அவரது உரையின் வழித் தெளிவாகப் புலப்படுவது இயல்பு. இச்சிறப்பு கருதியே உரையாசிரியர்களும் தம் உரையில் தம் நுண்மாண் நுழைபுல அறிவுக் கூர்மையையும் பல்துறை அறிவையும் நூல் புலமையையும் இலக்கிய இலக்கணச் செறிவையும் வெளிப்படுத்தித் தம்மை ஒரு சிறந்த நூலாசிரியராக - ஆராய்ச்சி வல்லுநராக நிறுவ முயற்சி செய்வார். அந்த வகையில் தணிகைமணி செங்கல்வராய பிள்ளை தமது பல்துறை அறிவுக் கூர்மையையும் செறிவையும் தம் திருப்புகழ் உரையில் பரவலாக வெளிப்படுத்தியுள்ளார். இதனை உரைநூலில் பயன்படுத்துவதை நெறியாகவே கொண்டு செயல்பட்டிருப்பதைக் காண முடிகிறது. தணிகைமணியின் திருப்புகழ் உரையில் விரவியிருக்கும் பல்துறை அறிவுக் கருவூலத்தைத் திரட்டி ஆராய்ந்து பார்த்தால் ஆச்சரியம் மேலிடுகிறது. காரணம் அவர் தொடாத துறை இல்லை; கூறாத செய்திகள் இல்லை; அவருக்குத் தெரியாத கருத்துகளே இல்லை எனலாம். அதனால் பல்வேறு அறிவுப் புலப்பாட்டுக் கருத்துகளைப் பரவலாக இடம்பெறச் செய்கிறார். இதனைச் சில சான்றுகளைக் காட்டி நிறுவுதல் சிறப்புத் தரும்.

"சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணபத்தியம், கௌமாரம் என்பன ஆறு சமயங்கள்" (1:326 திருப்புகழ்:140) எனும் குறிப்பினைக் கூறி அவை பற்றிய தெளிவினை ஏற்படுத்துகிறார். "நளகூபரன், மணிக்ரீவன் என்னும் குபேரபுத்திரர் (1:332:144) என்னும் கதையை அறியத் தருகிறார். 'சட்சமயம் - உட்சமயம் (6) : வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் புறச்சமயம் (6) : உலகாயதம், புத்தம், சமணம், மீமாம்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம்" (1:362:156) என்னும் சைவ சித்தாந்த சாத்திர உண்மையையும் அறிந்து தெளிவிக்கிறார். 207 ஆம் பாடலுக்கு உரை கூறுமிடத்து, "சலாம் எனும் சொல்லாட்சியால் அருணகிரியார் காலத்தில் மகமதிய ஆட்சி பரந்திருந்தது என்பது புலப்படும்" (2:30) என ஆய்வு முடிவு கூறியிருப்பது அவரது அறிவுச் செறிவைக் காட்டுகிறது. 439ஆம் பாடல் உரையில் யோக பேதவகை எட்டு எனக்குறிப்பிட்டு, "அட்டாங்க யோகம், அவைதாம் நியமம், ஆதனம், பிரணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி (2:600) எனக்குறிப்பிட்டு விளக்கமும் கூறித் தம் நுண்மாண் நுழைபுலத்தை

எடுத்துக் காட்டுகிறார். ஏழிசை - குரல், துத்தம், கைக்கிளை, மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதம் (சரிகமபதநி)" (4:246:திருப்புகழ் 753) என உரை கூறியிருப்பது உரையாசிரியரின் பழுத்துத் தெளிந்த இசைப் புலமைக்குச் சான்றாகிறது. அதைப்போலவே "எண் குணங்களாவன - தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே, பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை - திருக்குறள் (9) உரை" லட்சுமி - தனலக்ஷ்மி, தானியலக்ஷ்மி, தைரியலக்ஷ்மி, வீரலக்ஷ்மி, வித்தியாலக்ஷ்மி, கீர்த்தி லக்ஷ்மி, விஜயலக்ஷ்மி, ராஜ்யலக்ஷ்மி, (4:562:876) "மாசான நா லெண் வகை : குணம் - உயிர் பொருள்களின் பண்பு 32, குணப்பண்பு 27, தொழிற்பண்பு -5, நாலெண்வகை 4+8=12 மாசான நாலெண்வகை - குற்றமுள்ள 32 தத்துவங்கள்" (5:508) எனும் உரைப்பகுதி மூலம் உரையாசிரியரின் கணிதம், அறிவியல் நுட்பத்தை அறியலாம். இவ்வுரைப்பகுதிகள் உரையாசிரியரின் பல்துறை அறிவுக்குச் சான்றாக அமைகின்றன.

மேலும் ஒவ்வோர் ஆலயத்தைப் பற்றியும் பாடல் தொடங்கும் பொழுது அந்த ஆலயம் அமைந்துள்ள இடத்தைப்பற்றிய சிறு குறிப்பினைக் கொடுத்து அத்திருத்தலம் பற்றிய அறிவினையும் தெளிவினையும் படிப்போருக்கு ஊட்டிவிடுகிறார் தணிகைமணியார். சான்றாக ஒன்றைக் கூறலாம். "பூம்பாறை என்ற தலம்பற்றிக் கூறும்பொழுது 'இது கொடைக்கானலுக்கு மேற்கே 8 மைல் தூரத்தில் பழநிக்குத் தெற்கே வராககிரிமேல் இருக்கின்றது. பழநியிலிருந்து வராககிரி 4 மைல். அப்பால் மலைமேல் பத்துமணி நேரப் பயணஞ் சென்றால் பூம்பாறையை அடையலாம்" (2:516) என மிக அரிய அறியத்தக்க குறிப்பினைத் தெரிந்து கூறுகிறார். கதிர்காமம், திரிகோணமலை முதலிய இலங்கைப் பட்டணங்களையும் அறிந்து கூறும் பாங்கினை அறிய முடிகிறது. திரிகோண மலையைப் பற்றிக் கூறும்பொழுது, "இது ஈழ நாட்டில் உள்ளது. இலங்கைத் தீவில் வடகீழ்ப்பாகத்தில் உள்ள கடற்கரைத் தலம். தக்ஷிண கைலாசம் எனவும் பெயர் பெறும். திருஞானசம்பந்தஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது. இதற்கு ஸ்தல புராணமுண்டு" (2:582) என மிகச்சுருக்கமாகக் குறிப்புத் தருகிறார். இதுபோன்று ஒவ்வொரு தலம் பற்றியும் அவர் கூறும் உரைக் குறிப்புகள், இந்தத் தலங்களிலுள்ள ஆலயங்களுக்குச் சென்று தரிசிக்க விரும்புபவர்களுக்குச் சிறந்த வழிகாட்டிக் குறிப்புகளாகவும் அமைந்துள்ளன. எனவே தணிகைமணியாரின் உரைநூல் பல்துறை அறிவுச் செறிவுடன் அமைந்து பக்திக் கடலில் நீந்தி, முருகனருள் பெற நினைக்கும் பக்தர்களுக்கு ஒரு வழிகாட்டி நூலாகவும், கருத்துக்

கருவூலமாகவும், அறியாமை இருளை அகற்றும் கலங்கரை விளக்கமாகவும் அமைந்திருக்கிறது எனலாம். இந்நெறியினால்தான் அண்ணாமலைப் பல்கலைக்கழகப்பேராசிரியர் ஜே.எம். சோமசுந்தரம் பிள்ளை, "உயர்திரு தணிகைமணி அவர்களது செம்பொருள் திருப்புகழுக்கு மிக்க ஒளியைக் கொடுக்கின்றது" (24.11.1953 தொகுதி 4:27) என்கிறார்.

தணிகைமணியாரின் திருப்புகழ் உரையில் இடம்பெறும் மேற்குறித்த சான்றுகளிலிருந்து அவரது பல்துறை அறிவையும் செறிவையும் இனம் காண்பதுடன் அவர் இக்கருத்துகளைப் பயன்படுத்தி உரைவகுப்பதை நெறியாகக் கொண்டிருந்த உண்மையினையும் அறிய முடிகிறது. இத்தகைய கருத்தாக்கங்களை ஆய்வு செய்து பார்க்கும்பொழுது அருணகிரி நாதரின் திருப்புகழுக்குத் தணிகைமணியாரின் உரையினால் மேலும் புகழும் ஒளியும் பெருமையும் கிடைத்துள்ளது எனலாம்.

## முடிவுகள்

'முன்னவனே முன் நின்றால் முடியாத பொருள் உளதோ' எனும் ஆன்றோர் திருவாக்கின் உண்மைநிலையாம் வகையில் பெருமானது திருவருட்சக்தி ஒரு பாலும், திரு அருணை மஹான் ஈசுவர சுவாமிகள் முதல் பல பெரியோர்களின் ஆசி ஒரு பாலும், காஞ்சி காமகோடிபீடாதிபதி ஸ்ரீஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகள் கருணையுடன் அருளின அனுக்கிரக நிதி ஒரு பாலும் எங்களை இப்பணிக்குக் கருவிகளாக்கி ஊக்குவித்து இத்திருப்புகழ் மூலத்தை உரையுடன் உலகுக்களித்தது. திருப்புகழுக்காகவே தமது உடல், பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்தவரும் எங்களை வலிய ஆட்கொண்டு திருப்புகழ்ச் சுவையை எங்களக்கு ஊட்டினவருமான எங்கள் குருநாதர் திருப்புகழ் சுவாமிகள் வள்ளிமலை ஸ்ரீசச்சிதானந்த சுவாமிகள் தோன்றாத் துணைவராய் நின்று அப்போதைக்கப்போது ஏற்பட்ட இடர்களை நீக்கி இப்பணியை முற்றுவித்தனர் (மீனாட்சி கல்யாண சுந்தரம் : நன்றியுரை : தொகுதி 5: 63) என்னும் பகுதியில் திருப்புகழ் உரைப் பணிக்குக் காரணமாக இருந்த பெரியார்கள் அடையாளம் காட்டப்படுகின்றனர்.

13.4.1951 அன்று திரு. அழகனாருடைய தூண்டுதலால் திருப்புகழ் உரை எழுதும்பணி தொடங்கப்பட்டது. 1952 ஜூன் மாதம் 6ஆம்நாள் வெள்ளிக்கிழமை வைகாசி விசாக நட்சத்திரத்தில் இவ்வுரை அச்சிடும்பணி துவங்கப்பட்டு வேகமாக நடைபெற்றது. 16 பாடல்களைப் புதிதாகச் சேர்த்துள்ளார். உரை கூறும் நிலையில்

ஏற்பட்ட சிக்கல்களை வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன் போக்கி உதவியுள்ளார். ஒவ்வொன்றும் ஐந்து பகுதிகள் அடங்கிய ஆறு தொகுதிகளாகத் திருப்புகழ் உரை வெளியிடப்பட்டது.

தணிகைமணியார், சைவ சமய ஒளிநெறியையும் ஒளிநெறிக் கட்டுரையையும் எழுதி வெளியிடத் தொடங்கிய காலத்தில் 1952 முதல் 1957 ஆம் ஆண்டுகளுக்குள்ளாகத் திருப்புகழ் உரையினை மாதம் தோறும் பகுதி பகுதியாக வெளியிட்டுப் பின் தொகுதி தொகுதியாக ஆறு தொகுதிகள் வெளியிட்டுள்ளார். நூலின் இடது புறம் மூல நூல் பாடலையும் வலதுபுறம் அதற்கான பொழிப்புரையையும் இடம்பெறச் செய்துள்ளார். தொடர்புடைய விரிவான விளக்கக் குறிப்புகளையும் அரும்பதவுரைகளையும் அடிக்குறிப்பில் இடம் பெறச் செய்கிறார். பதவுரை, பொழிப்புரை, குறிப்புரை, கருத்துரை எனப் பல்வேறு உரைகளையும் தலைப்பின்றி உரையின் ஊடாகவே கலந்து கொடுக்கின்றார். பல்துறை அறிவுக் கருவூலமாகத் தணிகைமணியின் உரை இயல்பு அமைகிறது. நீண்ட தொடர் அமைப்பு இருந்தாலும் கால்புள்ளி, அரைப்புள்ளி, உம்மை விகுதி முதலியவற்றைப் பயன்படுத்திச் சிறுசிறு தொடர்கள் போன்ற உணர்வை ஏற்படுத்துகிறார். மிகத் தெளிவாகவும் ஐயமும் குழப்பமுமின்றிப் பொருள் அறியத்தரும் புலப்பாட்டு நெறி உடையவராகத் தணிகைமணியார் திகழ்ந்தார். படிப்பவருக்கு எளிதில் பொருள் விளங்க வேண்டும் எனும் நோக்கில் பொருள் தெளிவு ஏற்படுத்துவது தணிகைமணியின் தனித்தன்மையைக் காட்டுகிறது. முருகப் பெருமான் சிறப்புகளை உரையில் பல நிலைகளில் வெளிப்படுத்தும் நெறியைப் பின்பற்றினார் தணிகைமணியார். உரையின் இடையில் பொருள் செறிவையும் தெளிவையும் ஏற்படுத்தும் வகையில் அடைப்புக்குறி எடுத்தாண்டு அதனுள் தொடர்புடைய சொற்றொடர்களை அமைத்து விளக்குகிறார். விரித்துக் கூறவேண்டிய பொருளை உரையின் உடற்பகுதியில் குறிப்பிடாமல் அந்தந்தப் பக்கத்தின் அடிப்பகுதியில் வெளியிடும் நெறியைக் காண முடிகிறது. தணிகைமணியாரின் அடிக்குறிப்புப் பகுதி மட்டும் அவரை ஓர் ஆய்வாளராக அடையாளம் காட்டுகிறது. நல்ல தொடர் அமைப்பு, வடமொழி கலந்த சொல்லாக்கம், கருத்தாக்கம் எனத் தரமான மொழி நடையைப் பின்பற்றினார். சிறந்த சொல்லாட்சி அவரின் ஈடுபாட்டையும் அறிவுத் திறத்தையும் எடுத்துக் காட்டுகிறது. வடமொழிச் சொற்கள், இலக்கியச் சொற்கள், பேச்சு வழக்குச் சொற்கள் எனப் பல வகைச் சொற்களைக் கையாள்கிறார்.

உவமைகளை எடுத்தாண்டும் இலக்கணக் குறிப்புகளைக் கூறியும் உரை கூறும் நெறியைக் காண முடிகிறது. பல இலக்கியங்கள்,

புராணங்கள், நூல்கள், அறிஞர்களின் கருத்துகள் அடிக்குறிப்பாக மேற்கோள் சான்று காட்டி விளக்கப்படுகின்றன. பல்வேறு துறை தொடர்பான செய்திகளையும் பொது அறிவுக் கூறுகளையும் உரையில் பரவலாக இடம்பெறச் செய்து பயனுள்ள நூலாக அமையும் நெறியைப் பின்பற்றுகிறார். இத்தகைய பல்வேறு கருத்தாக்கங்கள் வழியும், முடிவுகள் வழியும், சான்றுகள் வழியும் தணிகைமணியின் உரை ஓர் அறிவுக் கருவூலம் என்பதும், தமிழ்மொழிக்கும் சைவ, கௌமார சமயத்திற்கும் கிடைத்த வரப்பிரசாதம் என்பதும், அவர் ஒரு நுண்மாண் நுழைபுலம் மிக்க அறிஞர் என்பதும் தமக்கெனத் தனித்தன்மையுடன் கூடிய உரைநெறியை உருவாக்கி அதனைப் பயன்படுத்திப் படிப்பவரைப் பயனடையச் செய்தார் என்பதும் அறியலாகின்றன.

## துணை நூல்கள்


1. அரவிந்தன் மு.வை. 1977 - உரையாசிரியர்கள், மணிவாசகர் நூலகம், சென்னை
2. ஆசிரியர் குழு 1980 - வாழ்வியல் களஞ்சியம், தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
3. இராமசேஷன் இராம கிருஷ்ணன். ரா. 1998 - அருணகிரிநாதர் அடிச்சுவட்டில் திருப்புகழ்த் தலபுராணம், கங்கை. புத்தக நிலையம், சென்னை.
4. கழகப் புலவர் குழு 1974 - திருப்புகழ் 1311 பாடல்கள், கழகவெளியீடு, சென்னை
5. கிருபானந்தவாரியார் 1976 - வாரியார் வழங்கும் சிந்தனைச். செல்வம், வானதிபதிப்பகம், சென்னை.
6. கிருபானந்தவாரியார் 1977 - திருப்புகழ் விரிவுரை - திருப்பரங்குன்றம், திருச்செந்தூர். வானதி பதிப்பகம், சென்னை.
7. கிருபானந்தவாரியார் 1977 - திருப்புகழ் - ஒன்பதாம் தொகுதி, திருப்புகழமிர்தம் காரியாலயம் சென்னை.
8. கிருபானந்தவாரியர் 1979 - திருப்புகழ் விரிவுரை - பழநி, வானதி பதிப்பகம், சென்னை.
9. சச்சிதானந்த சுவாமிகள் 1997 - திருப்புகழ் பாராயணத் தவநெறித் திருமுறை, ஸ்ரீ வள்ளி மலை சுவாமி சச்சிதானந்தர் திருப்புகழ் சபை, சென்னை

10. செங்கல்வராயபிள்ளை
1952 - முருகவேள் பன்னிருதிருமுறை ஸ்ரீமதி மீனாட்சி கல்யாண சுந்தரம், சென்னை, தொகுதி-1.

11. செங்கல்வராயபிள்ளை
1952 - தொகுதி - 2

12 " - தொகுதி - 3

13. " - தொகுதி - 4

14. செங்கல்வராயபிள்ளை வ.சு.
1952 - தொகுதி - 5

15. செங்கல்வராயபிள்ளை வ.சு. - தொகுதி - 6

16. செங்கல்வராயபிள்ளை வ.சு.
1958 - சம்பந்தர் தேவார ஒளிநெறிக் கட்டுரை, கழக வெளியீடு, சென்னை

17. " 1959 - அப்பர் தேவார ஒளிநெறிக் கட்டுரை

18. " 1962 - சுந்தரர் தேவார ஒளிநெறிக் கட்டுரை

19. " 1970 - மாணிக்கவாசகர் - திருக்கோவையார் ஒளிநெறிக் கட்டுரை

20. " 1973 - திருஇசைப்பா ஒளிநெறிக் கட்டுரை, கழகம், சென்னை.

21. துரை அரங்கசாமி மொ.அ.
1956 - பண்டைத் தமிழ் நெறி, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை

22. முத்துக்குமரன் பி.எல். (பதி)
2000 - முருகன் அருட்செல்வம், முல்லை பதிப்பகம், சென்னை

23. மெய்யப்பன். ச. (பதி) 1996 - திருப்புகழ், மணிவாசகர் பதிப்பகம், சென்னை

24. பாலசுப்பிரமணியன். சி.
1974 - தமிழ் இலக்கிய வரலாறு, நறுமலர் பதிப்பகம், சென்னை

25. ஜகந்நாதன், கி.வா. 1958 - படிக்கும் திருப்புகழ், அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், சென்னை.

******

# உரைத்திறன்

**த. பூமிநாகநாதன்**

பெருமைக்குரிய பழைய உரைகள் ஆராய்ச்சி உலகத்தின் திறவுகோல். இலக்கியம் இலக்கணம் கற்க முயன்று தளர்நடை போடும் மாணாக்கர்களின் கைகளைப் பற்றி நடத்திச் செல்லும் தந்தை. அறிவு செழிக்குமாறு ஊட்டி வளர்க்கும் தாய். காலத்தையும் இடத்தையும் கடந்து வந்து விரும்பிய போதெல்லாம் அறிவு புகட்டும் பேராசான் என உரையின் சிறப்பை வருணிப்பார் பேராசிரியர் அரவிந்தன். (உரையாசிரியர்கள், மு.வை. அரவிந்தன், ப20)

அருந்தமிழ் நூல்களுக்கு உரை கண்டவர்களின் வழித்தோன்றலாக வந்தவர்தான் தணிகைமணி. இவர்தான் திருப்புகழுக்கு உரைகண்டவர்; முருகவேளுக்குப் பன்னிரு திருமுறை கண்டவர். இத்தனைச் சிறப்புடைய இச் செங்கல்வராய பிள்ளையின் உரையின் தன்மையை ஆய்ந்து ஓர்தலே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

1முதல் 7 திருமுறைகள் : முதல் ஏழு திருமுறைகளாம் 'தேவாரம்' போலத் திருப்புகழும் படைவீடு ஒன்றுக்கு ஒரு திருமுறை என ஆறு திருமுறைகள், பிற திருப்பதிகளின் மீது பாடப்பெற்ற பாடல்களை ஒருங்கிணைத்து ஏழாம் திருமுறை என ஆக்கியுள்ளார்.

8 ஆம் திருமுறை : திருவாசகம், திருக்கோவையார் சைவத் திருமுறையில் எட்டாந் திருமுறையாக அமைந்தாற்போலத் திருவாசகத்துக்கு இணையாகக் கந்தரலங்காரமும், அகப்பொருள் கொண்ட திருக்கோவையாருக்கு ஒப்ப அகப்பொருள் அமைந்த கந்தரந்தாதியும் சேர்த்து முருகவேள் எட்டாந் திருமுறையாக அமைந்துள்ளன.

9 ஆம் திருமுறை : ஒன்பதாம் திருமுறையாக விளங்கும் 'திருவிசைப்பா'விற்கு ஒப்ப இசைப்பாடல்களாக அமைந்த திருவகுப்பு ஒன்பதாம் திருமுறையாக விளங்குகிறது.

10 ஆம் திருமுறை : மந்திர நூலாய் விளங்கும் திருமந்திரம் சைவத் திருமுறையிற் பத்தாம் திருமுறையாக விளங்குவது போல, மந்திர நூலாக அமைந்த 'சுந்தரநுபூதி' முருகவேள் திருமுறையில் பத்தாந் திருமுறையாக அமைந்துள்ளது.

11 ஆம் திருமுறை : அடியார் பலரின் பாடற்றொகுதியான பதினோராந் திருமுறைக்கு ஒப்ப முருகவேளுக்குரிய பழைய

அடியார்கள் பலர் பாடினவற்றுள், திரட்டப்பட்ட பகுதிகள் முருகப்பெருமானது பதினோராந் திருமுறையாக இடம் பெற்றுள்ளது.

12 ஆம் திருமுறை : திருத்தொண்டர் புராணமாம் பெரிய புராணத்துக்கு ஒப்ப முருகவேள் தொண்டர்களின் புராணம் 'சேய்த் தொண்டர் புராணம்' என்னும் அருமைப் பெயருடன் பன்னிரண்டாம் திருமுறையாக விளங்குகிறது. இவ்வாறாக முருகவேள் பன்னிரு திருமுறைக்கு ஆதாரமாயிற்றுத் திருப்புகழ். இனி, இதற்கு உரைகண்ட வரலாறு பற்றி உரையாசிரியர் வழி காண்போம்.

"உரைநடைக்கு முகவுரை' என்ற பகுதியில், "முருகவேள் நூல்கள் திருமுறைவடிவில் வெளி வரலாம் எனக் குருகுல ஆசிரியர் திரு. இளவழகனார் முதலில் விரும்பினார்: நன்று எனத் தோன்றிற்று.

பின்னர்த், திருப்புகழ்ப் பாடல்களுக்கு நீங்களே பொழிப்புரைப் பொருளுரை எழுதுதல் நன்று என்றனர். பொருள் எழுதுங்கள் என்றதும் என் நெஞ்சம் நடுக்குற்றது. . . பின்பு இறைவரே ஒரு துணிவைத் தந்தனர். . . . முருகன் திருவருள் துணை நிற்குமாயின் எதுதான் முடியாது எனும் துணிவும் பிறந்தது. உரை எழுதத் துணிந்தேன்." (உரைநடைக்கு முகவுரை - முருகவேள் பன்னிரு திருமுறை தொகுதி -1)

அத்தகைய சிறப்புமிகு உரையின் சிறப்புகள் குறித்தும் திறம் குறித்தும் விரித்துக் காண்போம். இவ்வுரை ஆய்வுக்குத் தரவுநூலாக அமைவன முருகவேள் பன்னிரு திருமுறை தொகுதி-1,2,3 மற்றும் 4 ஆகும். இத் தொகுதிகளின் சிறப்பு யாதெனின் முருகவேள் பன்னிரு திருமுறை எனச் சுமார் 4300 பக்கங்களில் ஆறு தொகுதிகளாக இதுவரை இருந்தவற்றை இம்மூன்றாம் பதிப்பில் முதல் இரு தொகுதிகளை ஒன்றாகச் சேர்த்து முருகவேள் பன்னிரு திருமுறை பாகம் ஒன்று என்றும்; மூன்று நான்கு தொகுதிகளை ஒன்று சேர்த்துப் பாகம் இரண்டு என்றும்; ஐந்தாம் தொகுதியைப் பாகம் மூன்று என்றும்; ஆறாம் தொகுதியைப் பாகம் நான்கு என்றும் பதிப்பு நோக்கில் முறைப்படுத்தப்பட்டதாகும்.

சைவ சமயத் திருமுறை, சாத்திரங்கள், சிற்றிலக்கியங்கள், சங்க நூல்கள், தொல்காப்பியம் எனப் பன்னூல் புலமை பெற்றவர் பிள்ளை. ஆங்கிலப் பட்டறிவும் உண்டு. எதையும் கூர்மையாக நோக்கும் தன்மை உடையவர். உரை நவில்வதில் பண்டை உரையாசிரியர்களின் உத்தியும் இவர்காலத்து வாழ்ந்த பேராளர்களின் நடைத் தாக்கமும் அமையப் பெற்ற கலவையாக அமைகிறது இவரது நடை. இவர் உரைக் கோட்பாட்டைக் கீழ்க்காணுமாறு வகைமை செய்யலாம்.

1. திருமுறைக்கேற்ப உரை வரைதல்
2. அந்வயம், பொழிப்புரை, சுருக்கவுரை குறிப்புரை என நான்கு வகையான உரை கூறும் உத்திகளைப் பயன் படுத்துதல்

   இதில் அந்வயம் என்பது மூலபாடத்தின் பாடலில் அமைந்த சொற்களைக் கொண்டு கூட்டிப்பொருள் காணுதல். சிற்றிலக்கியங்களுக்கு உரையாசிரியர்கள் கையாண்ட உத்தியாகும்.
3. பொழிப்புரை பெரும்பாலும் அறநூல் உரையாசிரியர்கள் கையாளும் உத்தி. அதனைப் பிள்ளையவர்களும் பயன்படுத்தியுள்ளதைக் காணலாம்.
4. வாக்கிய நிலையிலும் தொடர்நிலையிலும் அமையும் இடமாற்றங்கள் ஒழுங்கு படுத்தப் பெற்றுப் பாடல் தொடரைப் பொருள் கொள்ள வசதியாக அமைத்துக் கொண்டு பதவுரை காண்பது இவரது பழக்கம்.
5. நூலிற் காணும் சொற்களையும் அதனோடு தொடர்புடைய பிறமொழிச் சொற்களையும் அறிதல்.
6. அச் சொற்களின் மூலவடிவம் பற்றிய சிந்தனை, அது காலங்காலமாகப் பொருள்நிலையில் - சொல் நிலையில் பெற்றுள்ள மாற்றம், அச்சொல் இலக்கிய, இலக்கண நூல்களில் பயின்று வந்துள்ள திறம் கண்டு கூறுதல்
7. உரை விளக்கத்திற்குப் பிற உரை காட்டுதல்
8. பிறர் உரையைப் பதவுரையாக அமைத்தல்
9. பிறர் உரை நூல் பார்க்க எனச் சுட்டுதல்
10. இலக்கணக் குறிப்பு உணர்த்துதல்
11. மேற்கோள் விளக்கம் தருதல்
12. பொருள் கோள் முறை குறித்தல்
13. பின்முன் நோக்கி உரை வகுத்தல்
14. மெய்ப்பாடு சுட்டுதல்
15. சமயச் செய்திகளைத் தொகுத்தல்
16. வரலாற்றுக் குறிப்புகளை ஏற்ற இடத்தில் பதிவுசெய்தல்
17. இசை, நாடக நூல் கருத்துரைத்தல்
18. வடநூலார் வழக்குத்தரல்
19. உலக வழக்கு முதலானவற்றை எடுத்துரைத்தல்
20. நாடு, நகர் முதலான இடவிளக்கம் தருதல்
21. பாட பேதம் சுட்டுதல்
22. தமிழ்ச் சொல் அல்லது தமிழ்ப் படுத்தப்பட்ட சொற்களுக்குப் பொருள் கூறுதல்
23. எளிய சொற்களுக்குப் பொருள் வரைதல்

24. அரிய சொற்களுக்குப் பொருள் தருதல்
25. ஒரு சொல்லின் பொருளை அது வரும் இடத்திலெல்லாம் எடுத்துக் கூறல்
26. கடினமான சந்திகளை விளக்கிப் பிரித்து எழுதி உரைநடையை எளிமையாக்குதல்
27. எல்லோருக்கும் விளங்கவேண்டும் என்பதற்காகப் பேச்சு மொழியைப் பயன்படுத்தாமல் திருத்தமான செம்மொழியைப் பயன்படுத்துதல்
28. நிறுத்தக் குறிகளைப் பயன்படுத்திப் பொருள் உணரச் செய்தல்
29. பெயரெச்சம், வினையெச்சம் போன்றவற்றை அடுக்கிக் கொண்டே போய் மிக நீளமான வாக்கியங்களை எழுதாமல் சிறு சிறு வாக்கியங்களை எழுதிப் புரிய வைத்தல்
30. பொருள் இயைபு கருதிச் சுருக்கமாக எழுதுதல்
31. உடுக்குறி, நட்சத்திரக்குறி, இரு நட்சத்திரக்குறி, வட்டக்குறி, வளையக்குறி, புள்ளிக்குறி எனப் பலவகையான குறியீடுகளைப் பயன்படுத்தி எண்ணிய சொற்களுக்குப் பொருள் அல்லது உரை தருதல்
32. எடுத்துக்காட்டுப் பாடல்களுக்கு உரிய நூல் விவரம் கூறுதல்
33. எடுத்துக் காட்டுப்பாடல் திருப்புகழாக இருந்தால் தவறாது திருப்புகழ் எண்ணையோ இன்ன திருப்புகழ் பகுதி என்பதையோ சுட்டுதல்
34. மூல பாடத்திற்கு எதிராகவே உரை அமைத்துக் காட்டுதல்
35. பாடல் ஒவ்வொன்றுக்கும் தலைப்புக் கொடுத்தல், இத் தலைப்பு பாடல் வரிகளிலிருந்தே எடுத்தல், இறுதியில் பாடலின் மொத்தப் பொருளும் விளங்கும்படி முடிப்பாக ஒரு தொடர் அமைத்தல் (பின் இணைப்புக் காண்க)
36. நூல்தொகுதி ஒவ்வொன்றுக்கும் பாடற்முதற் குறிப்பு அகராதி தருதல்
37. நூற்பெயர் ஒவ்வொன்றுக்கும் எடுத்துக்காட்டாகக் கந்தரலங்காரம், கந்தரநுபூதி எனப்படும் பகுதிகளுக்கு முன்னுரை சுருக்கமாக வரைதல்
38. அவற்றிற்கு (நூலுக்கு) இறுதியில் ஆராய்ச்சி அல்லது விஷய ஆராய்ச்சி என்ற அமைப்பில் அந்நூல் தொடர்பான அனைத்துத் தகவல்களையும் தருதல்
39. சொல்லகராதி அமைத்துக் காட்டுதல்
40. எட்டாந்திருமுறைக்கு (கந்தரந்தாதி) அரும்பத விளக்கம் அமைத்துக் காட்டுதல்

41. ஒன்பதாம் திருமுறைக்கு விஷய சிற்றாராய்ச்சி அமைத்ததோடு சித்து வகுப்புகளுக்கு அநுபந்தம் அமைத்துச் செய்திகளைத் தொகுத்துக் கொடுத்தல்
42. பத்தாம் திருமுறை (கந்தரநுபூதி)க்குக் கந்தரநுபூதி ஆராய்ச்சி, விஷய ஆராய்ச்சி என்னும் தலைப்புகளில் விவரங்களை அளித்தல்
43. பதினோராம் திருமுறைக்குப் பொருளடக்கம் மட்டும் அமைத்துக் காட்டுதல்
44. பன்னிரண்டாம் திருமுறைக்கு முன்னுரை மட்டும் அமைத்தல்

படைவீடு ஒன்றுக்கு ஒரு திருமுறை என ஆறுபடை வீடுகளுக்கு ஆறு திருமுறைகள் அமைய, படைவீடு சாராத பொதுப் பாடல்கள் அனைத்தும் தொகுக்கப்பட்டு ஏழாம் திருமுறையாகப் பெயர் பெற்றது. இந்த ஏழாந்திருமுறை தனித் தொகுதியாக - நூலாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூலிற்கான அநுபந்தம் இம் மூன்றாம் தொகுதியில் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

பிள்ளையவர்கள் அருணகிரியார் இடத்துப் பேரன்பு கொண்டவர். ஆகவேதான் இந்த அநுபந்தத்தின் முன்னுரையில் அருணகிரிநாதர் பற்றிக் குறிப்பிடும் போது, ஸ்ரீஅருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளிய திருப்புகழ் என்றும் நூலின் பெருமைக்கு முக்கியக் காரணம் அந்நூலின் நீடு நிலைப்போக்கு என்றும் கூறிவிட்டுத் 'தம்மை அடிமைப்படுத்தி ஆண்டருளி மெய்ஞ்ஞானம் பாலித்த திருக்கைவேற் பெருமானைக் குறிக்கோள் தெய்வமாகக் கொண்டு, கணபதியின் பெருமையைக் கூறி அப் பெருமானுக்கு இளையோனே என்றும், சிவபிரானது சிறப்பினைக் கூறி அப் பெரியோனுக்குப் புதல்வனே, குருமூர்த்தியே என்றும், திருமாலின் லீலைகளைக் கூறி அவ்வண்ணலுக்கு உகந்த மருகோனே என்றும் அருணகிரிநாதர் சமயக் காழ்ப்பின்றிப் பேசுவதைச் சுட்டிக்காட்டி அருணகிரியாரின் பெருமையை உரையாசிரியர் விளக்குவர். இதனை அடிப்படையாகக் கொண்ட இப்பகுதியில் திருப்புகழாதிய நூல்களில் அருணகிரியார் கூறியுள்ள விஷயங்களைத் திருப்புகழும் கணபதியும், திருப்புகழும் சிவனும் திருப்புகழும் பார்வதி தேவியும், திருப்புகழும் திருமாலும் முதலிய தலைப்புகளின் கீழ் விளக்கி எழுத விரும்புகின்றேன்' என உரையாசிரியர் கூறுவது ஈண்டுக் கருதத்தக்கது. அவ்வகையில் அவர் வழி நின்று இவ் வநுபந்தப் பகுதியிற் காணும் செய்திகள் குறித்துச் சுருக்கமாகவே காண்போம்.

**திருப்புகழும் கணபதியும்** என்ற பகுதியில் அருணகிரியார் கணபதியை எவ்வாறெல்லாம் பெயரிட்டு அழைக்கிறார் என்பதைப்

பிள்ளையவர்கள், 'அம்புலி மௌலியன், ஐந்துகர பண்டிதன், குஞ்சர மாமுக விக்கன பிரபு, குட்டிக் கரிமுகன், ஞான தொப்பை, தொப்பையப்பன், மகோதரன், மத்தள வயிரன் எனப் பட்டியல் இட்டுக் காட்டுகிறார்.

மேலும் கணபதிக்கு உகந்த படையற் பொருளாக அருணகிரியார் பல்வேறு இடங்களில் கூறியவற்றைத் தொகுத்துள்ளார் பிள்ளையவர்கள். அவர் கூறும் பொருள்கள் ஆவன: அப்ப வகைகள், அமுது, அவரை, அவல், இளநீர், எள், கடலை, கரும்பு, கற்கண்டு, கிழங்குகள், (வெண்) சர்க்கரை, சுகியன், சோறு, தினைமா, துவரை தேங்காய், தேன், நெய், பச்சரிசி, பணியாரம், பயறு, பருப்பு, வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம், வெள்ளரிப்பழம் முதலிய பழவகைகள், பாகு, பால், பிட்டு, பொரி மாவு வகைகள், முறுக்கு, லட்டு, வடை என்பன ஆகும். இப்பகுதியில் ஒவ்வொரு கடவுளுக்கும் உரையாசிரியர் அமைத்துத் தந்திருக்கும் தோத்திரப் பாடல் குறிப்பிடத் தகுந்த ஒன்றாகும்.

கணபதியை இடைவிடாது சிந்திப்பவர் சிந்தையில் முருகவேள் உகந்து வாழ்வர் என்பது செங்கல்வராயபிள்ளையின் துணிபு.

திருவானைக்காத் திருப்புகழ் 'அஞ்சன வேல்விழி (495) என்னும் பாடலினின்றும் எடுத்துத் துதியாக உரையாசிரியர் தரும் பகுதி வருமாறு.

**குஞ்சர மாமுக விக்கி னப்ரபு**
**அங்குச பாச கரப்ர சித்த! ஓர்**
**கொம்ப! மகோதர! முக்கண் விக்ரம கணராஜ!**
**கும்பிடு வார்வினை பற்றுப்பவ!**
**எங்கள் விநாயக! நக்கர் பெற்றருள்**
**குன்றைய ரூபக! கற்ப கப்பிளை! அருள் தாராய்!"**

என்பது அப்பாடல்.

**திருப்புகழும் சிவனும்** என்ற பகுதியில் சிவனது உருவமும் நிறமும் பற்றி அருணகிரியார் சொன்னவற்றில் எரியின்மேனி, செம்பொன்மேனி, பாதி சிவப்பு, பாதி பச்சை என்ற பெயர்களைச் சுட்டிக்காட்டி அவற்றின் முக்கியத்துவத்தையும் குறிப்பிட்டுள்ளார்.

சிவபிரானுக்குரிய மலர்கள் பற்றித் திருப்புகழில் அருணகிரியார் ஆங்காங்குச் சுட்டியவற்றை ஒன்று திரட்டிப் பட்டியல் இடுகிறார். அறுகு, ஆத்தி, ஊமத்தம் வெள் எருக்கு, கரந்தை, கழுநீர், குரா, குருந்து, கொன்றை, சூரம், செம்பை, தாமரை,

தும்பை, துழாய், நொச்சி, பாதிரி, பிச்சி, பூளை, மாதுளம்பூ, வன்னி, வில்வம் என்பனவாகும்.

சிவபிரானின் திருநாமங்களுள் அருமை வாய்ந்தனவற்றை உரையாசிரியர் ஈண்டுத் தொகுத்துத் தந்துள்ளார். அதுவே ஒரு தோத்திரப் பாமாலை போல் அமைந்துள்ளதைக் காணலாம்.

ஆதிரையான், ஓம்நமச்சிவாயசாமி, கயிலைமலைக்கிழவன், கரதல கபாலி, கனக கார்முகாசாரி, காமாரி (காமனுக்குப் பகைவன்) காலப்ரபு, கீதநாயகர், குருவிலாதவர், கொண்டல்பாகன், சண்டைத் தம்பிரான், சதாசிவ கோத்திரன், சாதியிலார், நாகக்காப்பன், பரதகுரு, பினாகாயுதர், மழுவுழை கபால டமருகத்ரிசூல மணிகர விநோதர், முக்கட் சித்தர், விபூதி பூஷணர் என்பன சிவபிரான் மீது அமைந்த பெயர்கள் ஆகும்.

சிவபிரானுக்கு உரிய துதிகள் வேறு எந்தநூலிலுங் காணுதற் கரிய அழகிய நிலையில் திருப்புகழில் காணக்கிடக்கிறது என்பது பிள்ளைவர்கள் கூற்று (எடு. திருப்புகழ் 585).

**திருப்புகழும் பார்வதியும்** என்ற பகுதியில் தேவியின் சிறப்புறு பெயர்களை எல்லாம் தொகுத்து 'ஒரு நாமாவளி' போல உரையாசிரியர் காட்டியிருப்பது கண்டு இன்புறத்தக்கது.

அகில ஜகஅண்ட நாயகி, அஞ்சுமுகநீலி, அம்பண கரதலி, ஆதியந்தமுமான சங்கரி, ஆறு சமயத்தி, துநுதரி, நவசித்தியருள்சத்தி, நாக பூஷணத்தி, ராஜத லக்ஷண லக்ஷ்மி, மழுவுடை கரத்தி, முயலகபதத்தி, மூவர்க்கு முன்னாள், வேத குழலாள் எனப் பலபட அருணகிரி பாராட்டிப் பேசியவற்றை நமக்குத் தொகுத்துத் தந்துள்ளார். இப்பெயர்களோடு 'போற்றி' என்ற சொல்லை மட்டும் நாம் இணைத்துக் கொண்டால் அது சக்தி நாமாவளி ஆகிவிடும்.

இப்பகுதி முகவுரையில் "திருப்புகழிலும் பிற நூல்களிலும் அருணகிரியார் பார்வதி தேவிக்கு மிகச் சிறந்த ஸ்தானத்தைக் கொடுத்துள்ளார். தேவியின் பெருமையைத் தமிழ் மொழியில் முற்றுங் கற்று மகிழ விரும்புவோர் அருணகிரியார் தேவியைத் துதித்துக் கூறியுள்ள பாசுர அடிகளைப் படிக்க வேண்டும்' எனக்கூறுகிறார் (எடு. திருப்புகழ் 1133).

துதியில் அமைந்துள்ள சொற்கோவையையும் சந்தத்தையும் போற்றிப் புகழ்வதுடன் "இது அன்றோ வாக்கு என்னே முருகன் திருவருட் பிரசாதம் இருந்தவாறு" என வியந்து போற்றுகிறார்.

**திருப்புகழும் திருமாலும்** என்ற பகுதியில் முருகவேளைத் திருமாலின் மருகன் என நினைப்பதே அருணகிரியார்க்கு ஏன்

ஆனந்தம் எனச் சுட்டிக்காட்டிவிட்டு, திருமால் முல்லை நிலத்துக் கடவுள்; காத்தற்றொழிலைப் புரியுங் கடவுள். சர்வான்மாக்களுக்கும் கலக்கமற்றுச் சுகமுறத்தாம் அனந்தல் - துயில் கொள்பவர்; திருமங்கையின் கணவர்; தெய்வீகப் பொன் ஆழி யாகிய சக்கரத்தையும், புனித சங்கத்தையும் திருக்கரத்திற் கொண்டவர். சங்கு, சக்கரம், கதை, வாள், வில், என்னும்ஐந்து ஆயுதங்களைக் கொண்டவராதலின் 'ஐயாயுத பாணி', பஞ்சாயுதர் எனப்பேர் பெற்றவர். பாற்கடலில் நாக மெத்தையில் துயில்பவர்; ஆலிலையிற் 'பெருங் குறட்டை விட்டு' உறங்குபவர்; பரவும் அடியார்களது வினைகெட அருள்பவர்; தேச மெல்லாம் போற்றும் பெருமை வாய்ந்தவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் ஆனவர்; கௌஸ்துப மணிமார்பர்; துழாய்மார்பர்; மார்பகத்தில் லக்ஷ்மி தேவி வீற்றிருக்கப் பெற்றவர்; மாறிலாத சிவபக்தியுடையவர்; தமிழ்ச்சுவை பருகத் தமிழ்ப் பயில்வோர்கள் பின் திரிபவர்; அவர்கள் சொன்ன வண்ணம் செய்பவர்; பிரமனை ஈன்றவர்; முருகப் பிரானிடத்தில் நேசம் மாறாதவர்; சிவபிரானது பிரம கபாலத்தில் தமது ரத்தத்தைப் பலிக்கெனப் பெய்தவர்" எனத் திருமாலின் பண்பு நலன்களை உரையாசிரியர் நமக்குத் தொகுத்துத் தருவதன் வாயிலாகத் திருப்புகழில் திருமால் பெற்றிருக்கும் சிறப்பான இடத்தை உணரலாம்.

கஜேந்திர மோக்ஷம், இரணியன் வதை, மாபலியைச் சிறை வைத்தது, ராவணனைச் சங்கரித்தது ஆகிய நான்கு லீலைகள் ஒன்றாய் இடம்பெற்ற சீர்பாத வகுப்புப் பாடலை உரையாசிரியர் திருமால் வழிபாட்டிற்கேற்ற துதிப்பாடலாக இங்கே எடுத்துக் காட்டியுள்ளது காணத்தக்கது. இப்பாடல் படிப்பதற்கும், உணர்வதற்கும், பக்தியைத் தூண்டுவதற்கும், இறைநேயம் பெருகுவதற்கும் உரிய வகையில் அதன் சந்தமும் சொற்கட்டும் அமைந்துள்ளதைப் படிப்போர் உணரலாம்.

**திருப்புகழும் முருகரும்** என்ற பகுதியில் அமையப்பெற்ற முன்னுரையில் தம்மை ஆட்கொண்டருளிய மூர்த்தி முருகவேளே யாதலின் அவரது திருவடித் தியானம் நழுவாதிருக்க வேண்டுமென்பதே முதல் முதல் அருணகிரி விரும்பி வேண்டுவது எனப் பிள்ளையவர்கள் நமக்குச் சுட்டிக் காட்டுகிறார்.

இப்பகுதியில் 'கோலம்' என்ற பொருண்மையில் முருகவேளின் குழந்தைக் கோலம், திருவுரு அழகுக் கோலம், முருகன் அழகுக் கோலம், ஆறு திருமுகங்களிலும் விளங்கும் திருநீற்றுக் கோலம், ருத்ராக்ஷ அணிகலக்கோலம், வேற்கரக்கோலம், வள்ளி திருவடிவிளங்கும் திருமுடிக் கோலம், கொலு வீற்றிருக்கும் கோலம், தேவர் யோகிகள் சூழக் கொலு வீற்றிருக்கும் கோலம், நடனகோலம்,

அடியார்க்கு அருள் செய வருகைக் கோலம், மணவாள கோலம், த்யானத்துக்கு உரிய கோலம், கடை நாளில் தரிசனந்தர வரும்படி வேண்டிய கோலம் என முருகவேளின் பல்வேறு கோலங்களைத் தொகுத்துத் தருவதன் மூலம் அவன் அருளிச் செயல்கள் பலவற்றைத் திருப்புகழ் வழி உணரவைக்கிறார் உரையாசிரியர்.

முருகவேளின் திருவடிப் பெருமையை அருணகிரியார் திருப்புகழ் பாடிப் பரவியதைப் பிள்ளையவர்கள் உரைநடை வடிவில் ஈண்டு வடித்துத் தருவது கவிதை நயத்துடன் விளங்குவதைக் காணலாம். முருகன் திருவடி எல்லாப் பொருள்களிலும் ஒன்று பட்டு நிற்கும்; வேறாகவும் நிற்கும்; சகல சக்திகளும் அஷ்ட சித்திகளும் எளிதாம்படி பெருவெட்ட வெளியில் விளங்கி நிற்கும். சிவபிரானும் போற்றித் தியானித்துத் தொழ நிற்கும். சிதாகாச வெட்டவெளியில் ஞான நிருத்தம் புரிந்து நிற்கும். சமய கோடிகளும், அரி, அயன் முதலிய தேவர் கூட்டமும் அறிய அறியாத தன்மையில் நிற்கும். நமது ஊராகவும், நம்மைப் பெற்ற தாயாகவும் நமது சுற்றத்தாராகவும் அருகிருந்து துணை புரிந்து நிற்கும் என முருகப்பெருமானின் அருள்பாலிக்கும் அழகுத் திருவடிகளை ஆடம்பரச் சொல்லலங்கார வார்த்தைகளைக் கொண்டு சித்திரிக்காமல் இயல்பான முறையில் எளிய தமிழில் கூறியுள்ள பாங்கு பிள்ளையவர்களுக்கேயுரியது என்றால் மிகையாகாது.

இவ் வநுபந்தப் பகுதியில் **திருப்புகழும் தேவசேனையும்** என்ற பொருண்மையில் தேவசேனை பற்றி உரையாசிரியர் தரும் தகவல்கள் அரியனவாகும். தேவசேனையை முத்தி தரும் மாது என்றும், (திருமுட்டத்துத் திருப்புகழ் 764) தேவசேனையின் முதற்பெயர் அமுதவல்லி என்றும் தேவர்கள் வாழ்வதற்கு முருகவேள் மூலகாரணம் என்றும் தேவசேனையம்மையார் துணைக் காரணம் என்றும் தேவசேனையைக் குறிக்கும் அருஞ் சொற்றொடர்களாக அண்டத்திருமயில், தேவபூ, சொர்க்கக்கிளி, தேவகுஞ்சரி, வேழமங்கை, சசிதருமயில், சம்பைக் கொடியிடை ரம்பைக்கரசி, சம்பைக் கொடியிடை விபுதை, குஞ்சரிமான், சுரகுஞ்சரி, வானபைந்தொடி, புருகூதன் மீனாள் என அரியபதங்களை அருணகிரியார் எங்கெங்கெல்லாம் பயன்படுத்தியுள்ளார் என்பதனைத் தேடித் திரட்டித் தந்துள்ளார் பிள்ளையவர்கள்.

இதுபோன்றே வள்ளியின் திருநாமங்களையும் தொகுத்துத் தந்துள்ளார். அமுத சொரூபி, அமுதா சனத்தி, இன்பரச சத்தி, எயினர் குலோத்தமை, கலைக்கொம்பு, காவற் பாவை, கிராதகுலதிலக மான், கிராதலக்ஷ்மி, சந்தானமாது, சுசிஞானரம்பை,

சோதிப்பிராகசச் செயலாள், ஞானா தனத்தி, பட்டாள், பெண்கள் நாயகம், மிருகக் கரும்பு, மாயக்குறமாது, முத்தமிழ்மான், மூலஞான மங்கை, வேடபதிவ்ருதை, வேதச் சொருபி எனப் பிள்ளையவர்கள் தொகுத்தளிப்பதைக் காணலாம்.

மேலும் இப்பகுதியில் வள்ளியிடம் முருகர் கொண்ட காதலும் வள்ளிக்கு அவர் செய்த தொண்டுகளும், பற்றிய குறிப்புகள் சிறு சிறு தலைப்புகளில் பேசப்படுகின்றன.

1. வள்ளிக்குக் காணிக்கையாக (உருக்கத்) தழை ஏந்திச் சென்றது *(389)*
2. வள்ளியிருந்த காட்டுக்கும் ஒரு கும்பிடு போட்டது *(1151)*
3. தினையைக் குத்துவதற்கு உலக்கையாக வள்ளிக்கு யானையின் தந்தத்தைப் பறித்துக் கொடுத்தது (கந். அல.11)
4. கைத்தாளம் இட்டு வள்ளியை இரண்டு கைகளாலும் கும்பிட்டது
5. உலகோர் சிரிக்க லஜ்ஜையை விட்டு, வள்ளிக்கு மெய்க்காவற்காரனாயிருந்து (Body guard) அவளோடு வேளை பார்த்துக் கூடிக் குலவியது *(1186, 1241, 1245,1181)*
6. யானை, மான், கிளி இவையெல்லாம் உருகி நிற்கத் தினைப் புனத்தில் நின்று இசைபாடித் துதித்து வள்ளிக்கு உவகை ஊட்டியது
7. வள்ளிக் காலைக் கூசாமல் வருடியது *(1143, 790,225)*
8. வள்ளியை ஆருச்சித்து வெட்சிமாலை சூட்டியது *(474)*
9. தினைப்புனம் காக்கும் தொழிலைப் புதிதாகக் கற்றுக்கொண்டு நாள்தோறும் (வள்ளிக்கு உதவியாகக்) குயில், கிளி, வராது தினை காத்தது *(768, 902)*
10. வள்ளியைக் கண்காட்டி வேட்டது *(373)*
11. வள்ளியைத் தோளின் மேல் வைத்து ஒளித்தோடினது *(524,714,534)*

இவ்வாறாக வள்ளியோடு முருகவேள் கொண்ட தொடர்புகளைக் கொண்டு ஒரு கதை போலத் தொகுத்துக் காட்டுகிறார் உரையாசிரியர். அம்மட்டுமல்லாது (1) முருகா நீ தேவர் தம் பெருமாள்; ஆதி நாதராம் சிவனும் (உனது தண்டைக் கழலைப்பேணித்) தொழுது நிற்கின்ற தேசிக மூர்த்தி நீ அங்ஙன மிருந்தும் நீ வள்ளியின் பாதத்தைஉன்தலைக்கு அணியாகக் கொண்டுள்ளாய்

1. புனைமேவும். . . . . வஞ்சி . . . பாதம் படுஞ் சேகரா
   தண்டையங் கழல்பேணி . . . அதிநாதன் தொழும்
   தேசிகா! உம்பர்தம் பெருமாளே *(1107)*

2. 'முருகா வானவர் பெருமானாய்த் தேவர்களுக் கெல்லாம் தஞ்சம் அளிக்கின்றவன் நீ; அங்ஙனம் இருந்தும் நீ வள்ளி பால் மால்கொண்டவனாய் அவளிடம் சென்று எனக்கு உன்னை ஒழிய வேறு தஞ்சம் இல்லை' என்று கூறி அவளிடம் காத்து நின்றனையே என்கிறார்.

**தினைபுன மீதே மாதொரு மிக மாலாய்**
**மேகமென் குழலாய்! நீகேள் இனி**
**வேறு தஞ்சமும் நீயே யாமென**
**வேளை கொண்ட பிரானே வானவர் பெருமானே (1000)**

இங்ஙனம் வள்ளிபால் தாம்பெற்றபேற்றை நினைந்து மகிழ்ந்தே அருணகிரியார் தமது நூல்களில் வள்ளியின் பெருமையையே எடுத்தெடுத்துரைத்து மகிழ்கின்றார். ஆதலால் திருப்புகழ் 'முருகன் புகழ் நூல் மட்டும் அன்று! வள்ளியின் திருப்புகழ் நூலுமாம் என்று திடம்பட உரைக்கலாம்.

பால பருவத்தில் முருகன் மறக்கருணை காட்டினான். வள்ளியை மணந்த பின் முருகன் கருணை அறக்கருணையாய் மாறிற்று என்னும் கருத்தமைந்த பாடலைச் செப்பி இக்கட்டுரையை முடிப்பாம் என உரையாசிரியர் கூறியிருப்பது காணத்தக்கது.

**"கருணைநிறை கடவுள் நீ என்றாலும் உன் கருணை**
**ஓஹோ மறக்கருணையே**

. . . . . . . . . . . . . . . . . . . .

**அருணிறைவு காட்டினை, அருணகிரி நாதரை**
**ஆட்கொண்டு பாவகுக்கும்**
**அந்த அருள் தந்தனை செந்தமிழ்த் தெய்வமே**
**ஆயிகுற மான் மகிழனே"**

அடுத்தபடியாக இப்பகுதியில் இடம் பெறுவது **திருப்புகழும் வேலும்** என்னும் பொருண்மை பற்றியதாகும். இதில் வேளின் ஒளி, வேலின் அலங்காரமும் அழகும், வேலின் உக்ரம், வேலின் உருவம், வேலின் குணம், வேல் - மந்திரம், வேலின் பஞ்ச கிருத்தியம், வேலின் பெருமை, வேலைத் தியானிப்பதும், அதனால் வரும் பயனும் என்பன பற்றிப் பேசப்படுகின்றன.

தியானத்திற்குச் சிறந்தது வேல் மந்திரம்; வேல் வேல் எனப் பெரியோர் பலர் தியானித்துப் பல சித்திகளை அடைந்திருக் கிறார்கள். இதனால் மந்தர வேல் சித்தி மன்னு செய்ய சத்தி; மெய்ஞ்ஞான அயில், சிவமஞ்செழுத்து என்றெல்லாம் வேல் சிறப்பிக்கப்பட்டுள்ளது என வேலின் தெயவீகச் சக்தியைப் பிள்ளையவர்கள் எடுத்துணர்த்துவது காணலாம்.

வேலின் பெருமையாக, சிவமஞ்செழுத்து (606) என்று வேலைக் குறித்ததால் பஞ்சாக்ஷரத்துக்கு உள்ள பெருமையெல்லாம் வேலுக்கு உண்டு; மறச்சிறுமி விழிக்கு நிகராகும் (வேல் வகுப்பு) என்றதனால் வள்ளியம்மையின் திருமண நோக்கத்தால் வரும் பேறுகள் அனைத்தையும் வேல் தரவல்லது; இறை கழற்கு நிகராகும் என்றதனால் சிவன் சேவடிக்கு உள்ள பெருமை யெல்லாம் வேலுக்கு உண்டு என இப்பகுதியில் பிள்ளையவர்கள் உறுதி செய்வதைக் காணலாம்.

அருணகிரியார் அனுட்டித்ததாகவும் அவரே உலகோர்க்கு அனுப்பிக்க உபதேசித்த விரதம் வேலின் தியானம் என உரைக்கிறார் பிள்ளையவர்கள். வேலை தியானிப்பதால் வினைகள் ஓடி விடும் (கந். அநு.40) வேலை தியானிக்க யமபயம் நீங்கும். பிறவிக்கு வித்தாகிய ஆசையை அளித்துவிடும் என வேலை வணங்குவதால் உண்டாகும் பயனைக் கூறிவிட்டு இத்தனைச் சிறப்பும் வேலுக்கு இருப்பதால் தான் உலகோர் தம் மக்களுக்கு வேல் என்ற பெயரைத் தனித்தோ, தங்கவேல், வஜ்ரவேல் என்று அடைமொழி கொடுத்தோ சூட்டுகின்றனர். மேலும் அருணகிரியாரும் 'வேல்' எனும் பெயரை அடிப்படையாக வைத்து வேல் வகுப்பு, வேல்வாங்கு வகுப்பு என இரண்டு வகுப்புகள் வேலின் பெருமையைக் காட்டப் பாடியுள்ளதாகப் பிள்ளையவர்கள் எடுத்துக்காட்டியுள்ளது முருகவேள் கையில் கொண்டுள்ள வேலிடத்து அவர்க்குள்ள அபிமானத்தை வெளிக்காட்டும்.

**திருப்புகழும் மயிலும்** என்ற பகுதியில் வேலுடன் இணைந்து நிற்கும் மயிலின் சிறப்புகளைத் தொகுத்துக் காட்டுகிறார். திருப்புகழ் எங்ஙனம் பாடவேண்டும் என்று விநாயகப் பெருமான் அருணகிரியாருக்கு அருளியபோது 'பக்ஷி யெனும் உயர் திருப்புகழைச் செப்புக' என்று கட்டளை யிட்டார் என்றும் அதன்படியே திருப்புகழில் பரவலாக வேலும் மயிலும் போற்றப் படுகின்றது என்கிறார். இன்றும் வழிபாட்டில் வேலும் மயிலும் இணைத்தே பேசப்படுவதைக் காணலாம்.

இப்பகுதியில் மயிலின் (1) அலங்காரம், (2) கலாபத்தின் ஒளி (3) ஆற்றலும் வேகமும் உருவமும், (5) நடனமும் விளையாடலும் (6) செய்த தவம் (7) மந்திரப் பொருள் (8)வேலும் மயிலும் (9) மயில் மீது முருகவேள் பதுமாசனமிட்டு வீற்றிருத்தல் (10) அருமைச் சொற்றொடர்கள் (11) வருணனைப் பாடற்குறிப்புகள் என உரையாசிரியர் விரித்துக் கூறியுள்ளார். இதனில் 7, 10 ஆகிய குறிப்புகள் பற்றிச் சற்றுக் காண்போம்.

**மயில் – மந்திரப் பொருள்**

வேலுடன் சேர்ந்து 'வேலும் மயிலும் துணை' என்பது ஒரு சிறந்த மந்திரம். அருணகிரியார் 'வேலுமயிலும்' என்னும்

மந்திரத்தையே நினையுங்கள், ஓதுங்கள், வாழ்த்துங்கள் என்று கூறுவதோடு அப்படிச் செய்வதால் ஏற்படும் பயனையும் விளக்கியுள்ளார் என்பதைப் பிள்ளையவர்கள் சுட்டியுள்ளது எண்ணத்தக்கது.

1. ஆடும்பரிவேல் அணி சேவலெனப்
   பாடும் பணியே பணியா அருள்வாய் (கந். அநு-1)

2. அடல்புனைந்த வேலும்மயிலும் என்றும் வாழி (சிந்து வகுப்பு)

3. பயந்த தனி வழிக்குத்துணை வடிவேலுஞ் செங்கோடன் மயூரமுமே (கந். அலங். 70)

4. மயிலையும் அவன் திருக்கை அயிலையும்
   . . . . நினைந்திருக்க வாருமே (கடைக்கணியல் வகுப்பு)

5. மரணப்ரமாதம் நமக்கில்லையாம் என்றும் வாய்த்த
   துணை கிரணக் கலாபியும் வேலு முண்டே (கந்.அலங்.21)

6. வேலு மயிலும் நினைந்தவர் தந்துயர் தீர அருள்தரு கந்த (920)

7. வினையோட விடுங் கதிர்வேல் (கந். அநு. 40)

8. நீண்ட கன்மச் செவிக்குன்றவா . . . . - வேலாயுதம் செற்றது (கந். அந். 26)

9. சிந்து . . . மால் வினைக்குன்றைச் சிகண்டி கொண்டே (கந். அந்-26)

என இப்பாடல் வரிகள் வாயிலாக 'வேலும்மயிலும்' மந்திர வாசகமாக விளங்கும் பேற்றை உரையாசிரியர் காட்டுவது கண்டு போற்றத்தக்கது.

### மயிலைக்குறிக்கும் அருமைச்சொற்றொடர்கள்

அடல்மயில், அழகுமயில், ஆடுமயில், ஓகாரபரி, சண்டநீல கலாப வாசி, சாமளகலாபப்பரி, சிங்காரரூப மயில், சித்ரமணி மயில், துரகத பதங்க இரதம், நாட்டியமயில், நர்த்தனம் நடத்திடு பக்ஷி, நீலக்ரீப கலாபத்தேர், நீலமயில், பச்சை மஞ்ஞை, ரத்னபடாக மயில், ரத்னரேகையொக்கச் சிறக்கு மாமயில், விகட நடங்கொள் சித்ரமயில், வையாளிப்பரி என அற்புதமான இப் பிரயோகங்களில் பல நாம் அறியாதன.

**திருப்புகழும் சேவலும்** என்ற பகுதியில் 'சேவலின்' சிறப்புகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. "அரிய குருகுகொடி யெங்குந்

தழைத்தருள',எனவும் திக்கது மதிக்கவரு குக்குடம்' எனவும் பாராட்டப்படுவது சேவலாகும். சேவல் என்னுஞ் சொல்லுக்குக் கோழி' என்ற பொருளுடன் துளை, காவல் என்ற பொருளும் உண்டு. அதனால்தான் இருவகைப் பொருள்படும்படி, ஆடும் பரிவேல் அணி சேவலெனப் பாடும் பணியே பணியா அருள்வாய் என்பது அருணகிரியார் அநுபூதியிற் பாடிய பாடல்.

ஆடும்பரி (மயில்), வேல், அணி சேவல் அழகிய கோழி என மூன்றையும் பாடும் பணி என ஒரு பொருளும் ஆடும் பரி (மயில்) வேல் - இவையிரண்டும் வேலும் மயிலும் - அணி (அழகிய) சேவல் (துணை) - எனப்பாடும் பணி, என உருப்போடும் பணி - வேலும் மயிலுந் துணை என ஜெபிக்கும் பணி எனப் பிறிதொரு பொருளும் பிறக்கும். வேலையுந் துதிப்பதுபோல், வேலையுந் சேவலையும் துதியுங்கள் என்று கூட அருணகிரியார் உபதேசித்திருக்கக் கூடும் எனக் குறிக்கிறார்.

இறுதியாகச் சேவலைப் பற்றிக் குறிப்பிடும் போது சேவல் அறச் சேவல் எனப்பட்டது (518), அது குற்றமற்றது - புகரில் சேவல் (1176) அது அஞ்சல் என்று ஆளுங் கருணையது. வாரணம் அஞ்சல் என்றாண்டது (கந் - அலங்.26) அது ஏழுலகங்களையும் வாழ்விப்பது; ஏழு லோகம் வாழ்வான சேவல் (1032) ஆதலால் சேவலைச் சிந்தித்தல் வேண்டும் என இக்குறிப்பு வழிப் பிள்ளையவர்கள் வற்புறுத்துகிறார்.

**திருப்புகழும் பிற தெய்வங்களும்** என்ற இறுதிப்பகுதியில் வீரபத்திரர், வீரவாகுத்தேவர், பிரமன், இந்திரன், சூரியன், சந்திரன், யமன், மன்மதன், இலக்குமி, சரஸ்வதி போன்ற தெய்வங்கள் திருப்புகழில் சிறப்புறப் பேசப்பட்டுள்ளதால் அவற்றையும் ஒரு குறிப்பாக இணைத்துள்ளார்.

இப்பகுதியில் உரையாசிரியர் பல அரிய செய்திகளை நமக்குத் தொகுத்துத் தந்துள்ளவற்றில் ஆபரணங்கள் பற்றி அவர்தரும் குறிப்பு அருணகிரிநாதர் காலத்து இம்மண்ணில் வழங்கிய ஆபரண வகைகளை நாம் அறிந்து கொள்ள ஏதுவாகிறது. மேலும் இன்ன இன்ன இறைவர்க்கு இன்ன இன்ன ஆபரணம் உரியது என்பதையும் இக்குறிப்பு வழியாக நாம் உணரமுடிகிறது.

முருகவேள் பன்னிரு திருமுறையில் எட்டாந் திருமுறையாக விளங்கும் கந்தரலங்காரம், சைவ சமயப் பன்னிரு திருமுறையில் சீர்மையோடு விளங்கும் திருவாசகத்திற்கு இணையாக விளங்குவது. இப்பகுதிக்கு உரை வரையும் போது அந்வயம், பொழிப்புரை, சுருக்கவுரை, குறிப்புரை ஆகியன இடம் பெற்றுள்ளன. இங்கே அடிக்குறிப்பு முறை தவிர்க்கப் பட்டுள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.

இந்நூல் நுவலும் செய்திகளை உரையாசிரியரின் கடின முயற்சியால் எளிதில் உணரமுடிகிறது. பிள்ளையவர்களின் நுண்மாண் நுழைபுலத்தை இந்நூலுக்கு இறுதியில் அவர் தந்துள்ள ஆய்வுக் குறிப்புகள் மூலம் நாம் அறியலாம். 'கந்தரலங்காரம்' என்ற பெயர்க்காரணம் பற்றிக் கூறும்போது, 'இந்நூல் முருகக் கடவுளுக்கு மிகவும் உகந்த பாமாலை. சிவபிரானுக்கு எங்ஙனம் தேவாரம் ருசிக்குமோ, அங்ஙனம் முருகவேளுக்குத் திருப்புகழ் இனிக்கும். முருகப் பிரானது திருவடி முதல் திருமுகம்வரையும் உள்ள அங்கங்களின் சிறப்பையும், அவர் ஊர்தி, படை, கொடி இவைகளின் பெருமையையும் எடுத்தோதும் நூலாதலால் இந்நூலுக்குக் கந்தர் அலங்காரம் என்னும் திருநாமம் வாய்த்தது'' என்று பெயர்க்காரணத்திற்கான விளக்கத்தை நல்குகிறார்.

அடுத்து "அருணைத் திருக்கோபுரத்தே வடவருகிற்சென்று கண்டு கொண்டேன்' எனவரும் காப்புச் செய்யுளால் இந்நூல் திருவண்ணாமலையிற் புனைதல் பெற்றிருத்தல் வேண்டுமென்று தோன்றுகிறது." என இந்நூல் எவ்விடத்துச் செய்யப்பட்டது என்பதனைத் தெளிவு செய்கிறார். மேலும் நூற்பயன் கூறுஞ் செய்யுளில் 'அலங்கார நூற்றுள் ஒரு கவி தான் கற்றறிந்தவரே" என வருதலால் இந்நூல் நூறு செய்யுட்கள் கொண்டதாய் இருத்தல் வேண்டும். 'அப்போதைக்கப்போது பாடப்பட்ட தனிச் செய்யுள்கள் பின்பு ஒரு நூலாகக் கோர்க்கப்பட்டிருக்கலாமோ என்றும் தோன்றுகின்றது' என்ற குறிப்பின் வழியாக மூலபாட ஆய்வுக்கு அவர் தரும் முக்கியத்துவத்தை உணரலாம்.

எந்த மனிதனும் இந்நிலவுலகில் வாழ்வாங்கு வாழவே இறைவனிடம் வேண்டுவான் என்பது பொதுநிலை. உயிர் அச்சம் என்பது எல்லா உயிர்க்கும் உள்ள தலையாய பண்பு. இறப்புக் கடவுளாக விளங்கும் காலன் என்னும் இயமனிடத்து மானிடர் அச்சம் கொண்டு, இறைவனைத் தஞ்சம் அடைதல் என்பது பக்தி இலக்கியத்தின் பொருண்மைகளில் தலையாயது எனலாம். அவ்வகையில் அருணகிரியும் தொடக்கத்தில் திருப்புகழில் பல இடத்தும் 'முருகா! யமன் கையிற் சிக்காது அடியேனை நீயே ஆண்டு கொண்டருள்' என வேண்டினாலும் ஒரு காலகட்டத்தில் "தண்டாயுதமுந் திரிசூலமும் விழத் தாக்கியுன்னைத் திண்டாட வெட்டி விழவிடுவேன். ஞானச் சுடர் வடிவாள் கண்டா யடா! அந்தகா! வந்துபார் சற்றென் கைக் கெட்டவே" (25) என்றும் 'பட்டிக் கடாவில் வரும் அந்தகா! உன்னைப் பாரறிய வெட்டிப் புறங் கண்டலாது விடேன்... கட்டிப்புறப்படடா சத்தி வாளென்றன் கையதுவே' (64) என்றும் 'வாரா தகலந்தகா வந்தபோ துயிர் வாங்குவனே' (81) என்றும், விளித்து வெருட்டி வெருட்டித்

திடுக்கிட்டோடும் படி அச்சுறுத்திப் பேசுவதிலிருந்து, திருப்புகழ் பாடிப்பாடி முருகன் திருவருள் ஊறி ஊறிச் சிந்தை தெளிந்த திண்மை நிலையில் இச்செய்யுள்கள் பாடப்பட்டிருத்தல் வேண்டும் என்ற குறிப்பின் வாயிலாக, சந்தம் நிறைந்த திருப்புகழைப் பாடும் எவர்க்கும் காலனைப் பற்றிய கலக்கம் தேவையில்லை என்பதனைப் பிள்ளையவர்கள் வலியுறுத்தக் காணலாம்.

அடுத்து இந்நூலிற் கூறப்பட்டுள்ள விசேட பிரயோகங்கள், பழமொழிகள் பலவற்றையும் இவ்வாராய்ச்சிப் பகுதியில் தொகுத்துத் தந்துள்ளார். விசேடப் பிரயோகங்கள் :

1. சர்க்கரை மொக்கிய களிறு (காப்பு)
2. கழுத்திற் சுருக்கிட்டிழுக்கு மன்றோ கவி கற்கின்றதே (2)
3. முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன் (22)
4. அவன் கால்பட்டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே (40)
5. ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் அடைக்கலமே (84)

தன்னிடம் வந்து வணங்குபவர்கள் தமது தலையில் தடபட என்று ஒலிக்கும் படி குட்டிக் கொண்டு தனக்கு நைவேத்தியமாக வைக்கும் சர்க்கரையைக் கப்பி உண்கின்ற துதிக்கையுடைய களிறு என்று கூறினாலும் சர்க்கரை : ஆன்மபோதம் என்ற விசேடப் பொருளைத் தருகிறார்.

இந்நூலிற் கூறப்பட்டுள்ள பழமொழிகளில் ஒரு சில:

1. ஆழப் புதைத்து வைத்தால் வருமோ நும் அடிப்பிறகே (20)
2. ஆற்றிற் பெருக்கானது செல்வம்
3. தொலையா வழிக்குப் பொதிசோறு
4. ஒருபிடி சாம்பருங் காணாது மாய உடம்பிதுவே
5. நதிதனை யன்ன பொய் வாழ்வு
6. கொழு கொம்பிலாத தனிக்கொடிபோல்

இனி இந்நூலிற் கண்டுள்ள நல் உபதேசங்களை (நல்லறச் செய்திகளை) உரையாசிரியர்,

வேலன் கவியை எழுத்துப் பிழையறக் கற்றல்வேண்டும் (2)
மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம் (16)
வெகுளியை விடல் வேண்டும் (16)
தானம் என்றும் இடல் வேண்டும் (16, 51, 53, 54, 59, 66)
ஏழைகளுக்கு நொய்யிற் பிளவள வேனும் பகிர்தல் வேண்டும் (18)
மயில் வாகனனைச் சாந்துணைப்போதும் மறத்தலாகாது (72)

எனத் தொகுத்துக் கூறியுள்ளதன் மூலம் பக்தி என்பதே நன்னெறிக்கு இட்டுச் செல்வது என்பதை உணர்த்துகிறார். இக் கந்தரலங்காரத்துள்ள நூறு செய்யுள்களையும் ஆராய்ந்து அவை தமைப் பொருள்வழிப் பிரிவு செய்து காட்டுதல் வருமாறு:

முருகர் பெருமையும், திறனும் கருணையும் பற்றிப் பேசும் பாடல்கள் (5,13,22,38,58,70,83,93) நாம விசேடம் குறித்தது (33) என அமைகிறது.

வெற்றிவேற் பெருமான், அடியார்க்கு நல்ல பெருமான், அவுணர் குலமடங்கப் பொடியாக்கிய பெருமான் என முருகவேளின் சிறப்புறு பெயர்கள் இப்பாடலில் பதியப் பெற்றுள்ளதைக் காணலாம். முருகன் கையில் அழகு செய்யும் வேல் குறித்து (3,62) மயில் குறித்து (11, 96, 97) சேவல் பற்றி (12) நெஞ்சொடு கிளைத்தல் பற்றி (17, 30, 36, 49, 75, 77, 94) தன்குறை கூறல் குறித்து (4, 42, 43, 48, 54, 60, 67, 76) கதியின்மை கூறல் குறித்து (44, 84, 98) தன்னுறுதி கூறல் குறித்து(71) பிரார்த்தனைப் பதிகங்களாகப் பத்தொன்பது பாடல்களும், தரிசனம் குறித்து இரண்டு பாடல்களும், தன் அநுபவங்குறித்துக் கூறும்பாடல்களாகப் பத்தும், தன்னாநந்தங் குறித்துக் கூறும் பாடலாக எட்டும் இங்கு உரையாசிரியரால் எனப் பகுப்பு செய்யப்பட்டுள்ளன.

இப்பகுதியில் காணும் சில பொருண்மைகளை உரையாசிரியர் திருவாசகப் பாடல்களுடன் ஒப்பிட்டுக் காட்டியுள்ள பாங்கு அவர் திருவாசகத்தில் எத்தனை ஆழங்கால் பட்டவர் என்பதைக் காட்டும்.

'மைவருங் கண்டத்தர்' எனத் தொடங்கும் 84 ஆம் பாடல் திருவாசகத்தில் 'அடைக்கலப்பத்து' செய்யுட்கு ஒப்பானது என்றும், பிரார்த்தனைப் பதிகங்கள் பத்தொன்பதில் பெரும்பாலான பாடல்கள் திருவாசகத்தில் அருட்பத்து, பிரார்த்தனைப் பத்து போன்ற செய்யுட்களுக்கு இணையானது எனவும் திருவாசகத்திற் காணப்படும் 'கண்டப்பத்துக்கு' ஒப்பானது கந்தரலங்காரப் பாடல்களான 27, 90 எனவும், கந்தரலங்காரத்திற் காணப்படும் தன் அனுபவங் கூறும் பாடல்கள் திருவாசகத்தின் அச்சோப்பத்துக்கு இணையானது எனவும் உரையாசிரியர் குறிப்பிட்டுக் காட்டுவது அவரது ஒப்புமை நோக்குத் திறனுக்குத் தக்கசான்றாகும்.

கந்தரலங்காரத்தில் வழிபாட்டிற்கு மட்டும் அல்லாது எப்போதும் நினைவில் நிறுத்திக் கொள்ளவேண்டிய பாடல்கள் என 16 (தடுங்கோள் மனத்தை) 33, (முடியாப் பிறவி) 76(கோடாத) 60 (சிந்திக்கிலேன்) 70 (விழிக்குத்துணை) 38 (நாள் என் செய்யும்);

86 (வேலாயுதன்) 27 (ஓலையுந்); 47 (பத்தித் திருமுகம்) 23 (தெய்வத்); 39 (உதித்தாங்கு); 84 (மைவருங்) ஆகிய பாடல்களைக் குறித்துக் காட்டி அவரது உரைத்திறனுக்குச் சிறப்புச் சேர்ப்பதைக் காணலாம்.

*கந்தரந்தாதி நூல் வரலாறு*

பெரும் புலமை வாய்ந்தவரும் தம்மொடு வாது செய்து தோற்றவர்களின் காதைக் குறடு கொண்டு குடைந்து தோண்டும் வழக்கத்தைத் தமது கல்விச் செருக்காற் கையாண்டவரும், மிக அற்புதமான வாக்கிற் பாரதத்தைப் பாடியவருமான வில்லிபுத்தூராருக்கும் அருணகிரியார்க்கும் ஒருமுறை தருக்கம் உண்டாயிற்றென்றும் அப்போது ஆசுகவியாக அருணகிரியார் பாடிய நூல்தான் கந்தரந்தாதி என்றும் அந்நூலுக்கு உரை அவ்வில்லிபுத்தூரரே உடனுக்குடன் கூறிவந்தன ரென்றும், அதில் 54 ஆவது செய்யுளுக்கு அவர் உரைகூற மாட்டாது திகைத்துத் தோல்வியுற்றன ரென்றும் அதற்கு அருணகிரிநாதரே உரை அருளிச் செய்தன ரென்றும், இந்நூற் தோற்றத்திற்கான காரண காரியங்களை உரையாசிரியர் தந்துள்ளார்.

பொதுவாக முருகப்பிரானுக்குத் தொழும்பு பூண்ட அடியார் பலரும் மனனமாகப் படித்து வரும் நூல்களுள் திருமுருகாற்றுப்படை, திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, திருவகுப்பு என்னும் ஐந்து நூல்களும் பஞ்சரத்தினம் எனப் போற்றப்படும் தகைமையன. உரையாசிரியர் கந்தரந்தாதியையும் இணைத்துக் கந்தனுக்கு உகந்த நூல்களாக அமைந்தவை ஆறு எனக் கூறுகிறார். இக் கந்தரந்தாதி மகா விசேடமுடைய தாயிருந்தும் ஏனைய ஐந்து நூல்களைப் போலப் பாராயணங்களில் வெளிவராது முடங்கி விட்டது என வருந்தி அதன் சிறப்புகள் இன்னது எனப் பின்வருமாறு கூறுகிறார்.

இந்நூலிலுள்ள நூறு செய்யுள்களின் முதலெழுத்துகள் சி,சீ,செ,சே, தி, தீ, தெ,தே என்னும் எட்டெழுத்துகளுள் அடங்குதல் கவனிக்கத்தக்கது என்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

போட்டியிட்டுப் பாடப் பெற்ற நூல் ஆதலால் இதில் பெரும்பாலான பாடல்கள் எளிதான முறையில் விளங்காத வழியில் அமையப்பெற்றுள்ளதாகப் பிறிதொரு குறிப்பினைக் கூறுகிறார். விஷய ஆராய்ச்சி என்ற பகுதியில் எளிதாகப் பொருள் விளங்கும் பாடல்கள் என 1, 2, 3, 5, 6, 8, 10, 17, 18, 30, 31, 41, 44, 46, 47, 48, 50, 56, 61, 63, 64, 70, 73, 75, 81, 82, 83, 90, 91, 94, 97 ஆகியவற்றைக் குறிக்கிறார்.

சிவபிரானுக்கு உபதேசம் (4,5); சிவபிரான் வாய்புதைத்துச் செவி தாழ்த்தி உபதேசம் கேட்டது (19,25); செந்தமிழ்ப் புலவர்

என்பது (37,98) சூரன் அட்டது (32) தம்மை லகு என்று நினைத்த அக்கினியைக் கருகவைத்தது (83) திருமால் மெச்சுவது (24) பாண்டியன் மகளின் குதிரைமுகத்தைச் சுந்தரமுகம் ஆக்கினது (51) பிரமனை முனிந்ததும் சிறையிட்டதும் (14,27,45,51,95) முருகர் திருமுகம் வள்ளி இதய தாமரையை ஒப்பது (64) வள்ளிக்கு உலக்கைக்காக யானைக் கொம்பைப் பறித்துத் தந்தது (11) வேலாயுதமே சரணம் எனப் பிரமனைச் சொல்ல வைத்தது(45) வேள்விக்குப் பலன் அளிப்பவன் (40,55) என முருகவேளின் அருளிச்செயல்கள் மற்றும் அற்புதங்கள் தொடர்பான பலசெய்திகளை உரையாசிரியர் உள்ளங்கை நெல்லிக்கனியாக நமக்குத் தொகுத்துத் தந்துள்ள திறமை அவரது சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் உத்திக்கு எடுத்துக்காட்டு.

ஆன்மீகம் தொடர்பான மக்களுக்குப் பயன்படும் பல விடயங்கள் இக் கந்தரந்தாதியில் பொதிந்துள்ளது என்பதை அறிந்து அவற்றைத் தொகுத்துத் தந்துள்ளார். கந்தா எனக்கூறி உய்ம்மின் (30) தும்மும்போது குமரா சரணம் என்க (97) (இன்றும் தும்மல் செய்தால் இஷ்ட தெய்வத்தை மனதில் நினைத்தல் வேண்டும் என்பது நம்பிக்கை), முருகனுக்கு ஞான விளக்கு ஏத்தி வைத்து முருகனைத் துதித்தால் நவக்கிரக பீடை வராது (97) எனக் கூறியுள்ளார். முருகன் செவ்வாய்க் கிரகத்திற்கு அதிபதி - செவ்வாயால் உண்டாகும் தீங்கைச் சேயூழ் என்பர். செவ்வாய் தோஷம் உள்ளவர்கள் முருகனை வணங்குதல் இன்றும் மரபு. முருகனை வணங்கி வந்தால் தீவினை சேராது (98) என்பது உரையாசிரியர் குறிப்பு.

மேலும் முருகனிடம், வேண்ட வேண்டியதாக ஆசிரியர் குறிப்பன: உன் திருவடியில் என்மனம் பற்றும்படி அருள்-49. உன் திருவடியிற் சேர்த்துக்கொள் அப்படிச் சேர்தலே அழகு (31,37,59) உன் திருவடியே எனக்கு உறவு, பொக்கிஷம் - அடைக்கலம் (39,95) முருகனை வணங்காததால் அஞ்ஞான இருள் அகலவில்லை (12) அஞ்ஞானிகளிடம் சேராதிருக்க அருள்புரிக (21) என் உள்ளத்தைத் திருத்து (34) என் வினையை ஒழித்தருள் (66,86) நரகத்தில் நான் வீழாது காத்தருள் (41) யமன் என்னை அணுகாது காத்தருள் - என் உள்ளத்தில் நீங்காது இரு (15,20,22,94) என்பனவாகும்.

விஷய ஆராய்ச்சியில் அகப்பொருள் செய்யுள்கள், ஆறெழுத்து உபதேசங்கள், கணபதி பற்றிய செய்திகள், சிவபெருமான் பற்றிய தகவல்கள், திருமால் தொடர்பான செய்திகள், சிறப்புறு தலங்கள்அதாவது இவ்வந்தாதியில் காணப்படும் தலங்களாக அமராவதி (29,57) அறுபடைவீடு (1) இலஞ்சி (13,81,91) கயிலை (95) கொல்லிமலை (74) சீகாழி (29,100) திருச்செங்கோடு

(வேதகிரி, சர்ப்பகிரி) 23,26,41,42,56, 67,68,78,82,90,91) திருச்செந்தூர் 1,5,13,14,23,24,33,35,42,48, 58,61,62,65,70,71,86,88,90,91,93-95) திருத்தணிகை (9, 29, 56, 59, 91, 92) திருப்பரங்குன்றம் (1,56) திருவண்ணாமலை (தேயுஸ்தலம்) (காப்பு27) திருவரங்கம் (90,94,98) திருவல்லம் (91) திருவாவினன்குடி பழநி (1,22,64) தில்லை (60); பழமுதிர்ச்சோலை (1,73) வள்ளி மலை (7) வெள்ளிமலை (74) என்பனவற்றைக் குறிப்பிடுகிறார். மேலும் திருவேரகம் (1,3,91) குறிப்பின் இடையே திருவேரகம் உபதேச தலம் (91) என்றும் சோழன் திருப்பணி செய்த தலம்(3) என்றும் தருவது காணத்தக்கது.

கந்தரந்தாதியில் பேசப்படும் திருமால், தேவசேனை, பார்வதி, பிரமன் போன்ற இறைவர்களைப் பற்றி அறிய வரும் பாடல்களையும் தொகுத்துத் தந்துள்ளார். இக் கந்தரந்தாதி விஷய ஆராய்ச்சியில் சிறப்புறு தகவலாக அமைவது அக்கினியின் கரத்தில் திகழ்ந்தது (66,69,83); உமை முலைப்பால் உண்டது(33) கடல் சுவற வேல்விட்டது (45,74) கிரௌஞ்சம் பிளந்தது (12,51) எனும் முருகவேளின் பராக்கிரமம் பற்றிக் குறிப்பிடும் செய்திகள் ஆகும்.

ஈதலின் அவசியமும் சிறப்பும் (75); சிவநெறி விலகி அவத்தைப்படுதல் (75) பிறப்புக்குக் காரணம் வினைதானே (52) மனம் நிலை பெறாத பூஜை பயனற்றது (90) எனக் கந்தரந்தாதி காட்டும் நல்ல செய்திகளை ஆசிரியர் உரைவழி தொகுத்துக் காட்டுவதன் மூலம் அருணகிரியாரின் உள்ளம் எத்தனை மாண்புடையது என்பதனை உணர முடிகிறது.

மிக எளிதாகப் பொருள் விளங்குவன 1,34,36; சற்று எளிதாகப் பொருள் விளங்குவன 4,9,13,15,16,21,22,24,29,33,39,49,58, 59,60,62,65,66,67, 68,86,98,99,100 ஆகிய பாடல்கள் எனவும் சற்றுக் கடினமாகப் பொருள் விளங்குவன - 12, 14, 20, 23, 25, 27, 28, 32, 35, 42, 43, 45, 52, 54, 55, 71, 72, 74, 76, 77, 78, 79, 80, 85, 88, 95 ஆகிய பாடல்கள் எனவும், கடினமாகப் பொருள் விளங்குவன 7, 11, 19, 26, 36, 37, 38, 40, 51, 53, 57, 69, 84, 87, 89, 92, 93 ஆகிய பாடல்கள் எனவும் வெகு கடினமாகப் பொருள் விளங்குவன காப்பு-2ஆம் பாடல் என்றும் வகைப்படுத்திக் காட்டியிருக்கிறார். இது இதுவரை எந்த நூலிலும் எந்த உரையாசிரியராலும் காட்டப்படாத ஒரு புதுமையாகும்.

## திருவகுப்பு: ஒன்பதாம் திருமுறை

திருவகுப்புகள் பதினெட்டு என்றும், இருபத்தைந்து என்றும் இருபத்தைந்திற்கு மேல் முப்பத்திரண்டு வரை என்றும் திருத்தணிகைச் சரவணப்பெருமாளையர் பதிப்பைப் பார்த்துக் காஞ்சிபுரம் - பிள்ளைப்பாளையம் மணியப்ப முதலியார்

குறிப்பிடுகிறார். ஆயின் அருணகிரிநாதர் அருளியவை பதினெட்டு வகுப்புகளே என்ற கொள்கையுடையவர் ஆறுமுக நாவலர் என்ற குறிப்பினைத் திருவகுப்பு முன்னுரையில் எழுதியுள்ளார் பிள்ளையவர்கள்.

பதினெட்டு வகுப்புகள் பற்றிப் பிள்ளையவர்கள் எழுதும் போது, முருகன் திருவடிச் சிறப்பு (சீர்பாத வகுப்பு), முருகன் அடியார் பெருமை (தேவேந்திர சங்க வகுப்பு), முருகன் படை (வேல் வகுப்பு, வேல் வாங்கு வகுப்பு), முருகனுக்கு உகந்த நாயகி (வேளைக்காரன் வகுப்பு, வேடச்சி வகுப்பு, காவலன் வகுப்பு), முருகன் திருவாய் மலர்ந்த உபதேசமொழி (பெருத்த வசனவகுப்பு), முருகன் சேனை (பூத வேதாள வகுப்பு), முருகன் போர் வீரம் (அலகை வகுப்புகள் சேவகன் வகுப்பு), முருகன் உபதேசத்தாற் பெற்ற ஞானப் பிரசாதத்தின் சீரும் சிறப்பும் (திருஞான வேழ வகுப்பு, திருக்கை வழக்க வகுப்பு), முருகன் பன்னிரு புயங்களின் பெருமை (புயவகுப்பு), முருகன் திருப்புகழ்ப் பெருமை (சித்து வகுப்பு), முருகன் திருநோக்கச் சிறப்பு (கடைக்கணியில் வகுப்பு), முருகன் திருவருளாற் பெற்ற அன்பின் சிறப்பு (சிவலோக வகுப்பு) ஆக அடைப்புக்குறியிற் காணப்படும் இப்பதினெட்டு வகுப்புகளே அருணகிரியாரின் மூலப் படைப்பு என்பது உரையாசிரியரின் எண்ணமாகும்.

இனி இத்திரு வகுப்புகள் கூறும் சிறப்புச் செய்திகளாகப் பிள்ளையவர்கள் கூறுவனவற்றைச் சிந்திப்போம்.

1. முதற் பதினெட்டு வகுப்புகளில் 1,3,4,6,7,9,10,11,12,14,15,16 ஆகிய 12 வகுப்புகளில் திருத்தணிகை கூறப்பட்டிருப்பதால் - கிளியான பின் அருணகிரியார் திருத்தணிகைக்கு வந்து திருத்தணி கேசன் திருக்கரத்தே தங்கித் திருவகுப்புகளிற் பலபாடி இருப்பார் எனத் தோன்றுகிறது என்பது பிள்ளையவர்களின் கணிப்பு. அடுத்து வகுப்புகளின் ஆற்றல் பற்றி இவ்வாறு கூறுகிறார்.

1. சீர்பாத வகுப்பு ஞானத்தை அளித்து, யமபயத்தை நீக்கி, அருள்நெறியிற் சேர்த்து, வினைப்பகையை அழித் தொழிக்கும்.
2. தேவேந்திர சங்க வகுப்பு பூதம் பிசாசு ஆகிய துஷ்டப் பகைகளையும், யமனையும் வெருட்ட வல்லது.
3. வேல் வகுப்பு, எவ்வித ஆபத்தையும் நீக்கி உயிர்த் துணையாய் நிற்பது.

4-6 வேளைக்காரன் வகுப்பு, வேடச்சி காவலன் வகுப்பு, புய வகுப்பு இம்மூன்றும் பத்தித் துறையிழிந்து, ஆனந்த வாரியில் திளைத்து நிற்பதற்கு உதவும் துதி வகுப்புகளாம்.

7. வேல் வாங்கு வகுப்பு, போர் பூகம்பம், வெள்ளம், தீ ஆகிய பெரிய ஆபத்துக்களினின்றும் நம்மைக் காக்க வல்ல பேராற்றல் கொண்டது.
8. கடைக்கணியில் வகுப்பு உலகோரை முருகனிடத்தே ஆற்றுப் படுத்தி உய்யும் வழியை எடுத்துரைக்கும் பெருங்கருணை வகுப்பு. இதைத் 'திருவருட் பிரசாத வகுப்பு' அல்லது திருமுருகாற்றுப் படை வகுப்பு எனவும் கூறலாம்.

இவ்வெட்டு வகுப்புகளும் பாராயணத்துக்கும் மனப் பாடத்துக்கும் உரியனவாம். சீர்பாத வகுப்பு, தேவேந்திர சங்க வகுப்பு, வேல் வகுப்பு ஆக இம் முதல் மூன்று வகுப்புகளும் முறையே மணிமந்திர ஔஷத வகுப்புகளாம்.

திருப்புகழ் போலச் சந்தப்பாவால் அமைந்த இந்நூல் முருகக் கடவுளின் சீர்பாதப் பெருமை, அடியார் பெருமை, வேலாயுதத்தின் பெருமை, உபதேசப் பெருமை, பிரசாதப்பெருமை, திருப்புகழ்ப் பெருமை, கடைக்கணோக்கப் பெருமை, திருக்கரங்களின் சிறப்பு ஆகிய இவை தமை வகுத்து எடுத்து ஓதுவதால் நூலுக்குத் திருவகுப்பு என்னும் பெயர் வாய்ந்தது.

திருவகுப்பின் சிறப்பு என்பது ஏனைய திருப்புகழ் போல, பெண்ணாசை யறுதலை முன்நிறுத்திப்பேசாமாலும், யமபயம் நீக்கிக் காத்தருள வேண்டும் எனப் பேசாமல் இவற்றிற்கு மேலாக முருகவேளின் பெருமையை உலகத்தார்க்கு எடுத்துக்காட்டுவது ஆகும்.

சம்பந்த மூர்த்தி சுவாமிகளை முருகக்கடவுளெனத் திருப்புகழிலும் கந்தரந்தாதியிலும் போற்றிப் புகழ்ந்தது போலத் திருவகுப்பில் கூறப்படவில்லை.

திருப்புகழிற் கூறப்பட்ட வயலூர் வேறு நூல்களில் கூறப்படாததும் இதன் தனிச்சிறப்பாகும்.

1. முருகனினும் சிறந்தது அவர் சீர்பாதம்
2. முருகன் திருநாமத்தை மொழிபவரைத் தேவேந்திர சங்கமும் வணங்கும்
3. தேவர்கள், முனிவர்கள், இந்திரன், பிரமன், திருமால், மனிதர்கள் ஆகிய யாவருடைய துன்பங்களையும் வினைகளையும் ஒழிக்க வல்லது
4. பத்தி வழியே முத்தியாம் என ஒழுகும் பக்தர்களின் மீது அன்பு கொள்பவன்
5. சகல வேதனைகளையும் தவிர்க்கும் இன்ப மௌன நிலையைக் கூட்டி வைப்பது பெருத்த வசன வகுப்பு

6. முருகப்பிரான் சூரனொடு பொருதுங்காலத்துப் போர்க்களத்தில் ஆடிய பூத வேதாளங்களின் காட்சி
7-9 முருகவேள் அசுரனை வதஞ்செய்த போர்க்களத்துள்ள பேய்கள் வருணனை
10. மௌன ஞான விசேடத்தை அறிவித்து உடற்பிணியை நீக்கிச் சிதாகாசத்திற் கொண்டு போய் விடும் தன்மையது.
11. திருப்புகழைப் படிப்பவருக்கு, அந்தப் பிரான் தமது திருக்கரத்தால் பிரசாதமாக அளிக்கும் நிருமல ஞானத்தின் சிறப்பைப் பெற்றது.
12. காவலனாக இருந்து அடியவர்களைக் காத்தல்
13. யமதூதர்கள் வருத்தும்போது உதவும் அருள்சேவகன்
14. வேலின் பெருமை பேசுவோரைச் சிறப்பாக வாழ்விப்பது
15. முருகவேளின் பன்னிரு திருப்புயச் சிறப்புகளைக் கூறுவது
16. சித்திக்கு வழி கூறுவது
17. முருகவேளின் கடைக்கண் நோக்கின் பெருமையைக் கூறுவது
18. மௌன யோக நிலையால் வரும்பேரின்ப அன்பெனப் படுஞ் சிவலோகந் தருவதான சிறப்பைப் பெற்றது
19. முருகவேளின் மயிலின் ஆற்றலைக் குறிப்பது
20. முருகன் கொலு வீற்றிருக்கும் திரு ஓலக்காட்சியின் சிறப்பை எடுத்தியம்புவது
21. வீரவாகுத் தேவரின் வாட்திறம் பற்றிப் பகர்வது
22. சிவகிரி எனப்படும் பழநியம்பதி பற்றிக் கூறுவது
23. திருச்செந்தூர்ச் சிறப்பினை வருணிப்பது
24. திருப் பழநியின் பெருமை பேசுவது
25. பரங்கிரியின் சீர்மை பற்றிக் கூறுவது

இவ்வகையாக வகுப்புகளின் சிறப்புகளை எடுத்துக் கூறுகிறார் உரையாசிரியர். சித்து வகுப்புப் பற்றி திரு அருணை மகான் ஸ்ரீலஸ்ரீ ஈஸ்வர சுவாமிகள் கருணையுடன் அருளிய, "சித்தர் இருவகை. முதலாமவர் மெய்ப் பொருளல்லாத பொய்யுடல், பொன் ஐம்புல சுகம் இவற்றைத் தள்ளி ஜீவசிவ ஐக்கியத்தைப் பெற்று ஆனந்தமயராய்த் திகழ்பவர். இரண்டாமவர் அதனில் மாறுபட்டவர். இவர் கற்பகோடி காலம் உடலுடன் வாழ விரும்பி, காயசித்திபெற்று ரசத்தை வேதித்துத் தாழ்ந்த உலோகங்களைத் தங்கமாக்கி உலகில் சித்தாடல் வேண்டுமென்னும் அவா வுடையவர், எனக்கூறி இந்த ரசவாதத்தில் தங்களை இழந்த பலருக்கு அறிவுபுகட்டவே சித்தி வகுப்புப் பாடினார்" என்ற கருத்தை உரையாசிரியர் முற்றிலும் ஏற்று அதனை அநுபந்தம் (534)

பக்கத்தில் பதிவு செய்திருப்பது அவரது சமூகச் சிந்தனைக்குத் தக்கசான்றாகும்.

*செம்பிராகை :* பிராய் அல்லது பராய் என்னும் மரவகை. இது செம்மை வெண்மை இருவகை. இது முரட்டுமரம். பத்தடிக்கு மேல் வளராது. முண்டு முடிச்சு நிறைந்திருக்கும். பாலுண்டு. இலை சுரசுரப்பாயிருக்கும். குடுக்கைகள் நயம்படுவதற்கு இதனால் தேய்ப்பதுண்டு. பராய் முரடு - பலாய் முரடு ஆயிற்று. இக்குறிப்பின் வழியாக ரசவாதத்திற்குப் பயனாகும் ஒரு தாவர வகைப் பற்றி அறியமுடிகிறது.

*கற்றாழை :* இங்குச் செங்கற்றாழை, தாய்க்கு நிகராஞ்சிவந்த கற்றாழை அங்கம் குளிர்விக்கும்; பாஞ்சயத்தைப் பொன்னாக்கும். இது இரும்பைத் தங்கமாக்கும்.

*அப்பிரகசத்தை :* இது அப்பிரகத்தினின்று மைக்கா பிரித்தெடுக்கப்படும் ரசம். பாஷாணங்கள் அனைத்தினும் ரசம் உண்டு. இலிங்கத்திலிருந்து நன்னாரி வேர்ப் பட்டையால் வாலையில் வைத்துப் பிரித்தெடுக்கப் படுவது லிங்கசத்தை.. இதுதான் வாலைரசம். வீரத்தினின்று இட்டிகைத் தூளால் பிரித்தெடுக்கப் படுவது வீரசத்தை: அப்பிரகத்தினின்று வெள்ளைக் குதிரை மூத்திரத்தால் பிரித்தெடுக்கப்படுவது அப்பிரகசத்தை; ரசவாதத்திற்கு மிகவும் ஏற்றது. இதற்கு ரசப்ரீதி என்ற பெயரும் உண்டு.

*பூநாக செம்பு :* சகலவேதி என்பது பூநாக செம்புக்கு அடைமொழி; நாங்கூழ், பூமிவேர், பூநாகம், நாக்குப் பூச்சி என்பன ஒரு பொருள்; இதனிடம் செம்பு சத்தை உள்ளது. பூநாகத்தை நிரம்பக் கொணர்ந்து புளித்த மோரில் இட்டு வைத்தால் அவற்றின் வயிற்றிலுள்ள மண் வெளிப்பட்டுவிடும். பிறகு அவற்றினின்று பிரித்தெடுக்கப்படுவது பூநாக செம்பு. இது ரசவாதத்திற்கு இன்றியமையாதது. பழைய கௌரிபாஷாண உண்டையை இதனுடன் சேர் என்பதே இவ்வடியின் கருத்து.

இவை போன்ற ரசவாதம் தொடர்பான குறிப்புகளை உரையாசிரியர் ஈண்டு பதிவு செய்துள்ளார். விஷய சிற்றாராய்ச்சி என்ற பகுதியில் 1-18 வகுப்புகளுக்கான பல பொருண்மைகள் குறித்துக் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. அகத்தியர், அகப்பொருள், அரக்கர், அசுரர், அரசர், அருணகிரிநாதர், அரும்பதங்கள், சொற்றொடர்கள், ஆதிசேடன், இந்திரன், உணவு வகைகள், ஐராவதம், கங்கை, கணபதி, கிருஷ்ணலீலை, குபேரன், சிவபிரான், அணிவகை, சூரியன், சேவல், தமிழ், தலங்கள்போன்ற பல செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன.

### கந்தரநுபூதி - பத்தாந் திருமுறை

ஏனைய திருமுறைகளுக்குப் பின் இணைப்புச் சேர்த்தது போன்றே இத்திருமுறைக்கும் இறுதியில் கந்தரநுபூதி ஆராய்ச்சி என்ற பெயரில் பிள்ளையவர்கள் செய்திகளைத் தொகுத்துத் தந்துள்ளார்கள். உரையாசிரியரின் உரைத்திறனுக்கு இதனினும் சிறப்பான பகுதி இருக்கமுடியாது. எவ்வாறெனில் இப்பகுதியில் தான் அந்நூலின் அத்தனைச் சாரமும் சுருக்கமாக விளக்கப் பெற்றுள்ள ஆற்றலைக் காணலாம்.

கந்தபிரான் செய்த உபதேசச் சிறப்பையும் அப்பிரானது திருவருட் பிரசாதத்தின் பெருமையையும் பேசும் நூலாதலின் இந்நூலுக்குக் கந்தரநுபூதி என்னும் பெயர் போந்தது. எனக்கூறிவிட்டு பிறைக்குறியில் (அநுபூதி - திருவிருட் பிரசாத அனுபவ ஞானம்) எனப் பொருளும் தருகிறார் உரையாசிரியர்.

முருகப்பிரான் தடுத்தாட் கொண்டு திருவடி சூட்டி மௌனோபதேசஞ்செய்த பிறகு இந்நூலை ஆசிரியர் இயற்றினார் என்பது உரையாசிரியர்துணிவு. இந்நூல் ஐம்பத்தொரு செய்யுள்கள் கொண்ட அற்புதச் சிறுநூல். ஐம்பத்தொரு செய்யுள்களுக்கு மேற்பட்டனவாய் அச்சிடப்பட்டுள்ள பாடல்கள் அருணகிரியாருடைய திருவாக்கு அல்ல என்பதில் ஐயமில்லை என்ற கருத்தை ஈண்டுக் கூறி, ஐம்பத்தொன்றுக்கு மிகைப்பட்ட பாடல்கள் இடைச் செருகல் என உறுதியுடன் உரையாசிரியர் கருதுகிறார். அதுபற்றி மேலும் கூறும்போது, "ஒரு சாரார் 'பேசா வநுபூதி பிறந்ததுவே' என்னும் 43ஆவது செய்யுளொடு நூல் முடிவு பெறுகின்றது எனவும் கூறுவர்; எனினும் மேற்கொண்ட எட்டுச் செய்யுள்களின் வாக்கும் விசேடமாகவே தோன்றுவதால் இவ்வாராய்ச்சியில் 51 செய்யுள்களைக் கொண்டது இந்நூல் எனக் கொள்ளப்பட்டுள்ளது. இக் கொள்கை 'அநுபூதி ஐம்பதுமே யாருயிர் பேரின்பவநுபூதி நல்கு மணி' என வரும் தணிகையுலாவினாலும் வலியுறுகின்றது" என உரையாசிரியர் உரைப்பதன் மூலம் மூல பாட ஆய்வில் அவரின் சிறப்புறு திறனைக் காணலாம்.

1. பிராத்தனைப்பதிகங்கள் - (1,10,15,21,34,35,41,45,51)
2. தன்குறை கூறித் தன்னெஞ் சழுங்கிக்
   கதியிலி தனக்குங் கதியு ளதோ எனல் (16) - (4, 5, 6, 9, 16, 23, 24, 25, 26, 27, 32, 33, 39, 40, 47, 50)
3. யான் செய்த பிழையென்னோ என நைந்து
   தொழுதிரங்கல் (29, 31)
4. நெஞ்சொடு கிளத்தல் - (7,14,37)

5. வறுமையின் கொடுமை (19)
6. உலகுக்கு உபதேசம் (17)
7. சிவபிரானுக்கு உபதேசம் (36)
8. முருகன் பெருமை (18,48)
9. தான்பெற்ற உபதேசப் பெருமையும் ஆநந்தப் பேறும் (2, 3, 8, 11, 12, 13, 20, 22, 28, 30, 38, 42, 43, 44, 49)

எனப் பொருள்வழிப் பிரித்துப் பாடல்களையும் வகை தொகைப்படுத்திக் காட்டுவதன் மூலம் கற்பவனுக்கு எளிதிற் பொருள் புரிய இம்முறை பெரிதும் துணை செய்கிறது.

இந்நூல் பற்றி உரையாசிரியர் கூறும்போது, நூல் முழுவதையும் நித்திய பாராயணத்துக்கு (மனனத்துக்கு) வைத்துக் கொள்வது மிக விசேடம் என்று ஆன்றோர் கூறுவர். அங்ஙனம் கொள்ள இயலாதார் பின்வரும் ஆறு திருப்பதிகங்களையேனும் நித்திய பாராயணத்துக்கு வைத்துக் கொள்வது உத்தமம் என்கிறார்.

| | | |
|---|---|---|
| திருப்பணிப்பதிகம் | - | ஆடும் பரிவேல் (1) |
| கதிதரு பதிகம் | - | கெடுவாய் மனனே (7) |
| கூற்றொழி பதிகம் | - | கார் மாமிசை (6) |
| பிறவி யொழி பதிகம் | - | மாவேழ் சனனம் (39) |
| அவா அறுபதிகம் | - | கைவாய் (14) |
| குருமூர்த்தப் பதிகம் | - | உருவாய் (51) |

பேசா அநுபூதி கிடைத்தவுடனே இயற்றினது கந்தரநுபூதி யென்றும் திருப்புகழ்ப்பாடி முருகன் திருவருள் பெரிதும் ஊறியூறிப் பேராநந்தம் முதிர்ந்து ததும்பின நிலையிற் பாடினது கந்தரலங்காரம் என்றும் கொள்ளுவதற்கு இடம் ஏற்படுகின்றது. கிளிரூபம் பெற்றபின் திருவகுப்புப் பாடினார் என்பதற்கு அகச்சான்று உளது. கிளி ரூபம் பெற்றபின் இவ்வநுபூதி பாடினார் எனும் கொள்கைக்கு இடம் ஒன்றும் நூலில் ஏற்படவில்லை எனினும் பெரியோர் கொள்கை என உரையாசிரியர் அவர் காலத்திற்கு முன்னே இருந்த அறிஞர் பெருமக்களைச் சான்றாக வைத்துத் துணிகிறார்.

'கந்தரநுபூதி சொன்ன கிளி . . . . நீ பிடிக்க எய்துமோ' என்பது இலஞ்சி முருகன் உலா. (கண்ணி 205) என்ற சான்றைத் தனக்குத் துணையாக வைத்துக் கொண்டு கந்தரநுபூதி பாடப்பெற்ற சூழ்நிலையை உறுதி செய்கிறார் பிள்ளையவர்கள்.

கந்தரலங்காரம் போலவே அநுபூதியும் சுவாமிகள் அப்போதைக்கப்போது தமக்கிருந்த மனநிலைக்கும், பக்தி

நிலைக்கும் ஞான நிலைக்கும் ஒத்தவாறு தனித்தனியாகப் பாடிய பாடல்களின் தொகுதியாமோ இந்நூல் என எண்ணவும் இடம் ஏற்படுகின்றது என்ற கருத்தின் மூலம் கந்தரநுபூதி ஒரு தொகுப்பு நூலாக இருக்கலாம் என ஐயுறுகிறார் உரையாசிரியர்.

மேற்சொன்ன கருத்தை வலியுறுத்தும் படியாகக் கந்தரநுபூதிப் பாக்களை நான்கு நிலைகளில் பரிசீலிக்கிறார் உரையாசிரியர்.

1. அருணகிரியார் சாந்தி பெறாது கலக்க முற்ற நிலையால் பாடினவை (5, 9, 10, 16, 19, 23-27, 29, 31-35, 41, 45, 46, 50)
2. தவங்கிடந்த நிலையிற் பாடினவை (1, 2, 3, 6, 15, 18, 21, 36, 37, 40, 47, 48, 51)
3. பேறு பெற்ற ஞான நிலையிற் பாடினவை (8, 11, 12,13, 20, 22, 28, 30, 38, 42, 44, 49)
4. உபதேசப் பாடல்கள் (நெஞ்சுக்கும் உலகுக்கும் உபதேசம்) (7, 14, 17)

மேலும் திருத்துருத்தி என்னும் தலத்தில் இறைவன் அநுபூதி பாடுக என்று கட்டளை இட்டனர். (திருப்புகழ் 850) இந்தக் கட்டளையின் பின்பு சில பாடல்கள் தம் குறை கூறுவனவாயும், வேண்டுகோள்கள் கொண்டனவாயும் உள்ள காரணத்தால் 'பல குறைபாடுகளுக்கும் ஆளாய் உள்ள நம் போலியர் முருகனைப் போற்றி உய்வதற்கு நித்திய பாராயண நூலாகக் கொள்வதற்கு மிகப் பொருத்தமான நூலாகக் கந்தரநுபூதி திகழ்கின்றது' என்கிறார்.

நூலோ சிறிய அளவினது. ஆனால் பொருளோ மிகமிகச் சிறந்தது. இச்சிறப்பை உணர்ந்தே தாயுமானவர் 'கந்தரநுபூதி சொன்ன எந்தை அருள்நாடி இருக்கு நாள் எந்நாளோ' என்றார். பிறிதொரு பெரியார், அருணகிரியாரின் வாக்கும் அவர் அடைந்து அனுபவித்த அநுபூதியும் முருகவேள் இருக்கும் இடங்களாகக் கூறினர் எனப் பல்வேறு சான்றுகளை எடுத்துக்காட்டியுள்ளார். பல வினா விடைகளை அவரே பொருத்திக் கொண்டு கந்தரநுபூதியின் சிறப்பை உலகு அறிய வேண்டும் என்ற நினைவில் உரையை விசாலமாகக் கட்டுரை போல வரைந்து அதில் முருகவேளைப் பற்றியும் அவன் புகழ்பாடும் அநுபூதி பற்றியும் விவரித்துள்ளார்.

## பதினோராந் திருமுறை

இத்தொகுப்பின் தொடக்கவுரையில்,

"சைவத்திருமுறைகளும் பதினோராந் திருமுறைபோல முருகவேளின் சிறந்த அடியார்கள் பலர் அருளிய பாடல்கள்

இப்பதினோராம் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள. விரிவஞ்சி சிலவற்றின் பகுதிகளே ஆளப்பட்டும், பல விடப்பட்டும், பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முன் இருந்த பெரியோர்களின் பாடல்களொடு நிறுத்தப்பட்டும் - ஒருவாறு தொகுக்கப் பட்டதாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், பின்னரும் வாழ்ந்த பெரியோர்களின் பாடல்கள் உரிய காலத்தில் 11ஆம் திருமுறையின் இரண்டாம் பகுதியாக இணைக்கலாம். குறைகள் பலவற்றையும் எம்பெருமானும், எம்பெருமானுடைய அடியார்களும் பொறுத்தருள வேண்டும்" என்ற கோரிக்கை கலந்த முன்னுரையை வரைந்துள்ளார்.

இப்பதினோராந் திருமுறையின் தொடக்கமாக அமைவது நக்கீரதேவர் இயற்றிய திருமுருகாற்றுப்படை. படைவீடுகளுக்கேற்ப இப்பெரு நூலில் இருந்து வரிகள் தொகுக்கப்பட்டு முறையே திருப்பரங்குன்றம், (1-77) திருச்சீரலைவாய் (77-125) திருவாவினன்குடி (126-176) திருவேரகம் (177-189) குன்றுதோராடல் (190-217) பழமுதிர்ச்சோலை (218-317) எனக் கூறுவதோடு 10 வெண்பாப் பாடல்களுடன் ஒரு தனிப்பாடலையும் இணைத்துப் படைவீட்டுப் பாடல்களாக அமைத்துள்ளார்.

மேலும் குறிப்புரை ஒன்றை இட்டு அதில் நச்சினார்க்கினியர் முதலிய பெரியோர்களின் உரையிருப்பதால் இப்பகுதிக்கான உரையைத் தாம் எழுதவில்லை என அவையடக்கத்துடன் தெரிவித்தாலும் பொது நிலையில் ஒரு சிறப்புறு கருத்துரையை அமைத்துள்ளார்.

திருமுருகாற்றுப்படையை இதுவரை கல்லாதவர்க்கும் கற்க ஆர்வம் உள்ளவர்க்கும் இக் கருத்துரை ஓர் அரிய கையேடு ஆகும். எளிமையான, செறிவான, நல்ல தமிழ்ச் சொற்களைக் கொண்டு இக் கருத்துரையை அமைத்துள்ளார் தணிகைமணி.

> "பேரொளி வாய்ந்தவனும் தம்மை உற்றவரைக் காப்பவனும் செற்றவரை அழிப்பவனும், தேவசேனைக்கு நாயகனும், கடப்பமாலை யணிந்தவனும், காந்தள் மாலையைக் சிரசிற் சூடினவனும் ஆகிய செவ்வேற் சேயின் சேவடியைச் சிந்திக்கும் செவ்விய உள்ளத்துடன் செல்லும் செலவை நீ விரும்பினால் உன் நெஞ்சத்தில் விழைந்த இனிய வீடுபேறு என்னும் கதியைத் தப்பாமல் இப்பொழுதே பெறுவை; அங்ஙனம் நீ வீடு பேற்றைப் பெறுதற்கு அச்சேய் யாண்டுறையும் என்னிற் கூறுகிறேன் : அச்சேய் மதுரை மாநகர்க்கு மேற்கிலுள்ள திருப்பரங்குன்றத்தில் அமர்ந்துறைதலு முண்டு.

> அதுவன்றிச் சீரலைவாய்ச் சேரலாம். திருச்செந்தூரில் நிலை நிறுத்தலும் உண்டு. அதுவன்றித் திருவாவினங்குடி (பழநி)யில் வீற்றிருத்தலுமுண்டு; அதுவன்றித் திருவேரகம் (சுவாமிமலை). சுவாமிமலை என்னும் தலத்தில் உறைதலும் உண்டு. அதுவன்றிக் குன்றுகளிலெல்லாம் நின்று விளையாடுதலும் உண்டு"

எனத் திருமுகாற்றுப்படையின் செய்தியை நயமாக விதந்து சொல்லும்போது அவர் நடையில் சிக்கலில்லாத தெளிந்த அறிவின் வீச்சைக் காண முடிவதோடு, சாதாரணப் படிப்புடையோரும் புரிந்து கொள்ளும் படியாக எழுதும் ஆற்றல் உள்ளவர் என்பதையும் அறிய முடிகிறது.

அடுத்தபடியாக அமையும் பரிபாடல் தொகுப்பில் "பரிபாடல் 5, 8, 9, 14, 17, 18, 19, 21 எண்ணுள்ள பாடல்கள் செவ்வேளுக்குரியன. தோத்திரப் பாசுரங்கள் மாத்திரமே இங்குக் குறிக்கப்பட்டுள்ளன. 'முழுப்பாடல்களைப் பரிபாடல் நூலில் காண்க' என ஒரு குறிப்பினை நல்குகிறார்.

கடுவனிள வெயினனார், ஆசிரியர் நல்லந்துவனார், குன்றம் பூதனார். கேசவனார், நல்லழிசியார், குன்றம் பூதனார், நப்பண்ணனார், நல்லச்சுதனார் ஆகியோர் தம் பாடல்கள் இங்கு அமைகின்றன.

ஈண்டுக் காணப்படும் சுருக்கவுரை சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் தன்மையானதாய் அமைந்துள்ளது. பெரியோரைத் துணைக்கோடல் அறிவுடையார் பண்பாடு. அவ்வகையில் குறளுக்கு உரைகண்ட பரிமேலழகரின் உரைநடையைத் தழுவி, இப்பரிபாடலுக்கு, உரை கண்டுள்ளார் செங்கல்வராய பிள்ளை.

சந்திபுணர்ந்து நெடிது நெடிதாய்ச் செல்லும் பெருந்தொடர்களை இவர் உரைநடையில் காணமுடியாது. படிப்போர்க்கு அயர்வினைத் தராது, ஆழ்ந்து படிக்கத் தூண்டும் வண்ணம் அமைந்த ஆற்றொழுக்கான நடை என்பதனை உணரலாம். இதற்கான ஓர் எடுத்துக் காட்டினைக் காண்போம்.

> "புரியுறு நரம்பும் இயலும் புணர்ந்து
> சுருதியும் பூவும் சுடரும் கூடி
> எரியுரு அகிலோ டாரமுங் கமழும்
> செருவேற் றானைச் செல்வநின் னடியுறை
> உரிதினி துறைபதிச் சேர்ந்தாங்கு
> பிரியா திருக்களஞ் சுற்றமோடுடனே" (51-56)

என்ற குன்றம்பூதனார் பாட்டுக்கு, "செருவேற் றானைச் செல்வ! நின் பூசைக்கண் புரிதலுற்ற நரம்பினது ஒலியும், புலவர் பாடிய இயற் பாட்டுக்களும் பொருந்தி வேத ஒலியும், உபசாரமாகிய பூவும் தீபமும் கூடி எரியின்கண் உருகும் அகிலும், சந்தனமும் தூபமாய்க் கமழா நிற்கும் நின் அடியின்கண் உறைதலை எமக்கு உரித்தாகுக. உறையும் பதியைச் சேர்ந்தாற்போல எம் சுற்றத்தோடு கூடியாம் பிரியாதிருப்பேமாக" என்றுரைத்துள்ளார்.

செருவேற்றான், நின் அடியின் கண் உறைதல், எரியின்கண் உருகும் அகிலும் சந்தனமும் போன்ற பாடல் வரிகள் சிதையாமல் சீர்மையோடு உரையாக்கம் செய்துள்ள பிள்ளையவர்கள் நுண்மாண்நுழைபுலத்திறன் எண்ணற்பாலது.

அடுத்துக் குறுந்தொகையில் இருந்து 'தாமரை புரையுங்காமர் சேவடி' என்ற பாடல் இடம்பெறுகிறது. அதற்கு உ.வே.சாமிநாதையர் உரையையே எடுத்தாண்டிருப்பது தணிகைமணி தமிழ் மூதறிஞர் இடத்துக்கொண்டுள்ள பற்றினைச் செவ்விதின் விளங்கும்.

கல்லாடம் அடுத்து இடம் பெறுகிறது. இதற்கு ஆசிரியர் சுருக்க உரையே நவின்றுள்ளார்.

**'ஓமெனும் எழுத்திற் பிரமம் பேசிய**
**நான்மறை விழியை நடுங்கு சிறை வைத்துப்**
**படைப்பு முதல் மாய வான் முதற் கூடித்**
**தாதையும் இரப்பத் தளையது விடுத்தோய்."**

என்ற (43-46) வரிகளுக்கு உரை செய்யும் போது,

(பிரமம்பேசிய) பிரமமாகப் பேசிய (நான்மறை) விதியை நான்கு மறையினை உடைய பிரமனை ஓமென்னும் எழுத்தினால் (நடுங்கு சிறை) நடுங்குகின்ற அரிய சிறையில் வைத்து, படைத்தல் முதலிய தொழில்கள் (மாய) நடவாமையாலே, (கூடி) அவை நடக்கும்படி (பிரமனைக் கூடும்படி) (வான்முதல்) தேவர்கூறும் (தாதையும்) சிவனும் (இரப்ப) வேண்டத், தளையது (விடுத்தோய்) எனப் பதவுரை செய்கிறார்.

மூலத்தைப் பிறைக்குறியிட்டும் அதற்கான பொருளை உடன் கூறியும் அப்படிச் செய்யும்போது எழுதப்பட்ட விளக்கத்தை உணரும் ஆர்வலர்க்கும் பண்டிதற்கும் கலக்கமோ மயக்கமோ ஏற்படாதவாறு தெளிவாகக் கருத்தை உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தரும் ஆற்றல் இவருக்கு உள்ளதைக் காணலாம்.

சிலப்பதிகாரம் தொடங்கிப் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை உள்ள பல நூல்களில் உள்ள முருகன் தொடர்பான பாடல்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. குறிப்பாகத் தொல்காப்பியர் (செய்யுள் - உரை), திருமந்திரம், திருவிசைப்பா, யாப்பருங்கல விருத்தி, கந்தபுராணம், உபதேச காண்டம், திருப்பரங்கிரிப்புராணம், திருச்செந்தூர்த் தலபுராணம், பழநித்தலபுராணம், திருத்தணிகைப் புராணம், திருவேரகப் புராணம், சேக்கிழார் புராணம், கந்தர் கலிவெண்பா போன்ற நூல்கள் ஆகும்.

இங்குக் குறிக்கப்பட்ட நூல்கள் அனைத்திற்குமே பல்வேறு அறிஞர்களால் உரைசெய்யப்பட்டுள்ளமையின் ஈண்டு இதற்கான உரை செய்யப்படவில்லை என அவரே குறிப்பிடுகிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறாகப் பதினோராந் திருமுறையைத் தொகுக்கும் முயற்சியில் பிள்ளையவர்கள் ஈடுபட்டபோது வெற்றிக்கு எவ்வகையான உரை பெரிதும் பொருந்தும் என்பதை உணர்ந்து, கருத்துரை, சுருக்கவுரை, பதவுரை என அவர் உரை அமைத்துள்ள பாங்கினைக் கண்டோம்.

## பன்னிரண்டாம் திருமுறை

“முருகவேளின் பன்னிரண்டாம் திருமுறை - சிவபிரானுக்குரிய 12ஆம் திருமுறையிற் போல முருகன் அடியார் சரித்திரங்களைக் கூறும். அது சேய்த் தொண்டர் புராணம் என்னும் பெயருடன் வரகவி தேனூர் சொக்கலிங்கம் பிள்ளை இயற்றினது. 2708 பாடல்களைக் கொண்டது. அந்நூல் இப்போது அச்சிடப் படாமல், அந்த அந்த அடியார்களின் சுருக்க வரலாறு, அந்நூலுக்கு ஆதாரமாயிருந்த பழைய தமிழ்நூற் பாடல்களுடன் உரைநடை உருவாக வெளிவருகின்றது. பதினோராம் திருமுறையிற் கூறியதுபோலப் பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முன் இருந்த 41 அடியார்களைப் பற்றிய குறிப்பு மாத்திரம் இத்திருமுறையிற் காண்பதாகும் (ப.881) என்ற முன்னுரை குறிப்பு மூலம் பன்னிரண்டாம் திருமுறையின் அமைப்பு பற்றித் தெளிவு படுத்துகிறார் உரையாசிரியர்.

இப்பகுதியில் 41 அடியவர்கள் வாழ்க்கைக் குறிப்புகள் இடம் பெறுகின்றன. அவர்கள் முறையே 1) செந்தில் வாழ் அந்தணர், 2) அகத்தியர், 3) முசுகுந்தர் 4) நாகனார், 5) நக்கீரர், 6) நல்லியக் கோடன், 7) பரிபாடல் ஆசிரியர்களான:-(1) கடுவன் இளஎயினனார், (2) ஆசிரியன் நல்லந்துவனார் (3) குன்றம் பூதனார் (4) கேசவனார் (5) நல்லழிசியார், (6) நப்பண்ணனார் (7)

நல்லச்சுதனார் (8) கல்லாட நூலாசிரியர் (9) ஔவையார், (10) சேந்தனார், (11) கச்சியப்ப சிவாச்சாரியர் (12) கோனேரியப்பர் (13) முருகம்மையார் (14) பொய்யா மொழியார் (15) அருணகிரியார் (16) ஞானவரோதயர் (17) நிரம்ப அழகிய தேசிகர் (18) சேறைக் கவிராசபிள்ளை (19) குமரகுருபரர் (20) சிவப்பிரகாச சுவாமிகள் (21) திருஞான சம்பந்த தேசிகர் (22) சம்பந்த சரணாலய சுவாமிகள் (23) மார்க்க சகாயர் (24) குணசீலர் (25) அந்தகக் கவிவீரராகவ முதலியார் (26) சிதம்பர சுவாமிகள் (27) சிற்றம்பல நாடிகள் (28) வென்றிமாலைக்கவிராயர் (29) பகழிக் கூத்தர் (30) பாலசுப்பிரமணியக் கவிராயர் (31) விசயகிரி சின்னோவையர் (32) வேதாந்த சுப்பிரமணிய முனிவர் (39) மேலகரம் பண்டாரக் கவிராயர் (34) வைத்தியநாத தேசிகர் (35) சாமிநாத தேசிகர் (36) சிவஞான தேசிகர் (37) கச்சியப்ப முனிவர் (38) தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் (39) காஞ்சி சிதம்பர முனிவர் (40) செங்கோடை கவிராஜப் பண்டாரத்தையா (41) கந்தப்ப தேசிகர்.

## சிறப்புறு பாடல்

### முப்பால் செப்பிய கவிதையின் மிக்காரத்தினை (156)

எழுந்த இடர்கள் நீங்கும்படி - அறம், பொருள் இன்பம் என்னும் முப்பால் கூறும் திருக்குறளினும் மேலாகிய தேவாரம் என உரை கூறுகிறார் பிள்ளையவர்கள்.

உரையாசிரியர் வாழ்ந்த காலம் தமிழ் இலக்கியங்கள் கற்றுணர்ந்த தமிழறிஞர் பலர், பகுத்தறிவுப் பாசறையின் கடவுள் மறுப்புக் கொள்கையில் ஈடுபாடு கொண்டு, திருக்குறளை இலக்கியத்தில் சிறந்த நூலாக முதன்மைப்படுத்திப் பேசிவந்த காலம்.

அருணகிரியார் ஆன்மீகத்தில் திளைத்த காரணத்தாலும், சம்பந்தரை முருகனின் கூறு எனக் கருதியதாலும் சம்பந்தரின் பாடல் திருக்குறளையும் விஞ்சியதாகக் கூறினார். உரையாசிரியர் தான் வாழும் காலத்திய நிகழ்வுகளை மனத்திற்கொண்டு அருணகிரியின் வாக்கைத் தனக்குச் சாதகமாக ஏற்று உரை வரைந்துள்ளார்.

சம்பந்தர் முருகன் கூறு என்பது அருணகிரியார் கொள்கை. கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தருக்கும் இதுவே கொள்கை (தக்-பரணி 169-221) எனும் சான்றுகளைக் கொண்டு சம்பந்தர் இறை அம்சம் உடையவர் எனத் துணிந்து அவர் பாடிய தேவாரம் குறளினும் புனிதமானது என மொழிவதைக் காணலாம்.

### கமலக் கணையாலே (19)

அகப்பொருள் பொருண்மையில் நற்றாய் இரங்கலாய் அமைந்த இப்பாடலில் 'கணை' என்பதற்கு விளக்கம் கூற வந்த உரையாசிரியர் இவ்வாறு எடுத்துரைக்கிறார்.

தாமரைப்பூ - காமன் ஐங்கணைகளுள் ஒன்று. ஐங்கணைகள் - தாமரைப்பூ, மாம்பூ, அசோகம் பூ, முல்லைப்பூ, நீலோற்பலப்பூ, இவ்வைம் பூக்களின் செயல் பற்றிக் கூறும்போது, தாமரை - நினைப்பூட்டும்; மாம்பூ - பசலை நிறம் தரும்; அசோகு - உணர்வை நீக்கும்; முல்லை - கிடைகாட்டும் (படுக்கச்செய்யும்) நீலம் - கொல்லும்.

**அமரர் வானவர் வாடிடு தேவர்கள் (170)**

ஈண்டு அமரர் என்ற சொல்லுக்கு உரையாசிரியர் தரும் விளக்கம் அவர்தம் நுண்மாண்நுழைபுலத்தைக் காட்டும்.

அமரர் - வானவர், தேவர், வானவர் அமரர் தேவர்தம் பொதுப்பெயர். எனினும் மூவரும் வெவ்வேறு வகையினர் போலும். அமுதம் உண்டு இறத்தலைக் கடந்தவரை அமரர் எனவும் வானில் உறைபவரை வானவர் எனவும் தேவர் என்பார் அஷ்டவசுக்கள் துவாதச ஆதித்தர், ஏகாதச ருத்திரர்அச்சுவினிகள் (2) ஆக முப்பத்து முத்தேவர் எனக் கருத இடமுண்டு எனக் குறிப்பு வரைகிறார்.

**பாலைக் கற்பகம் (377)**

பாலைநிலம் என்பது நீண்டு அகன்ற மணல்வெளி. நீரும் நிழலும் இல்லாத சுரமும் சுரம்சார்ந்த இடமும் ஆகும், அத்தகைய இடத்தில் குளிர்ந்த நிழல் நீர் முதலியன யாவும் தரும் கற்பகவிருட்சம் போல, முருகனே நீ நற்பால் (நல்லகுணம்) பெற்றவர் முன்பு தோன்றி உதவுவாய்:

> **அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்**
> **நிழல்மரம் போல் நேரொப்பத் தாங்கிப் – பழுமரம்போல்**
> **பல்லார் பயன் துய்ப்பத்தான் வருந்தி வாழ்வதே**
> **நல்லாண் மகற்குக் கடன்' *(202)***

என்னும் நாலடியாரும் 'நிழலின் நீளிடைத் தனிமரம் போல . . . . இரவலர்க் கீயும் வள்ளியோன்' என்னும் புறநானூற்று (119) அடியும் 'அருஞ் சுரத்தின் மரம்போல அடைந்தார்க் களித்தல் அவற்கியல்பு' எனவரும் நச்சினார்க்கினியர் உரையும், (சிந்தாமணி கடவுள் வாழ்த்து 3 ஆம் பாடல் உரை) முருகன் பாலைக் கற்பகம் என்றதின் பொருளை நன்கு விளக்கும். குறிப்பு: இந்தத் திருப்புகழால் முதலிற், பிழையுள்ள நெறியில் இருந்தாலும் பின்னர் அப்பிழையை உணர்ந்து அடியார் கூட்டத்தில் இணங்கி நல்லநெறியைக் கைப்பற்றினவர்க்கு முருகன் பாலை நிலத்திற் காணும் கற்பக விருட்சம்போல நல்லருள் புரிவார் என்னும் பேருண்மையைத் தமது அநுபவத்தினின்றே அருணகிரியார் விளக்குகின்றார். நன்னெறி காணாது தவிக்கும் நமக்கு இப்பாடல் நல்லறிவு ஊட்டும் அருமை பாடலாகின்றது.

## அடிக்குறிப்பும் தத்துவார்த்தச் சொல் விளக்கங்களும்

அடிக்குறிப்பு எழுதும்போது நூலைப் படிப்போர்க்குச் சமயஞ்சார்ந்த சொற்களில் ஐயப்பாடு எழக்கூடும் என்பதை மனத்திற் கொண்டு, உரையாசிரியர் என்ற முறையில் அவ்வகை ஐயங்களைப் போக்கவேண்டிய கடப்பாடு தனக்குள்ளதாக் கருதி உரையாசிரியர்கள் அருஞ்சொல் சமயம் சார்ந்து வருமிடத்து, அவற்றை விளக்குவது மரபு. பிள்ளையவர்களும் செவ்வேள் திருமுறையில் அவ்வகையான இடர்பாடு, நூலைப் படிப்போர்க்கு ஏற்பட்டுவிடக் கூடாது என்பதனை உணர்ந்து, சமயஞ் சார்ந்த சொற்களுக்கு விளக்கமாகவும் எளிமையாகவும் உரைவரைந்து சொல்லிச் செல்கிற பாங்கு படித்து இன்புறத்தக்கது. அவ்வகையில் ஒருசில எடுத்துக்காட்டுகளை ஈண்டுக் காணலாம்.

**உலகாயர் (174) :** இவர் சார்வாக மதத்தினர். சார்வாகம் சாட்சியே அளவை யாவதென்றும், நிலம், நீர், தீ, வெளி எனப் பூதம் நான்கே என்றும் அவற்றின் சேர்க்கையால் தோன்றிப் பிரிவதாய் (மாய்வதாய்) அறிவு ஆன்மா என்றும், கடவுள் இல்லை என்றும், இன்பமும் பொருளுமே புருஷார்த்தங்க ளென்றும் சொல்லும் உலோகாயுதமதம் சார்ந்தவர் எனக் கூறுவது காணலாம்.

**பதினொரு ருத்திராதிகள் (169) :** மலிதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலிலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன் பவோற்பவன், கபாலி, சௌமியன் என விளக்கம் வரைந்துள்ளதன் மூலம் ருத்திரன் என்பதற்குச் சிவபெருமானின் ஓர் அம்சம் எனப்பொருள் தராது, ருத்திரன் என்பதற்குரிய எண்ணிக்கையோடு பெயர்களையும் இணைத்து, படிப்போர்க்குத் தெளிவு ஏற்படுத்தியுள்ள பிள்ளையவர்களின் உரைத்திறன் போற்றுதற் குரியது.

**தத்துவங்கள் (157) :** தத்துவங்கள் 96. 1. மூலப்பெயர்கள் 36, அகத்தத்துவம் 24, சுத்த சுத்த தத்துவம் 7, சுத்த தத்துவம் 5. புறநிலைக்கருவி 60 - பிருதிவியின் கூறு 5; அப்புவின் கூறு 5; தேயுவின் கூறு 5; வாயுவின் கூறு 5; ஆகாயத்தின் கூறு 5; வாயு -10 (தசவாயு); நாடி 10; வாசனாதி 5; வாக்கு 4; குணம் 3; அகங்காரத் திரயம் (அல்லது ரமணத்திரயம்) 3

பின்னும் உண்ணிலைக் கருவிகள் 36 (ஆத்ம தத்துவம் 24 வித்தியாதத்துவம் 7, சிவ தத்துவம் 5)

புறநிலைக் கருவிகள் 60: பூத காரியம் 25, நாடி 10, வாசனாதி, 10 வாக்கு 4, குணம் 3; அகங்காரம் 3, அவத்தை 5 எனவும் கூறுவர். 'தத்துவம்' என்று சொன்னால் யாவர்க்கும் புரிய வேண்டும் என்பதைக் கருத்திற்கொண்டு எவ்வாறெல்லாம் தத்துவம் பட்டியல்

இடப்படுகிறது என்பது விளங்க இங்கே இரண்டு வகையான பட்டியலைத் தந்து பிள்ளையவர்கள் விளக்கம் அளித்திருப்பது தமிழறிஞர்களுக்கும் ஆர்வலர்களுக்கும் பயன்படும் குறிப்பு என்றால் மிகையாகாது.

**லோகங்கள் : (1578)** பூலோகம், புவலோகம்; சுவலோகம்; சனலோகம்; தபோலோகம்; மகாலோகம்; சத்யலோகம்: இவை மேலேழ் உலகங்கள். ஆதலம், விதலம், சுதலம், தராலம், மகாதலம் இரசாதலம், பாதாளம் இவை கீழேழ் உலகங்கள்.

உலகங்கள் என்ற சொல்லுக்கு மேலும் கீழும் விரிந்து பறந்து கிடக்கும் பதினான்கு உலகங்களின் பெயரைப் பட்டியலிட்டு, தெளிவுபடுத்தியுள்ள அருமை பிள்ளையவர்கள் தாம் மேற்கொண்ட உரைப்பணியில் கொண்டுள்ள ஈடுபாட்டைக் காட்டும்.

**சரவண பவா (148)** பழநிமலை - சரவணபவ என்னும் ஆறெழுத்து ஒன்றும் மலை. அஃதாவது பழநிமலை சடாக்ஷர மலையாம். ஆதலினன்றோ 'சிவமயமாம் நின் பழநி' எனத் திருப்புகழிலும் (156) படிக்கின்றிலை பழநித் திருநாமம்' எனக் கந்தரலங்காரத்திலும் சுவாமிகள் பாராட்டியுள்ளார். சடாக்ஷரத்தை ஓதும் பலன் பழநித் திருநாமத்தை ஓதுவதால் கிட்டும் என்க.

ஈண்டு 'சரவணபவ' என்ற ஆறு எழுத்து மந்திரம் முருகனுக்கு உரியது. அதனினும் அது பழநிமலைக்கு உரியது. ஆகவே, தான் பழநியைக் கண்டுவந்தால் ஆறெழுத்து மந்திரத்தை ஓதிய பயன் கிட்டும் எனக் குறிப்பு வரைகிறார் பிள்ளையவர்கள்.

**ஓகார பரியின் மிசை வருவாயே (145) :** ஓகாரம் குறி அறிதற்கு அரியனவாம். பஞ்ச பட்சிகளின் எழுத்துகளுள் ஓகாரம் மயிலைக் குறிக்கும். அ-ஆ; இ-ஈ, உ-ஊ; எ-ஏ; ஒ-ஓ என்ற எழுத்துகளால் முறையே குறிப்பிடப்படுவன வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் என்ற ஐந்து புட்கள்.

பஞ்சபட்சி சாத்திரம் (ஐம்பறவை ஆருடம்) என்பது காலங்காலமாக இத் தமிழகத்தில் பழக்கத்தில் உள்ள ஆருடமுறை. அகத்தியர், போகர், காகபுசண்டர் போன்ற சித்தர் பெருமக்கள் இப்பறவைகளின் வாழ்வியல் கூறுகளை ஆய்ந்து அவற்றின் இயல்புகளை மனிதனோடு தொடர்புபடுத்தி ஆய்வு செய்து பல அரிய உண்மைகளைக் கண்டுள்ளனர். தமிழகத்துப் புட்களையே இதற்கான ஆதாரமாக எடுத்துக்கொண்டு ஆய்வு செய்திருப்பது குறிப்பிடத்தக்கது. முருகவழிபாடு எத்தனை தொன்மை வாய்ந்ததோ அத்தனை பழமையானது மயிலைப் போற்றுவது. முருகனின்

ஊர்தியாக வருணிக்கப்படும் இப்பறவை தமிழ் இலக்கியம், தமிழகத் தொன்மம், தமிழர் வழிபாடு ஆகியவற்றில் குறிப்பிடத் தகுந்த இடத்தைப் பெற்றுள்ளது. உயிர் எழுத்துகள் பன்னிரண்டில், ஐ-ஔ நீங்கலாக ஏனைய 10 எழுத்துகளைப் பறவைக்கு இரண்டு எழுத்துகள் வீதம் தீர்வு செய்து, நாள், கிழமை, நட்சத்திரம், திதி இவற்றோடு கொண்டு கூட்டி, ஓர் காரியம் செய்ய முனைவோர் அவர்தம் பெயரின் முதல் எழுத்தில் உள்ள உயிர் எழுத்தின் தன்மைக்கேற்ப எத்தருணம் வெற்றியை நல்கும் என்பதனை அறிந்து செயல்பட வேண்டும் என்பதுதான் இப்பஞ்சபட்சி சாத்திரம் (ஐம்பறவை ஆருடம்).

**அறுசமய நீதி** : சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணாபத்தியம் கௌமாரம் என்பன ஆறுசமயங்கள். சைவம் சிவனைப் பர தெய்வமாகக் கொள்ளும்; வைணவம் திருமாலைப் பரம்பொருளாகக் கொள்ளும்; சாக்தம் சக்தியைப் பர தெய்வமாகக் (தேவதையாக) கொள்ளும்; சௌரம் சூரியனை வழிபடும்சமயம்; காணாபத்யம் கணபதியை முதற்கடவுளாக வழிபடும் சமயம்; கௌமாரம் முருகக் கடவுளைப் பரதெய்வமாக வழிபடும் சமயம்.

**சிகர முற்றின் புகழ்ச்சியமுதத்தின் புலவோனே (262):**

சிகரம் : உயர்ச்சி : ஸ்தூல பஞ்சாக்ஷரம் - நமசிவாய
சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் - சிவாயநம
காரண பஞ்சாக்ஷரம் - சிவாயசிவ
மகா பஞ்சாக்ஷரம் - சிவமஹாநுபவ

சிவாய நம என்பதில் 'சி' காரம் சிவத்தையும், வகாரம் அருட்சத்தியையும், யகாரம் ஆன்மாவையும், நகாரம் திரோதானத்தையும் மகாரம் ஆணவமலத்தையும் உணர்த்துவனவாம். பிறிதொரு விளக்கமும் தருகிறார் உரையாசிரியர். அது வருமாறு: சிகர வகாரங்கள் பதியையும், யகாரம் பசுவையும் நகார மகாரங்கள் பாசத்தையும் விளக்கு வனவாம். இதனால்தான் 'சிகாரம்' அருந்த வாழ்வது சிவஞானம் என்றார் (504-658)

**கலைகொடு பவுத்தர் காமகருமிகள் துருக்கர் மாய கபிலர் (174)**

மாயா வாதத்தினர் - பிரபஞ்சம் யாவும் மாயையே யென்று கூறும் கொள்கையர் (உதாரணம் அத்வைதம்)

கபிலர் - கபிலரால் தாபிக்கப்பட்ட சாங்கிய மதத்தினர்

சாங்கிய மதம் - தத்துவங்கள் இருபத்தைந்து எனக் கணக்கிடுவதான ஒரு சமயம்.

பிறிதொரு பாடலான 170ஆம் பாடல் உரையையும் இத்துடன் இணைத்துக் காண்பது பொருந்தும். அதுவருமாறு

வாமம் - அனைத்துலகும் சத்தியின் பரிணாமமே என்றும் சத்தியுடன் லயித்தலே முத்தியென்றும் கூறும் மதம்.

பைரவம் - சைவ சமயவகைகளுள் ஒன்று. பைரவர் அவ்வகையை மேற்கொண்டவர். வாமமும் பைரவமும் உட் சமயம் ஆறினுட் சேர்ந்தவை. அவைதாம் - பைரவம், வாமம், காளாமுகம், மாவிரம், பாசுபதம், சைவம் இதனை அகச் சமயம் ஆறு என்பர்.

அதுபோல புறச்சமயங்கள் ஆறு உண்டு ; உலோகாயுதம், புத்தம், சமணம், மீமாஞ்சை. பாஞ்ச ராத்திரம், பாட்டா சாரியம் என்பன அவை.

**அமை யுமை டாகினி திரிபுரை நாரணி**
**அழகிய மாதருள் புதல்வனே (263)**

என்ற வரிகளுக்குப் பொருள் வரையும்போது, அம்மை, உமை, வாகினி, திரிபுரை (திரிபுரத்தை எரித்தவள்) நாரணி - அழகியமாது (பார்வதி) அருளிய புதல்வனே எனப் பொருள் எழுதிவிட்டு அடிக்குறிப்பில் டாகினி என்ற சொல்லுக்கு விளக்கம் தரும்போது,

டாகினி, காகினி, லாகினி, ஹாகினி, ராகினி, சாகினி, என்பன தேவியைக் குறிக்கும். சுவாதிஷ்டானத்தில் அமர்ந்திருப்பவள் காகினி; (திருமேனி பொன்னிறம்) மூலாதாரத்தில் அமர்ந்திருப்பவள் சாகினி (திருமேனி கரிய நிறம்) ஆக்ஞை ஆதாரத்தில் இருப்பவள் ஹாகினி (திருமேனி வெண்ணிறம்) அனாகதத்தில் ராகினி (பசுமை நிறம்), திரிபுரை மும் மூர்த்திகளுக்கும் மூத்தவள், மூன்று நாடிகளிலும் இருப்பவள் எனப் பலவாறு பொருள் கொள்வர். (அபிராமி அந்தாதி, வித்துவான், பிரம்மஸ்ரீ கி.வா. ஜகந்நாத ஐயரவர்கள் உரை 5,17 பார்க்க) எனத் தன் உரைக்குத் துணை கோடிய நூலையும் குறித்துள்ளார். ஈண்டு தேவிக்குள்ள பெயர்களை உடலிற் காணப்படும் ஆறு ஆதாரங்களுடன் ஒப்பிட்டுக் காட்டி அவ் விறைவியர்க்குள்ள சிறப்பினை எடுத்துக்காட்டியுள்ளார்.

**பாதார மேனி நினைத்து**
**நாலாறு நாலு பற்று வகையான**
**. . . . . . . . . . . . . . . . . .**
**நீடார் ஷடாதரத்தின் (220)**

என்ற வரிகளையுடைய 220 ஆம் பாடலுக்கு அடிக்குறிப்புத் தரும்போதும் பாடலைப் படிப்போர்க்கு மயக்கம் ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காக இதில் அடங்கியுள்ள தத்துவப் பொருளை எளிய நடையில் கூறியுள்ளதைக் காணலாம்.

பாதாரம் - பாதவிந்தம் (இடைக்குறை)
நாலாறு நாலு பற்று வகையான - (28 சிவாகமங்கள்)
நாலாறும் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்கள் பொருந்திய
ஷடாதரம் - மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம் அனாதகம், விசுத்தி, ஆக்ஞை எனப்படும் ஆறு ஆதாரம்.

ஆறு ஆதாரம் பற்றி மேலும் விளக்கும்போதும் இவ்வாறு எழுதுகிறார். குயத்துக்கும் குதத்துக்கும் மத்தியில் நான்கிதழ்த் தாமரை போலுள்ள சக்கரம் - மூலாதாரம்; மூலாதாரத்திற்கும் நாபிக்கும் இடையே ஆறிதழ்த் தாமரை வடிவாயுள்ள தானம் சுவாதிட்டானம்; நாபி பிரவேசத்தில் சுவாதிட்டானத்தின் மேலாகப் பத்திதழ்த் தாமரை வடிவிலுள்ள தானம் மணிபூரகம், இருதயஸ்தானத்தில் பன்னிரண்டு இதழ்த் தாமரை வடிவுள்ளது அனாதகம்; அடி நாவின் தானத்தில் பதினாறு இதழ்த் தாமரை வடிவினது விசுத்தி; புருவமத்தியில் இரண்டு இதழ்த் தாமரை வடிவினது ஆஞ்ஞை. துவாத சாந்தம் என்பது உச்சிக்குமேல் பன்னிரண்டு அங்குலத்தில் உள்ளதாகக் கருதப்படும் யோக ஸ்தானம். பிரம்ம தந்திரம் என்பது உச்சித்துவாரம்.

மேலும் ஒரு பட்டியல் தருகிறார். அதுவருமாறு:

| **ஆதாரம்** | **ஆதாரத்தலம்** | **ஆதாரக்கடவுள்** |
|---|---|---|
| மூலாதாரம் | திருவாரூர் (தியாகேசர் தலம்) | விநாயகர் |
| சுவாதிட்டானம் | திருவானைக்கா (ஜம்புநாதர் தலம்) | பிரமன் |
| மணிபூரகம் | அண்ணாமலை (அருணாசலேசர் தலம்) | திருமால் |
| அனாகதம் | சிதம்பரம் (சபாபதி தலம்) | ருத்திரன் |
| விசுத்தி | காளத்தி (காளத்தீசர் தலம்) | மகேசுரன் |
| ஆஞ்ஞை | காசி (காசிவிசுவேசர் தலம்) | சதாசிவன் |
| பிரமந்திரம் | கைலை (துவாதிகள் தலம்) | மதுரை |

**வித்தக ஞானி சத்திநி பாதா (349)**

சத்திநி பாதமானது - (பக்குவமுடைய ஆன்மாவிலே திருவருள் பதிகை) "புண்ணிய பாவம் துணை யொத்த ஆன்மாக்களைத் திரோதான சத்தி நிக்கிரகமும் அநுக்கிரக சத்தி பதிதலுமாம்.

சத்திநி பாதம் நாலு பிரகாரமாயிருக்கும். முதற் சந்திநி பாதமாகிய மந்தம் வாழைத் தண்டிலே நெருப்புப் பற்றினாற் போலென அறிக. இரண்டாம் சத்திநி பாத மாகிய மந்தரம் பச்சை விறகிலே நெருப்புப் பற்றினாற் போலென அறிக. மூன்றாம் சத்திநி பாதமாகிய தீவரம் உலர்ந்த விறகிலே நெருப்புப் பற்றினாற் போலென அறிக. நாலாம் சத்திநி பாதமாகிய தீவரதரம் கரியிலே நெருப்புப் பற்றினால் போலென அறிக.

முதற் சத்திநி பாதமாவது நமக்கு வேறாயுள்ள தொரு கர்த்தா உண்டென்று அறிவெழுந் திருக்கை. இரண்டாஞ் சத்திநி பாதமாவது அந்தக் கர்த்தாவைப் பெறுகைக்கு வழி எப்படி என்று ஆராய்கை. மூன்றாஞ் சத்திநிபாதமாவது அப்படி ஆராய்ந்தறிந்த கர்த்தாவைப் பெற வேணுமென்று பிரபஞ்சத்தை உவர்த்தும் புளியம்பழமும் அதன் தோடும் போல நிற்றல். நான்காம் சத்திநி பாதமாவது பிரபஞ்சத்தை முற்றத் துறந்து ஆசாரியனே பொருளென்று கொண்டு தாறை நின்று வழிபடுகை. கர்த்தா ஆசாரிய மூர்த்தமாக வந்து இரட்சிக்கும் இடத்துக் கேவலாவத்தையும் சகலவத்தையும் நீக்கிச் சுத்தா வத்தையிலே நிறுத்துவன் என்ற சிவப்பிரகாச உரை சூ (204).

இவ்வாறாக, தத்துவச் சொற்களுக்கு ஆன்றோர்கள் காட்டிய பொருள் விளக்கங்களைத் தக்கவிடத்தில் பொருத்தித் தன்னுடைய உரைத்திறனை வெளிப்படுத்துகிறார்.

## வரலாற்றுக் குறிப்புகள்

உரையாசிரியர் ஆங்காங்கு, திருப்புகழுக்குத் தொடர்புடைய செய்திகளைத் தருணம் அமையும் போதெல்லாம் வரலாற்றுக் குறிப்புகளாகப் பதிவு செய்துள்ளார். இவற்றில் அருணகிரியார் தொடர்பான செய்திகளும் முருகவேளின் சிறப்புறு தலங்கள் பற்றிய குறிப்புகளும், அருணகிரியார் காலத்தில் மக்களிடையே இருந்த நம்பிக்கைகள் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன. அத்தகைய பதிவுகளில் சிலவற்றை ஈண்டுக் காண்போம்.

பாடல் 259 இல் "திருப்புக ழோதுங் கருத்தினர் சேருந்
திருத்தணி மேவும் பெருமாளே"

என்ற வரிகளுக்குக் குறிப்புரை தரும்போது, ''திருப்புகழ் ஓதுங்கருத்துள்ள அடியார்கள் கூடுகின்ற திருத்தணிகையில் வீற்றிருக்கும் பெருமாளே" எனக் கூறிவிட்டு அடிக் குறிப்பில், 'ஐநூறு ஆண்டுகளுக்கு முன்னர் அருணகிரியார் கூறிய இக் கருத்தைப் பொய்யாகாதபடி ஆண்டுதோறும் டிசம்பர் 31 ஆம் தேதியில் திருப்புகழ் அடியார்கள் பெருங்கூட்டமாகத் திருத்தணிகையிற் கூடித் திருப்புகழ் ஓதித் தணிகேசனைப் பணிகின்றார்கள்' எனக் கூறியுள்ளார். படி உற்சவம் என்ற பெயரில் இன்றும் திருத்தணிகையில் இவ்விழா நடைபெறுவதையும் காணலாம்.

பாடல் 272 இல் **கடவுள் நீல மாறாத தணிகை காவ லாவீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே.**

என்ற அடிக்குக் குறிப்புரை வரையும்போது, தெய்வ மணமுள்ள நீலோற்பலம் மலர்வது என்றும் தவறாத தணிகை அரசே! வீரனே! கருணை மேருவே! தேவர் பெருமாளே! என எழுதிவிட்டு அது தொடர்பாகக் அடிக்குறிப்புத் தரும்போது இவ்வாறு எழுதுகிறார்.

"கடவுள் நீல மாறாத தணிகை! தணிகையில் மலைமேல் ரத வீதிக்குத் தெற்குப்பக்கத்தில் உள்ளது இந்திர நீல சுனை. அந்தச் சுனையில் தேவலோகத்து நீலோற்பலக் கொடியை இந்திரன் வைத்து வளர்த்ததாகவும், காலை, உச்சி, மாலை என்னும் மூன்று வேளைகளிலும் நீலோற்பலம் மலர, அம்மலர்களால் இந்திரன் தணிகை வேலவரை முப்போதும் பூசித்த தாகவும் புராணம் கூறும். ஏழாம் நூற்றாண்டில் இருந்த அப்பர் சுவாமிகள் "கண் மலிந்த கழுநீர்க் குன்றம்" என இத்தலத்தைக் குறிப்பிட்டார். நீலோற்பலம் மலர்வதால் "நீலகிரி" என்று சீர்பாத வகுப்பிலும், அனவரதம் நீலமலர் முத்தெறி சுனைப் புனலில் அருவி குதிபாயத்தரு செருத்தணி! என ஞான வேழ வகுப்பிலும், இந்திர நீலச்சிலம்பினன் எனப் புயவகுப்பிலும் சேர்ப்பது மாலய, நீலோற்பலகிரி என்று கந்தரந்தாதியிலும் அருணகிரியார் போற்றியுள்ளார். மூன்று வேளையும் இம்மலர் மலரும். இது தவறாது என்று . . . கந்தபுராணம் கூறும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் இம்மலர் பூத்து வந்ததாக எந்தையார் கூறக் கேட்டிருக்கிறேன். இந்தச் சுனையின் தீர்த்தத்தைத் தான் இன்னும் சுவாமிக்கு அபிஷேகத்துக்கு உபயோகப் படுத்துகின்றார்கள். ஆதலால் இந்தச் சுனையைத் தொழுது செல்லலாமே ஒழியச் சுனையில் நீராடக் கூடாது.

150 ஆண்டுகளுக்கு முன்பிருந்த கச்சியப்ப முனிவர் காலை நண்பகல் மாலை முப்போதும் வைகல் வைகல் மலர் மூன்று தெரிக்கும், "நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது" என்றார் தணிகை ஆற்றுப் படையில்; "நீரும் பூவும் திருமுடி என்றும் ஏறும்" என்றார் தணிகைப் புராணத்தில். இந்தச் சுனையில் நீலோற்பலக் கொடியை வைத்து மலர வைத்தால் அது சிவபுண்ணியமாகும் எனப் பல சான்றுகள் மூலம் சொல்ல வந்த செய்தியை நிறுவி அதனையே வரலாற்றுச் செய்தியாகப் பதிவு செய்து, புதிய தகவலாக நமக்குக் காட்டும் பிள்ளையவர்களின் உரைத்திறம் போற்றுதற்குரியது.

பாடல் : 165 **தமிழ்க்காழி மருதவன மறைக்காடு திருமருகல்**
**தநுக்கோடி வருகுழகர் தருவாழ்வே**

என்ற வரிக்கு உரை செய்யும் போது: தமிழ்க்காழி (சம்பந்தரது திருநெறித் தமிழ் எனப்படும் செந்தமிழ்த் தேவாரத்துக்குப் பிறப்பிடமாய சீகாழி) திருவிடைமருதூர், வேதாரண்யம் திருமருகல், தநுக்கோடி இத் தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபிரான் தந்த வாழ்வே (குமரனே) எனக் கூறிவிட்டு, இதனில் திருமருகல், தநுக்கோடி, குழகர் என்ற பதங்களுக்கு மட்டும் தனி விளக்கம் தருகிறார் உரையாசிரியர்.

**திருமருகல்:** நன்னிலம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து 7½ மைல். (வழியில் 4 மைலில் திருப்புகலூர் இருக்கிறது) தேவாரம் பெற்ற ஸ்தலம். விஷந் தீண்டி இறந்த செட்டிப்பிள்ளையைச் சம்பந்தர் உய்ப்பித்தருளிய ஸ்தலம்.

**தநுக்கோடி** : நீடு தநுக்கோடியினை நினைந்தாலும் புகழ்ந்தாலும் நேர்கண்டாலும் வீடு பெறல் எளிதாகும் (சேதுபுராணம், தநுக்கோடிசருக்கம்) என்ற பெருமைக்குரிய இத்தலம் ராமேசுரத்திலிருந்து 12 மைல். ஸ்நாந கட்டம்இது. தநுக்கோடி ரெயில் ஸ்டேசனிலிருந்து இரண்டுமைல்.

இப்பகுதியில் ரெயில், ரெயில்வே ஸ்டேஷன், மைல், ஸ்நாந கட்டம் எனப் பிறமொழிச் சொற்களை உரையாசிரியர் அப்படியே கையாண்டிருப்பது கவனிக்கத்தக்கது பெரும்பாலான இடங்களில் அன்றைய காலகட்டத்திற்கு ஏற்ப இவ்வாறான நடையை அவர் ஒரு உத்தியாகவே கையாண்டுள்ளார்.

**குழகர்** : வேதாரணியத்திற்குத் தெற்கே 6 மைலில் உள்ள தலம்கோடி. இது குழகர் கோயில் என வழங்கும் என்ற குறிப்பினை அடிக்குறிப்பில் நல்கியுள்ளார்.

முருகவேள் பன்னிரு திருமுறை தொகுதி ஒன்றில் அறுபடை வீடுகளில் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திரு ஆவினன்குடி (பழநி) ஆகிய படை வீடுகள் பற்றிய பாடல்கள் பற்றித் தொகுக்கும் முன்னர் முகவுரையாக மேற்சொன்ன ஒவ்வொரு படை வீடுபற்றிக் குறிப்புத் தருகிறார். இக்குறிப்பில் அத்தலத்தின் இருப்பிடம், முருகவேளின் அருளிச்செயல், அத் தலம் தொடர்பான தொன்மச் செய்திகள் மற்றும் இன்ன பிற செய்திகள் இடம் பெற்றிருத்தலைக் காணலாம். எடுத்துக் காட்டாக ஆறு படை வீடுகளுக்குக்கான குறிப்பினை ஈண்டுக் காண்போம்.

'தொடக்கத்தில் முருகக் கடவுளின் முக்கியத் திருப்பதிகள் ஆறனுள் முதல் திருப்பதி திருப்பரங்குன்றம் என ஒரு குறிப்பினைத் தருகிறார். அது மதுரைக்குத் தென்மேற்கே 4-கல். சம்பந்த சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவர்களுடைய பாடல் பெற்றது. முருகக் கடவுள் தெய்வயானை யம்மையை மணந்த தலம். தீர்த்தம் சரவணப் பொய்கை, மலைவலம் வரலாம். நக்கீர தேவர் பூதத்தாற் குகையில் அடைக்கப்பட, அவர் திருமுருகாற்றுப்படை பாடி வேலாயுதத்தின் உதவியாற் குகையினின்றும் வெளி வந்த அரும்பதி. நிரம்ப வழகியர் பாடிய தலபுராணம் ஒன்றுள்ளது.

பாடல் 79: **இதில், திங்கள் வேணியர் பல தளி**
**தொழுதுயர் மகமேடு**

என்ற வரிக்கு உரைவுரையும்போது தெற்கு, வடக்கு, மேற்கு மேலான கிழக்கு (முதலிய) திசைகள் எல்லாவற்றிலும் போர் செய்து, நிலவை அணிந்த சடை முடியராம் சிவபிரானுடய பல கோயில்களையும் தொழுது, உயர்ந்த மகாமேரு மலையின் மீது' என உரைத்துவிட்டு அடிக்குறிப்பில் ஒரு வரலாற்று நிகழ்வை நினைவு படுத்துகிறார் உரையாசிரியர்.

அதுவருமாறு : 'மேரு' - இமயம் எனக் கொண்டால் இமயம் தன் செலவைத் தடுத்ததால் சோழன் கரிகாலன் சினந்து அதைச் சாத்தனார் தனக்குக் கொடுத்த செண்டு என்னும் ஆயுதத்தால் அடித்துப் புலிக்கொடியை அதன்மீது பொறித்த வரலாறு குறிக்கப்பட்டுள்ளது எனக் கொள்ளவும் எனக் கூறி விட்டு, இதற்கான சான்றாக, செண்டு கொண்டு கரிகாலன் ஒரு காலிமயச் சிமயமால் வரை திரித்தருளி மீள அதனைப் பண்டு நின்றபடி நிற்க இது என்று முதுகிற் பாய்புலிக்குறி பொறித்ததும் - எனக் கலிங்கத்துப் பரணி காட்டும் பதிவினைக் காட்டுகிறார்.

பாடல் 160: **'பழைய பார்வதி கொற்றி பெரியநாயகி பெற்ற**
**பழநி மலையுற்ற பெருமாளே'**

என்ற வரிக்கு உரை கூறும்போது பழைய பார்வதி, துர்க்கை பெரிய நாயகி (என்னும் திருநாமத்தை உடையவள்) பெற்ற பெருமாளே பழநி மாமலையில் வீற்றிருக்கும் பெருமாளே எனக் கூறிவிட்டுப் பெரியநாயகி என்ற உடன் விருத்தாசலத்தில் எழுந்தருளியிருக்கும் அன்னை பெரிய நாயகிதான் யாவர்க்கும் உடனே நினைவில் வரும். ஆனால் இங்குக் குறிப்பிட்ட பெரியநாயகிஅம்மையின் திருக்கோயில் என்பது பழநி ஊரின் மேற்குப் பாகத்தில் விளங்குவது எனக் குறிப்புத் தருகிறார். இப்பெரிய நாயகி என்ற பார்வதி தான் முருகவேளுக்குத் தாய் எனக் கருதுகிறார் உரையாசிரியர்.

திருச்செந்தூர் : (இரண்டாவது திருப்பதி திருச்சீரலைவாய் என்கிற திருச்செந்தூர்)

திருநெல்வேலியிலிருந்து 35 கல். இங்குள்ள சமுத்திரத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து ஐந்து தலைகளில் ஒன்றிழந்த பிரமதேவனுக்கு அற்ற தலை கிடைத்ததாலும், 'பாண்டிய ராஜன் புத்திரியாகிய அங்க சுந்தரி என்பாளுக்குச் சாபத்தால் வந்த குதிரைமுகம் மாறி அழகிய முகம் கிடைத்ததாலும் அத்தீர்த்தத்துக்கு வதனாரம்ப தீர்த்தம் என்று பெயர். 'சிகைத் தோகை" (51) என்னுங் கந்தரந்தாதிச் செய்யுளில் 'மகள் வாசி கைத்தோ' என்பதன் பொருளைக் காண்க. செந்திலை உணர்ந்துணர்ந் துணர்வுற (47) கயிலைமலை யனைய செந்தில் (51) மகா புனிதந் தங்குந் செந்தில் (94) என்னுந் திருப்புகழ்த் திருவாக்கால் இத் தலத்துப் பெருமை புலப்படும். நெஞ்சந்தின் மேய வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்' என்பது அப்பர் சுவாமிகள் திருவாக்கு. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் 'கந்தர் கலிவெண்பா' பாடின திருப்பதி. இதற்குத் தலபுராண முண்டு.

திருவாவினன்குடி - பழநி

மதுரை ஜில்லா திண்டுக்கல்லிலிருந்து 35 மைல். வையாபுரி, ஷண்முகநதி, முதலிய தீர்த்தங்கள் உள. திருவாவினன்குடி கோயில் மலையடி வாரத்தில் இருக்கின்றது. பழநியாண்டவர் கோயில் மலைமேலிருக்கின்றது. பழநி ஊரிலும் சுப்பிரமணிய சுவாமி கோயில் இருக்கின்றது. பழநிக்குச் சிவகிரி, சிவமலை எனவுந் திருநாமங்கள் உண்டு. படிக்கின்றிலை பழநித் திருநாமம் படிப்பவர்தாள் முடிக்கின்றிலை (கந்தரலங்காரம் -75) சிவமயமாம் நின் பழநி (156) பதினாலுலகோர் புகழ் பழநி (170) காசியின் மீறிய பழநியங்கிரி (194) அதிசயம் அநேக முற்ற பழநி மலை (214) என்பவற்றால் இத்தலப்பெருமை விளங்கும். கிரிப் பிரதக்ஷணம் வரலாம். ஸ்தல புராண முண்டு.

### திருவேரகம் என்கின்ற சுவாமி மலை

கும்பகோணத்திற்கு மேற்கே 4-மைல். காவிரியின் வடகரை. முருகக்கடவுள் சிவபெருமானுக்குப் பிரண வோபதேசஞ் செய்த திருப்பதி. இதனால் ஸ்வாமிக்கு ஸ்வாமி நாதன், தகப்பன் சாமி, புத்ரகுருக்கள் என்னுந் திருநாமங்களுண்டு. பரமனுக்கொரு குருக்களென முத்தர் புகழ் தம்பிரானே215, மாற்கரி யார்க்கும் தேசந் செய்த திகிரி, (கந்தரந்தாதி 91) என்பன ஸ்வாமிகள் திருவாக்கு. “பெரிதுவந் தேரகத்துறைதலும் உரியன்” என்பர் நக்கீரனார். அருணகிரியார் பாததரிசனம் பெற்ற ஸ்தலம் (199) இதற்கு ஸ்தல புராணம் இருக்கின்றது.

### திருவேங்கடம்

திருவேங்கடம், வடமலை என்பன திருப்பதி, சித்தூர் மாவட்டத்தில் உள்ளது. பிரபல விட்ணு தலம். ஸ்வாமிகள் காலத்தில் விட்ணு ஆலயம் முருகர் ஆலயம் இரண்டும் இத்தலத்தில் இருந்திருத்தல் வேண்டும் என்பது இத்தலத்துக்குத் திருப்புகழ் இருப்பதாலும் ஸ்வாமிகளே “உலகீன்ற பச்சை யுமை யணன் வடவேங்கடத்தி லுறைபவன்” எனத் திரு வாஞ்சியத்துத் திருப்புகழிற் (816) கூறுவதாலும் பெறப்படுகின்றது.

### பழமுதிர்ச்சோலை

இது மதுரைக்கு வடக்கே 12 மைலிலுள்ள கள்ளழகர் கோயில். 443 ஆம் பாடலில் ‘பிட்டமுதுக் கடிபடுவானோடு நெருங்கிய ஆதிச் சோலை மலை’ என்றதனால் இத்தலம் மதுரைக்கு அருகில் உள்ள தலம் என்பதும் பெறப்படுகின்றது. ஆதலால் கள்ளழகர் கோயிலே பழமுதிர் சோலை என்பதிற் சிறிதளவும் ஐயமில்லை. சிலம்பா றணிந்த சீர்கெழு திருவிற் சோலையொடு தொடர்மொழி மாலிருங் குன்றம் (பரி.15). இத் தலத்து மலை இருங்குன்றம் எனப் பரிபாடலிலும் ‘தண்கார் வரை’ எனக் கந்தர் அந்தாதியிலும் (1.73) விளக்கப்பட்டுள்ளது.

மேற்சொன்ன வகையில் ஆறுபடை வீடுகளாக அருணகிரிநாதர் சொன்ன தலங்களுக்கான விளக்கக் குறிப்பை அந்தந்தத் திருமுறைக்கு முன்னுரை என்ற அமைப்பின் வாயிலாக அமைத்துள்ளார். தலப்பயணம் செய்ய விரும்புவோர்க்கு இவர்தம் குறிப்புகள் பயணத்திற்கான வழிகாட்டியாக மட்டுமல்லாது அத்தலம் பற்றிய தொன்மச் செய்திகள், நம்பிக்கைகள், முதலியனவற்றையும் இணைத்துக் கூறுகின்றது.

இவையன்றி ஐந்தாம் திருமுறையில் திருவேங்கடம், தொடங்கி, திருத்தணிகை, கழுக்குன்றம், சிராப்பள்ளி, இரத்னகிரி,

விராலிமலை, செங்கோடு, கொல்லிமலை, ராசகெம்பீர வளநாட்டு மலை (ராச கெம்பீரன் மலை என்பது திருக்கற்குடிக்குப் பெயர்) ஞானமலை (இடம் விளங்கவில்லை. நாமக்கல்லுக்கருகில் நைனாமலை யென்று மலையொன்றுண்டு) ஊதி மலை (இது கோயம்புத்தூர் மாவட்டத்தில் தாராபுரத்திலிருந்து காங்கேயத்துக்குப் போகும் வழியில் இடைநடுவில் பத்துக்கல் தூரத்தில் உள்ளது), குருவிமலை (இது கோயமுத்தூருக்கு அடுத்த துடியலூர் புகைவண்டி நிலையத்திற்கு அண்மையில் உள்ளது), தென் சேரிகிரி - (செஞ்சேரி மலை என மருவி வழங்கப்படுகிறது), கொங்கணகிரி, நாகமலை (கோயம்புத்தூர்) புகழிமலை (திருச்சிராப்பள்ளி) பூம்பரை (கொடைக்கானல் அண்மையில்) கொடுங்குன்றம் (பிரான்மலை என்பது) குன்றக்குடி, கழுகுமலை, கதிர்காமம், திருக்கோணமலை எனப் பல்வேறு தலங்கள் பற்றிச் சிறப்பான குறிப்புரை தந்துள்ளார் உரையாசிரியர். முருகவேளைப் பற்றி அறிய வேண்டுவோர்க்கு இத் தலக்குறிப்புகள் அத்தனையும் வரலாற்றுக் குறிப்புகள் என்றால் மிகையாகாது.

## பாடவேறுபாடு

பாடம் வேறுபடுவது பாட வேறுபாடு எனப்படுகிறது. பாடம் என்பது மூலபாடம். நூலாசிரியர், உரையாசிரியர் ஆகியோர் கூறிய உண்மைத் தொடர் மூலபாடம் எனப் பெறுகிறது. அதாவது ஒரு சொல்லுக்குப் பிரதியாக வரும் பிறிதொரு சொல்லைப் பாடபேதம் என்பர்.

பிள்ளையவர்களும் தம் நுண்மாண்நுழைபுலத் திறத்தால், திருப்புகழில் காணும் பாடவேறுபாடுகளைத் தெள்ளத் தெளிவாக ஆங்காங்கே எடுத்துக் காட்டியுள்ளார்.அவற்றில் சிலவற்றைப் பறவை நோக்கில் ஈண்டுக் காண்போம்.

நிறைகனி அப்பமொ டவல் பொரி - நூல் - 1
நிறையவல் முப்பழ மொடு பொரி - (பா.வே.)

இங்குப் பாடவேறுபாடாய் அமைந்த தொடரில் யாப்புத் தடையில்லை. பாட்டின் நடைமாறிவிட வில்லை. ஆயின், நிறைகனி என்ற மூலபாடத்திற்கு நிறையவல் என வந்திருப்பது பாடலின் பொருளுக்கான முழுமையைத் தரவில்லை. ஆகவே இது பாடவேறுபாடு எனக் கருதுகிறார் உரையாசிரியர்.

**மகர சலநிதி வைத்தது திக்கர**
**வளரு கரிமுக ஒற்றைம ருப்பனை வலமாக**
**மருவு மலர்புனை தொத்திர சொற்கொடு**
**வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு**
**வசை பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே (5)**

என்ற நினது திருவடி எனத் தொடங்கும் பாடலில் காணப்படும் வரிகளுக்கு மாற்றாக

மகர சலநிதி வைத்த துதிக்கையர்
மதியை முடிமிசை வைத்தருள் அப்பனை - வலமாக
வருமுனி கலிய சொற்படி அக்கிரி
வளைய நொடிவரு முற்செல வுற்றிடு

என ஒரு பாடவேறுபாடு காணப்படுவதைச் சுட்டிக் காட்டியுள்ளார். ஈண்டு நூலில் கணபதி கடல்நீரைத் தன் துதிக்கையால் உறிஞ்சி வற்றச் செய்த தொன்மக்கதை கூறப்பட்டுள்ளது. ஆனால் பாடவேறு பாட்டில் கணபதி நாரதன் அறிவுரைப்படி உலகை வலம் வருவதற்குப் பதிலாக, ஈசனையே வலம் வந்த கதை கூறப்பட்டுள்ளது.

கடல் நீரை விநாயகன் உறிஞ்சிக் கடலை வற்றச் செய்தான் என்ற கதை பெருமளவு மக்களால் அறிந்திருக்க வாய்ப்பில்லை. ஆயின் விநாயகன் மாங்கனிக்காக, உலகைச் சுற்றிவருவதற்குப் பதிலாக ஈசனைச் சுற்றி வந்த வரலாறு யாவரும் அறிந்த ஒன்று என்பதைக் கருத்திற் கொண்டு இப்பாடபேதம் எழுந்திருக்கலாம்.

**முத்தைத்தரு பத்தித் திருநகை** (1) என்ற பாடலுக்கு

முத்தித்தரு பத்தித் திருநகை என்ற பாடவேறுபாடு காணப்படுகிறது. 'முத்தித்தரு பத்தித்திரு நகை' ஏற்புடைய பாடமாக இருக்கலாம் என்பது உரையாசிரியர் கருத்துப் போலும். இப்பாடவேறு பாட்டிற்கு விளக்கம் தரும்போது, "முத்தித் : பத்தி தரு முத்தி நகை அத்தி இறைவா' எனவரும் திருவிரிஞ்சைப் பிள்ளைத் தமிழும் திருவென்னும் முன் பதினாறாயிரமாம் பத்தித் திருப்புகழைப் பாடுங்காண்" என வரும் தணிகையுலாவும் ஈண்டுக் குறிக்கத் தக்கன. தேவசேனை 'முத்தி தருமாது என்பதற்கு அமுத தெய்வானை திருமுத்தி மாது 'ஆரிய கேவலி' என வரும் திருப்புகழ்' (764, 918 ஆதாரமாகும் எனக் குறிப்பு வரைகிறார். இக் குறிப்பின் வழியாக முத்தைத்தரு என்பதைவிட 'முத்தி தரு' என அமைவதே நிறைவான பொருள் தருவதாக உள்ளது என்பதைச் சுட்டிக் காட்டிப் பாடவேறுபாடாக உள்ளதையே முறையான பாடமாகக் கருதலாம் என உரையாசிரியர் கருதுவது உணரப்பாலது.

**துரத்தியன் றிந்தர லோகம்**
**அழித்தவன் பொன்று மாறு**
**சுடப்படுஞ் சண்ட வேலை விடுவோனே** (15)

என்ற வரிகளுக்கு உரியபாடவேறுபாடாக,

'துரத்தியன் றிந்த்ர லோக
மளித்திடுஞ் சம்பர தாய
சுடர்ப்படுஞ் சண்ட வேலை விடுவோனே'

என்பதனைக் குறிப்பிடுகிறார். 'அழித்தவன்' என்பதற்கு அளித்திடும் என்ற சொல்லும் 'சுடப்படுஞ்' என்பதற்கு 'சுடர்ப்படுஞ்' என்ற சொல்லும் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

**என்பெற் றுலகிற் பெண்பெற் றவருக்**
**கின்பப் புலியுற் றிடலாமோ" (19)**

என்ற வரியில் 'இன்பப் புலியுற் றிடலாமோ' என்பதற்குப் பதிலாக 'இந்தப் பழிவைத் திடலாமோ' என்ற பாடவேறுபாடு காணப்படுகிறது.

எதைப் பெற்று (ச்சுகம் உண்டு) பெண்ணைப் பெற்றவர்க்கு (உண்மை) இன்பத்தைப் புல்லி (அடைந்து) இருத்தல் வாய்க்குமோ! என மூலபாடத்திற்கு உரைதருகிறார் உரையாசிரியர். ஆயின், பாடவேறுபாட்டின் படி பொருள் கொண்டால் பெண்ணைப் பெற்றவர்க்கு இன்பம் இல்லை என்ற பழியை வைத்திடலாமோ எனப் பொருள் அமைந்து மூலபாடத்திற்கு ஊறு இன்றிக் கருத்து அமைவதைக் காணலாம்.

**வளரும் வாழையு மஞ்சளும் இஞ்சியும்**
**இடைவி டாதுநெ ருங்கிய மங்கல**
**மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே (22)**

என்பதற்கு

மதுரவாசக மிஞ்சிய கிஞ்சுக
இதழி மாதுமை மைந்தவி ரும்பொழில்
மயிலை மாநகர் வந்துறை இந்திரர் பெருமாளே

என்ற பாடவேறுபாடு காணப்படுகிறது. இப்பாடவேறுபாட்டில் செந்தில் மாநகர் என்பதற்குப் பதிலாக மயிலை மாநகர் என்ற பதம் காணப்படுகிறது. இதைப்பார்க்கும் போது, பிற்காலத்தில் யாரோ ஒருவர் தமது பிரதியில் தென்பாண்டி நாட்டுச் சிறப்புறு தலத்திற்குப் பதிலாக வடதமிழ்நாட்டு மயிலாப்பூரை நினைவு கூர்ந்துள்ளார்.

மித வாடை வந்து தழல்போல வொன்ற
வினை மாதர் தந்தம்
குற வாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடி தான துன்ப
குளிர் மாலை யின்க ண்ணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ (45)

என்ற வரிகளுக்குப் பதிலாக

*மிகவாடை வந்து சுட வேலை வென்ற*
*விழிமாதர் தந்த மயலாலே*
*உற வாடி மஞ்சம் அதிலே அநுராகம்*
*உடை சோர இன்ப அநுராகம்*
*ஒரு கூடி அன்பில் உறுபாச நெஞ்சன்*
*உனைநாட என்று பெறுவேனோ*

எனப் பாட வேறுபாடு காணப்படுவதாகக் கூறுகிறார்.

மூல பாடத்திற்கு உரை வரையும் போது, “நிதானமான (தென்றல்) வந்து தீப்போல வீசிப்பொருந்த, (வீண் பேச்சுத்) தொழில் மாதர் தத்தம் வசை மொழிகளைக் கூற குறவர்கள் வாழும் குன்றில் உறைகின்ற (வள்ளி போன்ற) பேதைப்பெண் அடைந்த கொடிய துன்ப மயக்கம் தீர குளிர்ந்த மாலைப் பொழுதில் (வந்து) நீ அணிந்துள்ள மாலையைத் தந்து என் குறை தீர அணுக மாட்டாயா” என விளக்கம் தருகிறார்.

ஆனால், பாடவேறுபாட்டின் பொருள் தத்துவார்த்தமாக, காமச் சேட்டையில் இருந்து மனமது திரும்பி இறைவன்பால் செல்ல இறைவன் கருணை செய்வான் என்று அமைகிறது.

இவ்வகையான பாடவேறுபாட்டைச் சொல் வேறுபாடு என்பர் பூ. சுப்பிரமணியம். சொற்கள் மாறுபட நின்று பொருள் மாற்றந் தந்தும், தராதும் வரும் பாடங்கள் இவ்வகையைச் சார்ந்தன.

ஓரிரு எழுத்துகள் மட்டும் வேறுபட நிற்பதும், சில விடங்களில் சொல்லே வேறுபட்டு நிற்பதும், ஏதேனும் ஒரு தொடரோ அல்லது ஒரு அடியோ முற்றிலும் மாறுபட்டு அமைவதும் வடிவ வேறுபாடு ஆகும்.

இவ்வேறுபாடுகளால் சீர், தளை கெடுதலோ, ஓசை வேறுபடுதலோ நிகழாது. மூலபாடத்தினின்றும் வேறுபட்டதே யாயினும், சொல்லின் வடிவத்தால் மட்டுமே வேறுபட்டு நின்று மூலபாடத்தின் கருத்தைச் சிறிதும் மாற்றாது அமையும்.

‘அபகார நிந்தைபட் டுழலாதே’ என்ற 106 ஆம் பாடலில் ‘அபகாரநிந்தை’ என்ற சொல்லுக்குப் பாடவேறுபாடாக ‘அபசார நிந்தை’ என்ற சொல் காணப்படுகிறது. இது பற்றி உரையாசிரியர் குறிப்பிடும் போது, ‘அபசார நிந்தை என்று சில பிரதிகளிலிருந்த போதிலும் அபகார நிந்தை’ என்றே பழம் பிரதிகள் பலவற்றிலும் உள்ளது” எனக் கூறுகிறார்.

இங்கு ஆசிரியர் மூலபாடம் இப்படித்தான் இருக்கமுடியும் எனத் தெளிவுபடுத்தி இருப்பது சுவடி ஆய்வாளர்களுக்குப் பயன்படும் நல்ல குறிப்பு ஆகும்.

'பகலக் கிரணப் பரணச் சடில' என்ற வரியில் (127) பரண என்பதற்கு, 'பவள என்றும் பாடம் உள்ளதாகக் கூறுகிறார். 'குமர சமர முருக பரம' என்ற மூலத்திற்கு (130) 'சமர புரியின் முருக' என்ற பாடம் அமைந்துள்ளது. சமர என்பதற்குச் சமரபுரி என இயற்பெயர் முழுமையாகச் சுட்டப்பட்டுள்ளதைக் காணலாம். பெருகு மெய்த் திருத்தணிப் பெருமாளே என்ற மூலத்திற்கு (253) செய்ப் பதிப்பினைப் பெருமாளே என்ற பாடம் உள்ளதாகக் கூறுகிறார். இங்குப் பாடம் முற்றிலும் மாறி வந்துள்ளதைக் காணலாம்.

'பெரு வயி றீளை யெரிகுலை சூலை" என்ற வரியில் (260) யெரிகுலை சூலை என்ற மூலத்திற்கு 'முகபரு சூலை' என்பது பாடமாகவும் அடுத்து, அநேகர்என்ற சொல்லுக்கு அனேகர் பாடம் எனவும் 'தருதிருமாதின் மணவாளா' என்ற மூலத்தில் தருதிரு என்ற சொல்லுக்குத் 'தருபடி' என்ற சொல் பாடமாகவும் அமைந்திருப்பதைச் சுட்டுகிறார் உரையாசிரியர்.

மாதருக்கு வருத்த மிருப்பது தனியாதோ (278) என்ற மூலபாடத்திற்கு 'மாதருக்கு வசப்படு புத்திகள் தவிரேனோ' எனத் தொடர் முழுமையாக வேறுபட்டு அமைந்துள்ளதைக் காணலாம். குறிப்புரையில் மாதருக்கு என்பதில் 'கு' - என்னும் நான்காம் வேற்றுமை உருபு 'பொருட்டு' என்னும் பொருளில் வந்து மாதர் பொருட்டு வருத்தம் எனப் பொருள் தரும். மேலும் இத் தொடர்க்கான உரை விளக்கத்தில் 'மார்பை அசைத்து, மோகமயக்கத்தை உண்டு பண்ணி, இருட்டறைக்குள் வா என்று அழைத்துப்போய், (என்னிடமுள்ள) பொருளைக் கவர்ந்து சம்பந்தம் செய்யும் (தழுவும்) (பொது) மகளிர் பொருட்டு நான் வேதனைப்படுவது தவிராதோ' என விலைமாதர் பற்றிய முழு அனுபவம் உடையவர் வருந்துவது போல மூலம் அமைகிறது. ஆயின் பாடவேறுபாட்டில் 'மாதருக்கு வசப்படு புத்தி' என்பதின் மூலம் விலைமாதரை நினைக்கும் புத்தி - எண்ணம் வாராது அமைய வேண்டுவதாக உள்ளது. ஆகவே மூலபாடத்தை நன்கு ஓர்ந்த ஒருவர்தான் செயலைவிட அச் செயலைத் தூண்டும் புத்தியைத் தவிர்க்க வேண்டுவதாக எழுதியிருக்கவேண்டும். அவ்வகையில் இதனை இடைச்செருகல் எனக் கருதவும் அதிக வாய்ப்புண்டு.

**'மித மிஞ்சு போக வேலா ஆளா**
**மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா**
**மயிலந்தன் மாமலை வாழ்வே வானோர் பெருமாளே'**
**(328)**

என்ற மூலபாடத்திற்கு இணையாக

மதிமஞ்சு போதக ஞான ஈசா
செவியின் சொல் வாசகா - வேதா கீதா
மகிழ்சம்பு தானருள் வேலா வானோர் பெருமாளே (328)

என்ற பாடபேதம் அமைகிறது. இப்பாடவேறுபாட்டில் மூலபாடத்தின் பொருள் மாறுபடாது, அதே வேளையில் சொற்கள் மட்டும் மாறுபட்டு அமைந்துள்ளதைக் காணலாம்

'சோலை செறிவுளவி ராலி நகரில் வளர்
தோகை மயிலுலவு தம்பிரானே' (365)

என்ற மூல வரிக்கு இணையாக

சோலை செறியுமியல் வாத நகரில் வளர் என்றும்
சோலை செறியுமியல் வாகை நகரில் வளர் என்றும்

பாடவேறுபாடுகள் காணக்கிடைப்பதாகக் கூறுகிறார் உரையாசிரியர்.

விராலி நகரில் என்ற மூலத்திற்கு வாத நகரில் எனவும் வாகை நகரில் எனவும் பாடம் அமைந்துள்ளதைக் காணலாம்.

எழுத்துகளோ சொல்லோ பாட பேதமாக அமைந்ததற்கான சில எடுத்துக்காட்டுகள் வருமாறு:

மேகார மீதின் மிசை வரவேணும் (149) (மூலம்)
மேகார வாசி மிசை வருவாயே (பா.வே.)

கனதன மொத்த மேனி (169) (மூலம்) கனகம தொத்த (பாடம்)

கரியடங்கலு (175) (மூலம்) கிரியடங்கலு (பாடம்)

பழநி யங்கிரி யின்கண் மேவிய தம்பிரான் (175) (மூலம்)
பழநி யங்கிரி யெங்கு மேவிய (பாடம்)

மிகச் சக (271) (மூலம்) தமைச்சக (பாடம்)

விழலாமோ " (மூலம்) விழுவேனோ (பாடம்)

வளைத்தணி " (மூலம்) வளைத்தடல் (பாடம்)

தொடுத்தியல் " (மூலம்) தொடுத்திகல் (பாடம்)

அளித்தவர் தரு சேயே (271) (மூலம்) அளிப்பவர் பெறு சேயே (பாடம்)

மங்கை பாகா (281) (மூலம்) மங்கை கோவே (பாடம்)

உனது குவளைச் சிகரி பகரப் பெறுவேனோ" (290) (மூலம்)
உனது புகழைத் தினமுணரப் பெறுவேனோ" (பாடம்)

குருதி பெருகிட (354) (மூலம்) குருதி பெருகிடு (பாடம்)

மதுரமெனு நதி (395) (மூலம்) மருத மெனு நதி (பாடம்)

வடவையாறு (419) (மூலம்) வலவையாறு (பாடம்)

சுவடி பதிப்பிக்க விரும்புவோர்க்கும், நூலுக்கு உரை எழுத முயல்வோருக்கும் பழைய சுவடிகளை ஆய்வு செய்து மூலபாடம் காணமுயல்வோருக்கும் இத்தகைய குறிப்புகள் பெரிதும் பயன்படும்.

## முடிவுரை

முருகவேளுக்கு அமைந்த பன்னிருதிருமுறைக்கு உரை எழுதிப் பெருமை சேர்த்த செங்கல்வராய பிள்ளை உரைத்திறத்தை, திருமுறை வாரியாகவும், சிறப்புறு பாடல்கள், வரலாற்றுக் குறிப்புகள், பாடபேதம் காட்டிய ஆய்வு நோக்கு, அரும்பத வுரை, பதப் பிரிப்பு போன்ற உரைக்குத் துணை செய்யும் காரணிகளில் ஆய்வு செய்து உரையாசிரியரின் உரைத்திறன் வெளிக் கொணரப்பட்டது.

உரையாசிரியரே பல இடங்களில் விமர்சகராக இருந்து திருப்புகழை நோக்குவதைக் காண முடிந்தது. மொத்தத்தில் அரிய முயற்சிக்கு உரிய பங்களிப்பைச் செய்து 'உரை' என்ற பெருமையைத் திருப்புகழுக்குச் சேர்த்துள்ளார் செங்கல்வராய பிள்ளை என்றால் மிகையாகாது. இது கருதியே,

**அணிகைமணி ஆக்கமும் வெண்ணீறு திகழ் அங்கமும்**
**மெய் அன்பும் மேவும்**
**தணிகைமணி இராவ்பகதூர் செங்கல்வராய அன்ப**
**தணிகேசர் தாள்**
**பணிகைமணி நேரமறாப் பண்பார் நண்பா! தாதை**
**பதிப்புச் செயநீர்**
**தணிகைமணி திருப்புகழ்க்கின் னுரை வகுத்தாய்**
**இறால் வடித்த தேனே போன்றே!**

எனக் கவிதையிற் பாராட்டுகிறார் திராவிட கவிமணி வே. முத்துச் சாமி ஐயர்.

அமிர்த வசனி என்ற இதழ் இவ்வாறு பாராட்டுகிறது: "இன்று சந்தமணம் கொழிக்கும் செந்தமிழ்த் திருப்புகழுக்கு

உரையெழுதும் முயற்சியில் ஈடுபட்டிருக்கின்றார்கள். காலப் போக்கிற்குத் தக்கபடி மனம் போக்கி எழுதுவார் போலன்றி, பழமை பற்றும் பண்புடைய அன்பர் அறிஞர் தணிகைமணி உரையாசிரியராக அமைந்தமை பாராட்டத்தகும் (அமிர்தவசனி மார்ச் - ஏப்ரல் 1953).

பத்திரிகைகளும், கவிஞர் பெருமக்களும், அறிஞர்களும் ஆன்றோர்களும் தமிழ் ஆர்வலர்களும் புகழ்ந்து போற்றும் திருப்புகழுக்குச் செம்மையான உரையமைத்த செங்கல்வராய பிள்ளையின் திருத்தொண்டு எண்ணி எண்ணிப் போற்றுதற் குரியதாகும்.

* * *

**முதன்மை நூல்**

முருகவேள் பன்னிரு திருமுறை - தொகுதி - I - IV தணிகைமணி டாக்டர் வ.சு. செங்கல்வராயன் திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட், சென்னை, மூன்றாம் பதிப்பு 1992

**துணைநூல்கள்**

உரையாசிரியர்கள், அரவிந்தன் மு.வை., மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு 1995

டாக்டர் உ.வே.சா. காப்பியப் பதிப்புகள், காசிராசன், இரா, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985

டாக்டர் உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள், குளோறியா சுந்தரமதி, , உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை 1984.

## இணைப்பு I: உரைக்குறிப்பில் காணும் மேற்கோள் நூல்கள்

அகநானூறு (224) அப்பர்தேவாரம் 1-5 (அநுபூ); அபிதான சிந்தாமணி 374; அபிராமி அந்தாதி 91; அருணகிரி யந்தாதி 18,253; அஷ்ட பிரபந்தம் 71; இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி (2-அநுபூ); 330; இரத்தினச் சுருக்கம் (அநுபூ22); உண்மை விளக்கம் (அநு.பூ.47); உசித சூடாமணி - நிகண்டு 354; ஒழுவி லொடுக்கம் (அநு12) கந்தபுராணம் (அநு 1,10,27) கந்தர்கலி வெண்பா (அநுபூ - காப்பு) (அநு-21) 416; கந்தரந்தாதி (அநு8) கந்தரலங்காரம் அநு 7 அநு 15, 59; கந்தரனுபூதி 242; கம்பராமாயணம் (அநு 34), 81, 225; கல்லாடம்(அநு1) (அநு4) (அநு18) (158); கலித்தொகை 393; காஞ்சிப்புராணம் 280; குற்றலாக் குறவஞ்சி 197; குறிஞ்சிப் பாட்டு 2989; குறுந்தொகை 351; கைவல்ய ஞான உலா(10) கைவல்ய நவநீதம்(அநு 39); கொங்கு மண்டல சதகம் 238; 350; சம்பந்தர்

தேவாரம் (அநு-காப்பு) (2); சித்துவகுப்பு (அநு15), (315); சிதம்பரச் செய்யுட் கோவை (அநு11); சிராமலைக்கோவை (அநு 51) (256); சிலப்பதிகாரம் (151) சிவஞான சித்தியார் (330) சுபக்கம் (அநு42); சிவப்பிரகாசம் (349); சிவபுராணம் - திருவாசகம் (313); சிறுபாணாற்றுப்படை (236) (376), (290); சீவக சிந்தாமணி:11;(அநு27); செந்தமிழ்ச் செல்வி (436); செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் (88), செவ்வந்திப் புராணம் (331) சேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ் (203) சேத்திர திரு வெண்பா (313) சொக்கநாத வெண்பா (அநு43) சோண சைல மாலை (304) (389) தக்கயாகப்பரணி (364) தண்டியலங்காரம் 398); தணிகைக் கலம்பகம் (290) தணிகைப் புராணம் (அநு51) (218) தணிகை யுலா (19) (215) தாயுமானவர் பாடல் (170) (அநு-காப்பு) (அநு3) திருக்கழுக்குன்றப் புராணம் (311) திருக்குறள் (அநு-15) 235; திருப்பரங்குன்றப் புராணம் (31) திருப்பல்லாண்டு (372) திருப்புகழ் (அநு1) (154) திருப்பொற்சுண்ணம் - திருவாசகம் (271) திருப்போரூர் சந்நதி முறை (அநு 12) திருமந்திரம் (அநு 13) (அநு51) (91) (389); திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் (271) திருமலையாண்டவர் குறவஞ்சி (296) (447) திருமுருகாற்றுப்படை (அநு25) (27) (அநு35) (அநு44) திருவாரூர்க்கோவை 296, திருவாசகம் (334) திருவாலங்காட்டுப் புராணம் (77) திருவாலவா யுடையார் திருவிளையாடற்புராணம் (226); திருவிசைப்பா (அநு15) (அநு20) 201; (23) (192) திருவுந்தியார் (அநு30) திருவேகம்பமாலை (443) திருவேங்கடத் தந்தாதி 357; திருவேரகமான்மியம் (227) திவாகரம் (அநு38) தேவாரம் (5) தொல்காப்பியம் (224) நற்றிணை (388) நன்னூல் (அநு4) (அநு23) (416); நாலடியார் (அநு 11) நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் (55) பட்டினத்தார் பாடல் (அநு 12) பண்டார மும்மணிக் கோவை (அநு 28) பத்துப்பாட்டு (389) பரங்கிப்புராணம் (274) பராபரக்கண்ணி (அநு12) பரிபாடல் (அநு6), 400; பழநிபுராணம் 433; பாரதம் (414); பிங்கலம் (அநு11) 304; பிரபுலிங்கலீலை (196); புயவகுப்பு 209; புறநானூறு (அநு1) (224); பூதவேதாள வகுப்பு (48, 49), (115); பெரிய திருமொழி (274); (313) பெரியபுராணம் (417), (260, 398); பெருங்கதை (164) பொன் வண்ணத்தந்தாதி (330) போரூர் சந்நதிமுறை (289) மணிமேகலை (அநு34) மயில்விருத்தம் (அநு38) மயூரகிரிநாதர் பிள்ளைத் தமிழ் (408) மீனாட்சியம்மை குறம் (311) மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் (216) மூத்த விரட்டை மணிமாலை (441) மூதுரை (304) வண்டுவிடுதூது (217) வாட்போக்கிக் கலம்பகம் (348) வில்லிபாரதம் (216) வெங்கைக் கலம்பகம்(374) வெங்கைக் கோவை (அநு33) (439) வேதாரணிய புராணம் (312) வேல்வகுப்பு (263) வேல் வாங்கு வகுப்பு (246) வேளைக் காரன் வகுப்பு (199).

## இணைப்பு II: உரையாசிரியர் காட்டிய அரும்பதங்களில் சில

| | | |
|---|---|---|
| தடநற் கஞ்சம் | - | இதயகமலம் (21) |
| தகர வித்தை | - | இறைவனைத் தகராசனத்தில் வைத்துத் தியானம் செய்யும் முறையை உணர்த்தும் வித்தை (20) |
| தென்கால் கன்றில் | - | இளந் தென்றற் காற்று (25) |
| கார்முகம் | - | பஞ்சு கொட்டும் வில் (26) |
| விடக்கு | - | மாமிசம் (26) |
| பண்பிலுக்கல் | - | தகுதியாகிய வஸ்துக்களைக் கொண்டு ஆடம்பரமாக அலங்கரித்தல் (29) |
| அரைப்புலர் | - | அல்குல் (30) |
| துரை | - | வேகம் (33) |
| இப்படி | - | இப்பூமியில் (பழைய உரை (33) |
| வியாளம் | - | பாம்பு (37) |
| கலாரம் | - | கல்லாரம் - செங்குவளை (40) |
| முஞ்சள் | - | செத்துப் போவோர் (41) |
| தோயம் | - | நீர் (42) |
| போகி | - | பாம்பு (41) |
| விடங்கர் | - | உளியினாற் செதுக்கப்படாதவர் (67) |
| தகரம் | - | வாசனைப் பொருள் (69) |
| கடபமெனல் | - | சப்த காலத்தால் மருட்டிப் பேசுதல் (73) |
| தமிழ்ச் சொற் சந்தம் | - | இது தேவாரத்தைக் குறிக்கலாம் (77) |
| குரல்மங்கை | - | விண்ணுலக மங்கை தெய்வானை (86) |
| மூஞ்சி | - | முஞ்செனத் திரிந்தது - ஆகுபெயராய் வாயை உணர்த்தி நின்றது. |
| நற்பு | - | நன்மை (89) |
| கங்காளி | - | பார்வதி (89) |
| இறைப்பு செற்றிரு | - | துன்பம் உண்டாக்கி (92) |
| மொஞ்சி | - | முலை (96) |
| சிங்கை மாநகர் | - | காங்கேயம் (99) |
| வைகாவூர் | - | ஆவினன்குடி (161) |
| மாரணம் | - | மந்திர வித்தையால் மரணத்தை உண்டு பண்ண எழும் கொலைக் கருவி அஃதாவது இங்கே கொங்கை (107) |
| சிரம் | - | கமுகு (121) |
| சங்கு | - | கமுகு (120) |
| அசுழம் | - | நாய் |
| தனகல் | - | சிணுங்கிப் பேசுதல் (159) |

| | | |
|---|---|---|
| ஓமல் | - | ஊர்ப்பேச்சு (145) |
| அகுதி | - | திக்கற்றவர் (145) |
| கனப்பறை | - | அதமக் கருவி (புறமுடிவு) சிலப்பதிகார உரை (142) |
| மேகாரம் | - | மயில் (148) |
| வனசம் | - | சரவணப் பொய்கையிலுள்ள பதுமப்பாயல் (150) |
| கசதி | - | வருத்தம் (154) |
| உகளம் | - | இரண்டு (154) |
| சுக்கை | - | பூமாலை (155) |
| துரகமுகக்கோதை | - | கற்கிமுகி என்கிற ஒருபூதம் (156) |
| பதமை | - | வார்த்தை (165) |
| கபாய் | - | கலசம் - தேகம் (198) |
| கொடி | - | நாகம் (198) |
| குணாலம் | - | குணாலை - வீராவேசத்தாற் கொக்கரித்தல் (201) |
| துரால் | - | துரும்பு (201) |
| பகாரம் | - | பகரம் - அலங்காரம் (202) |
| இருவினை | - | பெருஞ்செயல்; சிவயோகம் (205) |
| வசுதை | - | பூமி (207) |
| சம்பை | - | மின்னல் (210) |
| சிகசம் | - | மூங்கில் (219) |
| நிகர் | - | போர் (222) |
| தனது | - | சிநேகம் (248) |
| இரணம் | - | யுத்தம் (249) |
| கனம் | - | மேகம் (254) |
| மணவை | - | பரண் (265) |
| மழுவிகள் | - | தங்கள் சூது வெளியாகமல் மழுப்புவோர் (267) |
| கிருத்தர் | - | செறுக்குள்ளவர் (268) |
| குவால் | - | சட்டம் (272) |
| கலாதி | - | கலகம் (275) |
| குலைப்பு | - | நடுக்கம் (271) |
| குற்கிரவிளி | - | உரல் (279) |
| சுருதித்தமிழ் | - | தேவாரம் (281) |
| கோம்பு | - | சினக்குறிப்பு (281) |
| ஈங்கிசை | - | இம்சை (287) |
| கோபம் | - | இந்திர கோபம் - தம்பலப்பூச்சி (288) |
| தோதகம் | - | வருத்தம் (374) |

| | | |
|---|---|---|
| சம்பு | - | சம்பங்கோரை (375) |
| துற்ப | - | துன்பம் (377) |
| சற்பப் பொற்றை | - | நாகமலை (386) |
| ஆன் உரும் தீ | - | யாகப்பசுவை தகித்துப் பொடியாக்கும் அக்கினி (390) |
| கேட்டவிதி | - | முதன்மையான தட்சப் பிரசாபதி (390) |
| தூவையர்கள் | - | மாமிச பட்சணிகள் (394) |
| புத்ரகுருக்கள் | - | தகப்பன் சாமி (394) |
| கலதி | - | மூதேவி (419) |
| வகிர் | - | கீற்றுகளையுடைய புலி (422) |
| சரம் | - | நாணல் (424) |
| வலாரி | - | இந்திரன் (439) |
| மகபதி | - | நூறு அசுவமேதயாகம் முடித்தவன் (435) |

## இணைப்பு III : சொற்பதப் பகுப்புகள்

| | | |
|---|---|---|
| புயற்குழன்றங்கமழ் | - | புயல்+குழன்ற+ம்+கழல் (13) |
| மலரஞ்சாரப்புங்கத்து | - | மலர்+அஞ்சு+ஆர்+புட்கத்து (24) |
| காவென்றா கண்டலேசன் | - | கா+என்று+ஆ+கண்டலேசன் (36) |
| சீறுதத்துகளும் | - | சீறு+உதத்து+உகளும் (37) |
| புகலரியதாந்த்ரி சங்கத்தமிழ் | - | புகல+அரியதாம்+திரி+சங்கத் தமிழ் (69) |
| தாவெனம்புய | - | தா+என+அம்புய(80) |
| பாவை | - | பாவு+ஐ (83) |
| பரிதகழையாமுன் | - | பரிவு+தக+அழையாமுன் (147) |
| களபப்பொட்டு தலிட்டத் திக்குடவான | - | களப+அப்பு+ஒட்டுதல்+இட்ட அத்திக்+குடவான (154) |
| மெத்தத்துக்கத்தைத் தித்தி யினிச் சித்தத்திற் பத்தத் தொரு | - | மெத்தை+துக்கத்தை+தித்தியினி+ சித்தித்தில்+பத்தத் தொரு (155) |
| மயில் தகர்கலிடையர் | - | மயில்+தகர்+கல்+இடையர் (51) |
| வீதமயமென மகிழ்ந்து | - | வீ+தம்+மயமென+மகிழ்ந்து (205) |

இப்படிப் பல்வேறு வகையான கடினச் சொற்களைப் பிரித்துக் காட்டி எளிமை செய்துள்ளார் உரையாசிரியர்.

*****

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம் - 100 | 50.00 |
| நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| Agreement in Dravidian Languages | 100.00 |
| நாடகவியல் | 70.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்க பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| பெரியாரின் பண்பாட்டுப்புரட்சி | 25.00 |
| வ. உ. சி. வளர்த்த தமிழ் | 20.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| கருவூரார் பல திரட்டு | 70.00 |
| தமிழ் மொழியின் வரலாறு | 30.00 |
| பாரதி இந்தியா | 40.00 |
| தமிழில் மருத்துவ இதழ்கள் | 50.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |

Pub.No.494 **தனிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை** **50.00**